# THE MADRAS LEGISLATIVE ASSEMBLY.

**Friday, 27th April 1962.**

---

The House met in the Assembly Chamber, Fort St. George, at half past eight of the clock, Mr. Speaker (THE HON. SRI S. CHELLAPANDIAN) in the Chair.

## I.—QUESTIONS AND ANSWERS.

## STARRED QUESTIONS.

### *Agricultural College (Coimbatore)*

* 13 *Q*.—SRI M. KALYANASUNDARAM : Will the Hon. the Minister for Agriculture be pleased to state—

(*a*) whether there is any proposal for developing the Agricultural College at Coimbatore into a University ; and

(*b*) if so, the details thereof?

THE HON. SRI P. KAKKAN : (*a*) & (*b*) Yes. The proposal is under consideration.

**SRI M. KALYANASUNDARAM :** *சர்க்கார் ஆலோசித்திருக்கக் கூடிய திட்டத்தின் விவரம் என்ன என்று கூற முடியுமா ?*

**THE HON. SRI P. KAKKAN :** *கமிட்டி நான்கு தரம் கூடி பரிசீலனை செய்தது. பெரும்பகுதி செலவு கொடுக்கவேண்டுமென்று மத்திய சர்க்காரைக் கேட்டிருந்தோம். ஆனால் அவர்கள் 25 லட்சம் தான் கொடுக்கமுடியும் என்று சொன்னார்கள். மீதியை மாகாண சர்க்கார் போடவேண்டுமென்று சொன்னார்கள். மீண்டும் பரிசீலனை செய்யப்படவேண்டுமென்று மத்திய சர்க்காருக்கு எழுதினோம். மத்திய சர்க்காரிடமிருந்து வந்த தகவலை டைரக்டர் ஆப் அக்ரிகல்சர் அவர்கள் பரிசீலனைக்கு அனுப்பி இருக்கிறோம். அவர்களுடைய ரிப்போர்ட்டு வந்ததும் ஒரு முடிவு எடுக்கப்படும்.*

**SRI M. KALYANASUNDARAM :** *இது சம்பந்தமாக ஜூன் மாதத்திற்கு முன்னதாக ஒரு முடிவு எடுக்கமுடியுமா ?*

**THE HON. SRI P. KAKKAN :** *எப்படி இப்போது சொல்ல முடியும் ? அக்ரிகல்சரல் டைரக்டர் பரிசீலனை செய்து ரிபோர்ட் அனுப்பிய பிறகுதான் சொல்லமுடியும்.*

SRI C. CHIRANJEEVULU NAIDU : In view of the Panchayat Unions Act and also the recruitment of agricultural graduates as Extension Officers and Panchayat Union Commissioners, will the Government feel the desirability of having a subject on local administration included in the syllabus at the Agricultural College, Coimbatore?

THE HON. SRI P. KAKKAN : The question is about agricultural university and not about the agricultural college.

[27th April 1962

SRI M. KALYANASUNDARAM: இப்போது விவசாயக் கல்லூரியை பல்கலைக் கழகமாக ஏற்படுத்தினால் என்னென்ன அனுகூலங்கள் ஏற்படுமென்று அரசாங்கம் எதிர்பார்க்கிறது?

THE HON. SRI P. KAKKAN: அப்படிச் செய்வதினால் அனுகூலங்கள் இருக்கின்றன. யூனிவர்சிடியாக மாற்றவேண்டுமானால் அதற்கு எவ்வளவு செலவாகும் என்பது பின்னால் தெரியும்.

*Cement factory*

* 14 Q.—SRI S. MADHAVAN: Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) whether there was any proposal to establish a cement factory in East Ramanathapuram;

(*b*) if so, when;

(*c*) the total amount to be invested in it; and

(*d*) the number of persons to be employed in it?

THE HON. SRI R. VENKATARAMAN: (*a*) & (*b*) An application has been made to the Government of India for the grant of a licence for the establishment of a cement factory in East Ramanathapuram district, in the private sector.

(*c*) & (*d*) As the industry is proposed to be established in the private sector, it is not possible to disclose further details.

SRI S. MADHAVAN: எந்த இடத்தில் வைக்கப்படும் என்று சொல்ல முடியுமா?

THE HON. SRI R. VENKATARAMAN: இதுகூட இப்போது சொல்ல முடியாது.

SRI M. KALYANASUNDARAM: சிமெண்டு பற்றாக்குறை மிக அதிகமாக இருப்பதன் காரணத்தினால் திருச்சி ஜில்லாவிலும், சேலம் ஜில்லாவிலும் தொழிற்சாலைகள் ஆரம்பிக்கும் உத்தேசம் எந்த நிலையில் இருக்கிறது?

THE HON. SRI R. VENKATARAMAN: சேலம் ஜில்லாவிலே சங்கரிதுர்க்கிலே ஒரு சிமெண்ட் தொழிற்சாலை ஏற்படுத்த லைசன்ஸ் வழங்கியாகிவிட்டது. கரூர் திண்டுக்கல்லில் ஒரு பெரிய அளவில் சுண்ணாம்புக் கல் கிடைப்பதுபற்றி ஆராய்ச்சி செய்யப்பட்டது. இப்போது கிடைத்த தகவல்படி அங்கு 5 லட்சம் டன் உற்பத்தி செய்யக்கூடிய ஒரு தொழிற்சாலைக்கு சாங்க்ஷன் கொடுக்கப் பட்டது.

SRI T. L. SASIVARNA THEVAR: கிழக்கு ராமநாதபுரத்தில் இருக்கும் தொழிற்சாலையை மண்டபத்திற்கு மாற்றுவதாக பிரஸ்தாபிக்கப்படுகிறது. இது உண்மையா?

THE HON. SRI R. VENKATARAMAN: இந்த இடத்தில் தொழிற்சாலை தனியார் துறையில் வைக்கப்படுவது. எந்த இடத்தில் வைத்தால் லாபகரமாகவும் வெற்றிகரமாகவும் இருக்குமென்று நினைக்கிறார்களோ அந்த இடத்தில் அவர்கள் வைப்பார்கள்.

27th April 1962]

SRI A. P. DHARMALINGAM : திருச்சி மாவட்டத்தில் சிமெண்ட் உற்பத்திக்கு தேவையான அளவு ஜிப்சம் மற்றும் மூலப் பொருள்கள் அதிகமாக கிடைப்பதால் அங்கிருந்து மற்ற மாவட்டங்களுக்கு கொண்டு செல்லப்படுகிறது. ஆகையால் திருச்சி மாவட்டத்தில் கிடைக்கும் ஜிப்சத்தைக் கொண்டு சிமெண்ட் தொழிற்சாலை ஏற்படுத்த அரசாங்கம் முயற்சி எடுக்குமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : சிமண்ட் உற்பத்தி செய்வதற்கு மிகவும் முக்கியமான மூலப்பொருள் சுண்ணும்புக்கல். ஜிப்சம் மிகவும் சொர்ப்பமான அளவில் செலவிடப்படுகிறது. அதனுல் இதைக்கொண்டு சிமெண்ட் தொழிற்சாலை ஏற்படுத்த முடியாது. சுண்ணும்புக்கல்தான் அதிக அளவில் தேவை.

SRI A. ARUMUGAM : வட ஆற்காடு மாவட்டத்திலும் ஒரு சிமெண்ட் தொழிற்சாலை ஏற்படுத்த சர்க்கார் முன்வருமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : கனம் அங்கத்தினர் அவர்கள் ஒரு சிமெண்ட் தொழிற்சாலை வைப்பதற்கு என்னென்ன மூலப்பொருள்கள் கிடைக்கும், எங்கே கிடைக்கும் என்பதைத் தெரிந்து சொன்னுல் சர்க்கார் அவருக்கு நன்றி செலுத்தும்.

*Handloom industry (Financial Corporation)*

* 15 *Q.*—SRI V. S. S. MANI : Will the Hon. the Minister for Industries be pleased to state whether the State Government has any proposal to form a finance corporation to help the handloom industry ?

THE HON. SRI R. VENKATARAMAN : Yes, Sir.

SRI V. S. S. MANI : On 30th September 1961 the Hon. Sri R. Venkataraman inaugurated a meeting to form a Handloom Finance Corporation sponsored by the Director of Handlooms, Madras. Is it a fact that Central Government did not take interest in the matter and had neglected South in this regard?

THE HON. SRI R. VENKATARAMAN : கனம் சபாநாயகர் அவர்களே, இந்த ஹாண்ட்லூம் பைனன்ஸ் கார்பொரேஷன் ஏற்படுத்தவேண்டுமென்று ராஜ்ய சர்க்காருடைய யோசனை. இதில் சற்றேரக்குறைய மொத்தம் 40 லட்சம் ரூபாய் மூலதனம் போடவேண்டும். இதில் சர்க்கார் 10 லட்சம் மூலதனம் போடுகிறுர்கள். மற்றவை இந்தத் தொழிலிலே ஈடுபட்டுள்ளவர்கள் செலுத்த வேண்டும். இந்த பைனன்ஸ் கார்ப்பொரேஷன் ஏற்படுத்துவதற்கான பூர்வாங்க நடவடிக்கை எடுத்தாகிவிட்டது. ஆனுல் இதில் ஒரு புதிய சட்ட பிரச்னை தோன்றியது. இது டிரேடிங் கார்ப்பொரேஷனுக இருக்கவேண்டுமா அல்லது பாங்கிங் கார்பொரேஷனுக இருக்கவேண்டுமா என்பதுதான். இந்த இரண்டு விஷயங்களும் பரிசீலனையில் இருக்கிறது. இதனுல்தான் காலதாமதம் ஏற்படுகிறது.

[27th April 1962

*Government Arts College (Ooty)*

*16 Q.—SRI J. MATHA GOWDER : கனம் நிதி அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) உதகை, சர்க்கார் கலைக் கல்லூரிக்கு கட்டிட வசதி குறைவாக இருப்பது அமைச்சருக்குத் தெரியுமா ?

(இ) அப்படியானால், அதை நிவர்த்தி செய்ய என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (அ) Yes, Sir.

(இ) Proposals for the construction of permanent buildings are under consideration.

SRI J. MATHA GOWDER : உதகை கல்லூரியில் போதுமான இட வசதி இல்லாத காரணத்தினல் விஞ்ஞான பாடம் சொல்லிக்கொடுக்க கட்டிட வசதி இல்லாததினல் மாணவர்கள் இந்த ஜில்லாவில் கல்லூரி இருந்தும்கூட அங்கு இடம் கிடைக்காத நிலையில் வேறு ஜில்லாக்களுக்கு வரக்கூடிய நிலைமை ஏற்பட்டிருப்பதால் அரசாங்கம் உடனடியாக கட்டிட வசதி செய்து கொடுக்க முடியுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : கட்டிடம் இல்லாத காரணத்தினல் மட்டும் நீலகிரியிலுள்ள மாணவர்கள் வெளி மாகாணத்திற்கு போகிறுர்கள் என்பதை நான் ஒப்புக்கொள்வதற்கில்லை. பிற்போக்கான நிலையிலுள்ள படகர் சமூகத்தினர்கூட நீலகிரியில் கல்லூரி இருந்தாலும் அதில் சேராமல் சென்னைக்கு பல வசதிகள் இருக்கின்றன என்றெல்லாம் நினைத்துக்கொண்டு சென்னைக்கு வந்து குவிகிறுர்கள். இருந்தாலும் கட்டிடத்தின் அவசியத்தை அரசாங்கம் உணர்ந்துதான் கட்டிடத்திற்கான மதிப்பீட்டை கொடுக்கும்படி மராமத்து இலாகாவைக் கேட்டிருக்கிறது. இதற்கு 50 லட்சம் ரூபாய் ஆகுமென்று தெரிகிறது. கட்டிடங்கள் கட்டுவதில் இரண்டு பகுதியாக எடுத்துக்கொள்ளலாம். கனம் அங்கத்தினர் கூறியதுபோல் லேபரட்டரிக்கான கட்டிடங்கள் கட்டுவதற்கு மூன்று லட்சம் ரூபாய் ஆகும். இந்த ஆண்டிலேயே எடுத்துக்கொள்ளவேண்டும் என்பதுதான் உத்தேசம். இதற்கான எஸ்டிமேட் மராமத்து இலாகாவிலிருந்து வந்த பிறகு வேண்டிய நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ளப்படும்.

SRI T. KARCHA GOWDER : ஸார், நமது சென்னை பல்கலைக்கழக உப அத்யக்ஷகர் நீலகிரி கல்லூரியைப் பற்றிக் குறிப்பிடும்போது

"The solitary college started in the public sector is located in the Nilgiris at a place most unsuited for the purpose while the other colleges, all in the private sector, had sprung up in remote areas capable of promoting health, enlightenment and cultural progress,"

என்று கூறியிருப்பதால் அரசாங்கம் அவர்களுடைய அபிப்பிராயத்தின் பேரில்தான் கட்டிடங்களை விஸ்தரிக்கப் பயப்படுகிறதா என்று அறிய விரும்புகிறேன்.

27th April 1962]

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இந்தக் கல்லூரி நீலகிரியில் எவ்வாறு அமைக்கப்பட்டது என்பது அங்கத்தின ருக்குத் தெரிந்திருக்கும் என்று நினைக்கிறேன். அந்த மாவட்டக் காரர்கள் தங்கள் மாவட்டத்தில் இந்தக் கல்லூரியை துவங்க வேண்டும் என்றும், அதற்கு வேண்டிய நிதியை வசூலித்துத் தருவதாகவும் சொல்லி, வசூலிக்கவும் செய்தார்கள். நிதியை வசூலிக்கும் வரை காத்திராமல், கல்லூரியை அமைக்கவேண்டும் என்று கேட்டார்கள். இருக்கும் கட்டிடத்தில் கல்லூரி ஆரம் பிக்கப்பட்டது. ஆனல், அதற்குப் பிறகு அவர்கள் வசூலிப்பதை நிறுத்தி விட்டார்கள். அது பூராவும் இப்பொழுது சர்க்காரின் பொறுப்பாக இருக்கிறது, இப்பொழுது வேண்டிய கட்டிடங்கள் கட்ட ஏற்பாடு செய்யப்பட்டுவருகிறது.

*Water-supply scheme (Coimbatore)*

* 17 *Q*.—SRI M. KALYANASUNDARAM : Will the Hon. the Minister for Health be pleased to state—

(*a*) the steps taken for obtaining the concurrence of the Kerala Government for expanding the Coimbatore Water-supply Scheme from the Siruvani river; and

(*b*) the present stage of the negotiations with Kerala?

THE HON. SRIMATHI JOTHI VENCATACHELLUM : (*a*) & (*b*) The matter is under correspondence with the Government of Kerala.

SRI M. KALYANASUNDARAM : ஸார், கோயம்புத்தூர் நகரத்திற்கு குடிதண்ணீர் வேண்டுமென்ற பிரச்னை 5, 6 வருஷ காலமாக அரசாங்கத்தின்முன் இருந்துவருகிறது. அதற்கு எப்பொழுதுதான் ஒரு முடிவு காண முடியும்?

THE HON. SRIMATHI JOTHI VENCATACHELLUM : கடைசி யாக 1961-ம் ஆண்டு ஜூன் மாதம் 17-ம் தேதி நம் மாநில முதல் அமைச்சர், கேரள முதல் அமைச்சருக்குக் கடிதம் எழுதியிருக் கிறார்கள். கூடிய சீக்கிரம் இதற்கு முடிவு காணமுடியும் என்று நினைக்கிறேன்.

*Forest in the Nilgiris (afforestation)*

* 18 *Q*.—SRI J. MATHA GOWDER : கனம் கூட்டுறவு அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப் பாரா—

(அ) கடந்த இரண்டு ஐந்தாண்டுத் திட்டத்தின்கீழ் நீலகிரி யில் காட்டு இலாகாவினர் எத்தனை ஏக்கர் புது காடு வளர்த்தனர்?

(இ) சென்ற பத்து ஆண்டுகளில் சர்க்கார் எத்தனை எக்கர் பழைய காடுகளை அழித்தனர்?

(உ) அதற்குக் காரணம் என்ன?

THE HON. SRI N. NALLASENAPATHI SARKARAI MANRADIAR : (*a*) A total area of 19,330 acres has been afforested in the Nilgiris district from 1954–55 under the First and the Second Five-Year Plans.

[27th April 1962

(*b*) It is presumed that the member wants information about forest lands disreserved and diverted for other purposes. An extent of about 799 acres of forest areas has been allotted for purposes other than forestry in the Nilgiris district from 1953 to 1961.

(*c*) The allotment of forest lands was made for purposes like implementing the Moyar Scheme, setting up a Fruit Nursery by the Agriculture Department, assignment to the members of the Thengumarakada Co-operative Farming Society, etc.

**SRI J. MATHA GOWDER :** ஸார், பழைய காடுகளை விட்டு விட்டு, பக்கத்தில் கிராமம் இருக்கக்கூடிய பூமிகளில் காடு வளர்க்க காட்டிலாகாவினர் முயற்சி செய்கிறார்கள். அமைச்சர் அவர்கள் தயவுசெய்து, கிராம மக்களுக்குத் தொந்தரவு, இடைஞ்சல் இல்லாதவகையில், காடுவளர்ச்சி செய்ய நடவடிக்கைகள் எடுப்பார்களா ?

**THE HON. SRI N. NALLASENAPATHI SARKARAI MANRADIAR :** அந்த மாதிரி செய்துகொடுக்க அரசாங்கம் முன்வரும்.

**SRI T. KARCHA GOWDER :** காடுகள் வளர்ப்பு தீவிரமாக நடப்பதன் காரணமாக, மேய்ச்சல் நிலங்கள் குறைந்து, கால் நடைச்செல்வம் நீலகிரி மாவட்டத்தில் அழிந்து வருகிறது என்பது சர்க்காருக்குத் தெரியுமா ?

**THE HON. SRI N. NALLASENAPATHI SARKARAI MANRADIAR :** அவசியமான காரியங்களுக்குக் கொடுக்கத் தான் வேண்டியிருக்கிறது.

*Municipal elections*

* 19 *Q*.—SRI M. KALYANASUNDARAM : Will the Hon. the Minister for Municipal Administration be pleased to state—

(*a*) the programme for the municipal elections.

(*b*) whether there is any proposal to re-distribute the wards; and

(*c*) if so, the details thereof?

THE HON. SRI S. M. A. MAJID : (*a*) The programme has not yet been drawn up.

(*b*) No, Sir.

(*c*) Does not arise.

**SRI M. KALYANASUNDARAM :** பல நகராட்சி மன்றங்களின் காலம் இந்த வருஷத்தோடு முடிவடைகிறது. அதற்குள் தேர்தல் நடத்தப்படுமா அல்லது அதன் பதவிகாலம் நீடிக்கப்படுமா ?

**THE HON. SRI S. M. A. MAJID :** நீடிக்கப்படாது. குறிப்பிட்ட காலத்தில் தேர்தல் நடத்தும் பிரச்னை பரிசீலனையில் இருக்கிறது.

27th April 1962]

SRI M. KARUNANITHI : நகராட்சி மன்றங்களுக்கு கட்சி அடிப்படையில் போட்டியிடக்கூடாது என்ற கொள்கை வகுக்க உத்தேசம் உண்டா ?

THE HON. SRI S. M. A. MAJID : இல்லை என்று கூற விரும்புகிறேன்.

SRI P. K. MOOKIAH THEVAR : ஸார், நகர சபைகளின் காலமானது ஐந்து வருஷமாக இருப்பதை நீடிக்க முடியாது என்று சொன்னார்கள். இந்த நகரசபைகளில் எதிர்க்கட்சிகள் ஆட்சி நடத்துவதால்தான் நீடிக்கமுடியாது என்று சொல்கிறார்களா ?

THE HON. SRI S. M. A. MAJID : அப்படியில்லை.

SRI T. L. SASIVARNA THEVAR : மதுரை நகராட்சி மன்றத்தின் ஸ்தானங்களை அதிகப்படுத்த வேண்டுமென்று ஒரு கமிட்டி போட்டு அந்த வேலை பூர்த்தியாகாமல் இருப்பதால், அதற்கு மட்டுமாவது தேர்தல் நிறுத்தப்படுமா ?

THE HON. SRI S. M. A. MAJID : அது சம்மந்தமாக தனிக் கேள்வி அங்கத்தினர் கேட்கலாம் என்று நினைக்கிறேன்.

SRI A. SWAMI DHAS : பழைய வார்டுகள் முறையிலா, அல்லது புதிய வார்டுகள் பிரிவு செய்தா தேர்தல் நடத்தப்படும்?

THE HON. SRI S. M. A. MAJID : என் முதல் பதிலிலேயே அங்கத்தினர் கேள்விக்குப் பதில் இருக்கிறது.

MR. SPEAKER : Questions are over.



[*Note.*—**An asterisk (*) at the commencement of a speech indicates revision by the Member.**]

## II.—ANNOUNCEMENT.

### ELECTION TO THE STATE LIBRARY COMMITTEE.

MR. SPEAKER : I have to announce to the House that Kumari D. Sulochana, M.L.A., is the only candidate validly nominated for election to the State Library Committee. I hereby declare her duly elected.

## III.—GOVERNMENT BILLS.

### (1) THE MADRAS IRUVARAM INAM ESTATES (ABOLITION AND CONVERSION INTO RYOTWARI) BILL, 1962.

THE HON. SRI R. VENKATARAMAN : Sir, I beg leave to introduce the Madras Iruwaram Inam Estates (Abolition and Conversion into Ryotwari) Bill, 1962.

MR. SPEAKER : The question is—

'That leave be granted for the introduction of the Madras Iruwaram Inam Estates (Abolition and Conversion into Ryotwari) Bill, 1962.'

The motion was put and carried and leave was granted.

THE HON. SRI R. VENKATARAMAN : Sir, I introduce the Bill.

MR. SPEAKER : The Bill is introduced.

(2) THE MADRAS MINOR INAMS (ABOLITION AND CONVERSION INTO RYOTWARI) BILL, 1962.

THE HON. SRI R. VENKATARAMAN : Sir, I beg leave to introduce the Madras Minor Inams (Abolition and Conversion into Ryotwari) Bill, 1962.

MR. SPEAKER : The question is—

'That leave be granted for the introduction of the Madras Minor Inams (Abolition and Conversion into Ryotwari) Bill, 1962.'

The motion was put and carried and leave was granted.

THE HON. SRI R. VENKATARAMAN : Sir, I introduce the Bill.

MR. SPEAKER : The Bill is introduced.

(3) THE MADRAS LEASE-HOLDS (ABOLITION AND CONVERSION INTO RYOTWARI) BILL, 1962.

THE HON. SRI R. VENKATARAMAN : Sir, I beg leave to introduce the Madras Lease-holds (Abolition and Conversion into Ryotwari) Bill, 1962.

MR. SPEAKER : The question is—

'That leave be granted for the introduction of the Madras Lease-holds (Abolition and Conversion into Ryotwari) Bill, 1962.'

The motion was put and carried and leave was granted.

THE HON. SRI R. VENKATARAMAN : Sir, I introduce the Bill.

MR. SPEAKER : The Bill is introduced.

(4) THE MADRAS BUILDINGS (LEASE AND RENT CONTROL) AMENDMENT BILL, 1962.

THE HON. SRIMATHI JOTHI VENCATACHELLUM : Sir, I move that leave be granted for the introduction of the Madras Buildings (Lease and Rent Control) Amendment Bill, 1962.

27th April 1962]

MR. SPEAKER : The question is—

'That leave be granted for the introduction of the Madras Buildings (Lease and Rent Control) Amendment Bill, 1962.'

The motion was put and carried and leave was granted.

THE HON. SRIMATHI JOTHI VENCATACHELLUM : Sir, I introduce the Bill.

MR. SPEAKER : The Bill is introduced.

## IV.—GOVERNMENT RESOLUTION.

### GOVERNMENT GUARANTEE FOR THE DEBENTURES ISSUED BY THE MADRAS CO-OPERATIVE CENTRAL LAND MORTGAGE BANK.

THE HON. SRI N. NALLASENAPATHI SARKARAI MANRADIAR : ஸார், என் பெயரில் உள்ள தீர்மானத்தை நான் பிரேரேபிக்கிறேன்—

'இந்தச் சட்டசபை மாநில அரசினருக்குச் சிபாரிசு செய்வது என்னவெனில், சென்னைக் கூட்டுறவு மத்திய நில அடமான பாங்க் லிமிடெட் வெளியிடுகிற ஈட்டுப் பத்திரங்கள் சம்மந்தமாக மாநில அரசினர் கொடுக்கக்கூடிய உயர்ந்த அளவு உத்தரவாதத் தொகையை 1934-ம் ஆண்டு சென்னைக் கூட்டுறவு நில அடமான பாங்க் சட்டத்தின் 6-வது பிரிவைச் சேர்ந்த (2) உட்பிரிவின்கீழ் மாநில அரசினர் மொத்தத்தில் ரூ. 20 கோடி வரையில் (ரூபாய் 20 கோடி மட்டும்) உயர்த்தலாம். பாங்க் அவ்வப்போது மீட்கிற ஈட்டுப் பத்திரங்கள் இதில் அடங்கமாட்டா. இந்த ஈட்டுப் பத்திரங்கள் வெளியாகும் தேதியிலிருந்து 25 ஆண்டுகளுக்கு மேற்படாத கால அளவுகளுக்கு வெளியிடப் பெறுகின்றன. இவற்றிற்குக் கிடைக்கும் வட்டிவீதம் ஆண்டு ஒன்றுக்கு 5 சதவீதத்திற்கு மேற்படக்கூடாது.'

தமிழ் நாட்டு நில அடமான பாங்கு 6-வது பிரிவுப்படி சர்க்கார் சட்டசபையின் ஆலோசனையின் பேரில் பாங்கிற்கு உத்தரவாதம் அளிக்கலாம். தற்பொழுது பத்து கோடி ரூபாய்க்கு உத்தரவாதம் உள்ளது. இது மூன்றாவது ஐந்தாண்டு திட்ட காலத்திற்கு போதாது. ஏனென்றால் தற்பொழுது 1960-61-ல் நில அடமான பாங்கு ரூ. 1.756 கோடி கடன் அளித்திருக்கிறது. இந்த மூன்றாவது ஐந்தாண்டு திட்ட இறுதியில் மூன்று கோடி வரை அது அதிகரிப்பதற்கு குறிக்கோள் வகுத்திருக்கிறோம். இந்த மூன்று கோடி தொகை பணம் கடன் வழங்க பாங்கு 1,904 லட்சம் ரூபாய் வரை டிபெஞ்சர் மூலமாக எழுப்பியாகவேண்டும். இந்த அளவு டிபெஞ்சர் பெருக்கத்திற்கு சர்க்கார் உத்தரவாதம் ரூ. 2,000 லட்சத்திற்கு தேவை. மூன்றாவது ஐந்தாண்டு திட்டத்திற்கு இந்த ஐந்து ஆண்டுகளில் நில அடமான பாங்கு எழுப்ப வேண்டிய டிபெஞ்சர் தொகை 1,220 லட்சம். இந்தக் காலத்திற்குள் மீட்கப்படும் டிபெஞ்சர் தொகை 57 லட்சம். ஆகவே மீதம் மீட்கப்பட வேண்டிய தொகை 1,163 லட்சம். ஏற்கெனவே நிலவிக்

கொண்டிருக்கும் டிபெஞ்சர் தொகை 741 லட்சம். ஆக மொத்தம் 1,904 லட்சம். இந்த மொத்த டிபெஞ்சர் தொகைக்கு சர்க்கார் உத்தரவாதம் ரூ. 2,000 லட்சம் அல்லது 20 கோடி தேவையாகிறது. பொதுவாக நில அடமான பாங்கு ஒரு கண்ணியமான பலமான ஸ்திரமான ஸ்தாபனம். டிபெஞ்சர் தொகைக்கு ஏற்ற நில அடமானங்கள் அடைந்திருக்கிறது. டிபெஞ்சர் மீட்டுவதற்கென்று ஒரு பண்டு ஏற்படுத்தி அதில் ஒவ்வொரு டிபெஞ்சருக்கும் ஏற்ப பணம் ஒதுக்கி வைக்கப்பட்டிருக்கிறது.

சர்க்கார் உத்தரவாதம் பின் எதற்கு என்ருல் மக்கள் இந்த பாங்கியில் தைர்யமாகவும் தயங்காமலும் பணம் போட இது உதவு கிறது. இந்த உத்தரவாதமில்லா விட்டால் பாங்கிற்கு அதிக வட்டியில் வெளி இடங்களில் பணம் வாங்கவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படும். அதனுல் விவசாய உற்பத்திக்குத் தேவையான நீண்ட கால கடனுக்கு வட்டி அதிகரிக்கும். அதை தவிர்ப்பதற்கு சர்க்கார் உத்தரவாதம் பயன்படுகிறது. ஆகவே இந்த விவரங் களை உங்களுக்கு நான் எடுத்துச் சொல்ல விரும்புகிறேன். ஆகவே இந்தச் சபை இந்தத் தீர்மானத்தை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

SRI M. KALYANASUNDARAM : Sir, I move the following amendment—

*For* the words and figures " bearing interest at a rate not exceeding 5 per cent per annum " *substitute* the following :—

" bearing interest at a rate not exceeding $3\frac{1}{2}$ per cent in the case of debentures held by R.B.I. and L.I.C. and $6\frac{1}{4}$ per cent in the case of debentures held by agriculturists and others ".'

SRI T. L. SASIVARNA THEVAR : Sir, I second the amendment.

MR. SPEAKER : The resolution and the amendment are before the House for discussion.

**SRI M. KALYANASUNDARAM :** கனம் சபாநாயகர் அவர் களே, முதலாவதாக கனம் அமைச்சர் அவர்கள்தான் இந்த புதிய பொறுப்பை ஏற்ற பிறகு முதன் முதலாக இந்த தீர்மானத்தை பிரேரேபிக்கும்போது தமிழில் பிரேரேபித்தமைக்கும் அதை பிரேரேபிக்கும்போது தமிழிலேயே பேசியதற்கும் நான் அவரை பாராட்டுகிறேன். அதற்கு நான் ஒரு திருத்தம் ஆங்கிலத்திலேயே கொடுத்திருக்கிறேன். தீர்மானம் ஆங்கிலத்தில் இருந்ததால் திருத்தத்தையும் நான் ஆங்கிலத்திலேயே கொடுத்திருக்கிறேன். ஆனுல் அந்தத் திருத்தம் கொடுப்பதை வாசித்து விட்டு சிலர் தப்பாக புரிந்துகொள்ளுவார்களோ என்று தோன்றுகிறது. என்னுடைய திருத்தத்தை வாசித்து விட்டு தப்பாக அர்த்தம் செய்து கொள்ளக் கூடாது என்று கேட்டுக்கொள்ளுகிறேன். மூன்ருவது திட்ட காலத்திய செலவை ஈடு செய்துகொள்வதற்கு வட்டி குறைவாக ரிசர்வ் பாங்கிலிருந்தோ அல்லது லைப்

27th April 1962] [Sri M. Kalyanasundaram]

இன்ஷூரென்ஸ் கார்ப்பரேஷனிலிருந்தோ பணம் வாங்குவதற்கு உத்தரவாதம் கொடுக்கக்கூடாது என்று தப்பு அர்த்தம் செய்து கொள்ளக்கூடாது. ரிசர்வ் பாங்கியிலிருந்து ஈடுபடுத்தக்கூடிய தொகைக்கு இப்பொழுது 4½ அல்லது 4¾ சத விகிதம் வட்டி கோரப்படுகிறது. அதைக் குறைக்க வேண்டும் என்றுதான் திருத்தம் கொடுத்திருக்கிறேனேயொழிய அரசாங்கம் உத்தர வாதம் கொடுக்கக்கூடாது என்பதற்காக அல்ல என்பதை முதலில் நான் தெரிவித்துக்கொள்ளுகிறேன். நில அடமான பாங்குகள் நம்முடைய ராஜ்யத்தில் ஆற்றக்கூடிய பணியை நாம் பாராட்ட வேண்டும். குறைவான வட்டிக்கு கடன் கொடுத்து உதவுவதற்குத் தான் ரிசர்வ் பாங்கு பணம் கொடுத்து உதவி வருகிறது. அப்படி உதவுவதுதான் அரசாங்கத்தினுடைய கடமையும் ரிசர்வு பாங்கியினுடைய கடமையுமாகும் என்பதைச் சுட்டிக் காட்ட விரும்புகிறேன். இப்பொழுது இருபது சத விகிதத்திற்குக் கொடுத்து அதை ரிசர்வ் பாங்கு எடுத்துக்கொள்ளுகிறார்கள். அதை இன்னும் அதிகப்படுத்தினால் நலமாக இருக்கும் என்பது என்னுடைய அபிப்பிராயம். இந்த பாங்குகளுக்கு நல்ல வேலை கொடுக்க வேண்டும் என்பதற்காக அல்ல. இந்த பாங்குகள் நல்ல வேலை செய்து கொண்டு வருகிறது. இந்த பாங்குகளால் நல்ல உருப்படியான வேலைகள் நடந்து கொண்டு வருகின்றன. விவசாயி களுக்குக் கடன் கொடுப்பது மட்டுமல்ல, நிலத்தை அபிவிருத்தி செய்வதற்கும் உணவு உற்பத்தியைப் பெருக்குவதற்கு உதவி செய்து வருகிறார்கள். நிலத்தை அபிவிருத்தி செய்வதற்கும் கடன் கொடுத்து உதவி வருகிறார்கள். அவர்கள் உதவி வரக்கூடியது இன்னும் அதிகமாகவே படிப்படியாக உயர்ந்துகொண்டே தான் வருகிறது. இப்படி பல வகைகளில் உதவி வருவதால் அவர் களுக்கு அதிகப்படியான பணம் தேவையாக இருக்கிறது. ரிசர்வ் பாங்கு இப்படி உதவி வரும்போது அவர்களுக்கு 4 சத விகித வட்டிக்கும் குறையாமல் கொடுக்க வேண்டும். அதற்கு அவர் களுக்கு அதிகப்படியாக பணம் கொடுத்து உதவ வேண்டியது அவசியமாக இருக்கிறது. அவர்கள் 4 அல்லது 4½ சத விகிதத் திற்கு பணம் வாங்கி 6, 6½ சத விகிதத்திற்குக் கொடுக்கிறார்கள். அதையும் இப்பொழுது 7 சத விகிதத்திற்கு உயர்த்தப்போகிறதாக தெரிய வருகிறது. வசூலிக்கப்படுகிற வட்டியை குறைக்க வேண்டும் என்று ஏற்கனவே பல ஸ்தாபனங்கள் கூறியிருக் கின்றன. அதைப்பற்றி நமது எஸ்டிமேட் கமிட்டிகூட தன்னு டைய அறிக்கையில் சிபாரிசு செய்திருக்கின்றன. ஆகவே இப்பொழுதுள்ள வட்டி விகிதத்தையே குறைக்க வேண்டும் என்று அரசாங்கத்திற்கு நான் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். ஆகவே ரிசர்வ் பாங்கு கொடுக்கக்கூடிய வட்டியைக் குறைக்க வேண்டும். இப்படிச் சொல்லுகிற நேரத்தில் தனி நபர் கொடுக்கிற வட்டியைக் குறைக்க வேண்டும் என்று சொல்லுகிறார்கள். சில கிராமங்களில் அதிகப் பணம் படைத்தவர்கள் இருக்கலாம். அவர்கள் பாங்குகளில் பணத்தைப் போடுவதாக இருந்தால் அவர் களுக்கு அதிகப்படியான வட்டி கிடைத்தால் தான் போடுவார்கள். அவர்களுக்கு 4½ சத விகிதம் வட்டி கொடுத்தால் அவர்கள்

பாங்குகளில் போட மாட்டார்கள். கிராமங்களில் பணம் தேவையாக இருக்கக்கூடியவர்களுக்கு அதிக வட்டிக்குத்தான் கொடுக்க முன் வருவார்கள். ஆகவே அப்படிப்பட்டவர்கள் தங்களுடைய பணத்தை பாங்குகளில் போடுவதற்கு வசதி ஏற்படக்கூடிய வகையில் பாங்குகள் அதிகப்படியான வட்டி கொடுக்கும்படியாக இருந்தால் அவர்கள் பாங்குகளில் தங்களுடைய பணத்தைப் போடுவார்கள். நமக்கு இப்பொழுது நன்ருகத் தெரியும் பத்திரங்களை வெளியிடும்போது அதற்கு பணம் வசூலிக்க எவ்வளவு கஷ்டம் இருக்கிறது என்பது. ஆகவே அவர்கள் எல்லோரும் பாங்குகளில் பணத்தைப் போடுவதற்கு வசதி செய்து கொடுக்க வேண்டியது அவசியமாக இருக்கிறது. உத்தரவாதம் இருக்கிறது, பணமும் பத்திரமாக இருக்கும், வட்டியும் கூடுதலாக
9-00 a.m. கக் கிடைக்கும் என்ருல் வசதி படைத்த—20 சத விகிதம் வட்டி சம்பாதிக்க வேண்டும் என்ற கெட்ட எண்ணம் உடையவர்கள் நீங்கலாக—நல்ல எண்ணம் படைத்தவர்கள் இதில் பணம் போட வசதி ஏற்படும் என்று நான் கருதுகிறேன். 6¼ சத விகிதம் என்று இருந்தாலும்கூட, தனிப்பட்ட விவசாயிகளிடத்திலிருந்தும் அதற்கு வசதி செய்து கொடுக்கவேண்டுமென்ற யோசனையை நான் கூறியிருக்கிறேன். அமைச்சர் அவர்கள் இதற்கு உடனே பதில் சொல்ல முடியும் என்று நானும் எதிர்பார்க்கவில்லை. நான் கொடுத்திருக்கும் வேண்டுகோளை அவர்கள் ஆலோசிக்கட்டும். மற்ற அதிகாரிகளையும், பாங்கு நிர்வாகஸ்தர்களையும் கலந்து ஆலோசித்து, அதன் பிறகு முடிவு எடுத்தால்கூட நான் திருப்தி அடைவேன் என்று கூறிக்கொள்கிறேன்.

அத்துடன், பாங்குக்கும் நான் சில யோசனைகளை அமைச்சர் மூலமாகக் கூற விரும்புகிறேன். பாங்கின் அறிக்கை இருக்கிறது.

MR. SPEAKER: How long does the hon. Member proposed to take?

SRI M. KALYANASUNDARAM: Three or four minutes.

MR. SPEAKER: I hope the hon. Member will finish at least within that time.

SRI M. KALYANASUNDARAM: போட்டா போட்டியாகக் கடன் வழங்குவது அதிகரித்து வருவதானது வரவேற்கத் தகுந்தது. நிலத்தை மதிப்பிடுவதிலும் இப்பொழுது கொஞ்சம் தாராளமாக இருப்பதாக அறிக்கையில் கூறப்பட்டிருக்கிறது. அது நடைமுறையில் வந்ததா என்று தெரியவில்லை. நிலச் சீர்திருத்தச் சட்டம் வெளியிட்டும்கூட, நிலத்தின் விலை உயர்ந்துகொண்டுதான் இருக்கிறது. இப்பொழுது நிலத்தின் மதிப்பு என்ன என்று பார்த்து கடன் வழங்குவதாக இருந்தால், சிறிய விவசாயிகளுக்கு உதவி செய்ய முடியும். இதற்கு முன்பு நில அடமான பாங்குகள் மூலம் பெரும் நிலச் சொந்தக்காரர்கள் தான் பலன் அடைந்திருக்கிருர்கள். குறைவாக நிலம் வைத்திருப்பவர்கள் அல்ல. இந்தப் புள்ளி விவரத்தைப் பார்த்தால் தெரியும். ஆயிரம் ரூபாய்க்குக்

கடன் வழங்கியிருக்கக்கூடிய நிலை மிகக் குறைவாக இருக்கிறது. ஐயாயிரம் ரூபாய்க்கு அதிகமாகக் கொடுத்திருக்கக்கூடியதுதான் ஒவ்வொரு வருஷமும் அதிகமாக இருக்கிறது. கடந்த ஆண்டு இருக்கக் கூடியதை எடுத்துப் பாருங்கள். முன் கொடுத்த ரூபாய் 198 லட்சம். இது மூன்று கோடியாக ஆகப் போவதாகச் சொல்கிறார்கள். அதை வரவேற்கிறேன். வசதி செய்து கொடுக்க வேண்டும் என்பதில் நான் ஆதரவு காட்டத் தயாராயிருக்கிறேன். ஆனால், 5,000-க்கு மேல் 10,000-க்கு உட்பட்டு கொடுக்கப்பட்ட கடன் தொகை கிட்டத்தட்ட 63 லட்ச ரூபாய். பத்தாயிரம் ரூபாய்க்கு அதிகமாகக் கொடுக்கப்பட்டிருக்கக்கூடிய கடன் தொகை 32 லட்ச ரூபாய். ஆயிரத்துக்கு குறைவாகக் கொடுக்கப் பட்டிருக்கக்கூடிய கடன் தொகை மிகக் குறைவாக இருக்கிறது. அதாவது, ஐந்து லட்ச ரூபாய்க்குக் குறைவாக இருக்கிறது. ஆயிரத்துக்குக் குறைவாகக் கடன் வாங்கக் கூடியவர்கள் சிறிய விவசாயிகளாக இருப்பார்கள். அவர்களுக்கு இன்னும் அதிக ஊக்கம் அளிக்கக்கூடிய முறையில் கடன் கொடுக்கும் முறைகளை விஸ்தரிக்க வேண்டும். நிலத்தை மதிப்பிடுகிற முறையிலும் மாறுதல் வேண்டும். அப்பொழுது தான் நில அடமான பாங்கு மூலம் ஏழை எளிய விவசாயிகள் பலன் அடைய முடியும். அட்மினிஸ்டிரேஷன் ரிப்போர்ட்டைப் பார்த்தால், பலன் அடைந்தவர்கள் நல்ல வசதி படைத்தவர்கள், தங்களிடமுள்ள நிலங்களில் இரண்டு ஏக்கர் நிலத்தை விற்று விட்டாவது அந்தத் தொகையைக் கொண்டு பாக்கி நிலத்தை அபிவிருத்தி செய்யக் கூடிய சக்தி உடையவர்கள் கூட இதில் பலன் அடைந்திருக்கிறார்கள் என்பதை நான் அமைச்சர் அவர்களுடைய கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன். பத்தாயிரத்துக்கும் அதிகமாகக் கடன் கொடுக்க வேண்டாம் என்று சொன்னால்கூட தவறாக இருக்காது என்பது என்னுடைய அபிப்பிராயம். இந்த யோசனையை பாங்குக்குக் கூறி நல்ல முறையில் அதை அமுல் நடத்தவும், இன்னும் விஸ்தரிப்பதற்கும் வழி காணவேண்டும். கடன் கொடுப்பதில் காலதாமதம் அதிகமாகிறது. அதை ஓரளவு குறைக்க வேண்டும் என்பது என்னுடைய அபிப்பிராயம். அரசாங்கம் கொடுக்கக்கூடிய தக்காவிக் கடன்களை சாத்தியமான அளவு நில அடமான பாங்கு மூலம் கொடுக்க நடவடிக்கை எடுப்பார்களானால், ரெவினியூ இலாகாவுக்கும் கொஞ்சம் தொந்தரவு குறையும், விவசாயிகளுக்கும் சில சங்கடங்கள் குறையும் என்ற அபிப்பிராயத்தைக் தெரிவித்து என்னுடைய உரையை முடிக்கிறேன்.

Mr. SPEAKER : I now call upon the hon. Member Sri N. S. Ramalingam to speak and I request him not to take more than five minutes.

Sri N. S. RAMALINGAM : கனம் சபாநாயகர் அவர்களே, புதிதாகக் கூட்டுறவுப் பொறுப்பை ஏற்றுக்கொண்டிருக்கிற கனம் அமைச்சர் அவர்கள் கொண்டுவந்திருக்கும் தீர்மானத்தை நான் ஆதரித்துச் சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். நண்பர்

[N. S. Ramalingam] [27th April 1962

திரு. கல்யாணசுந்தரம் அவர்கள் சொன்னதுபோல், அவர்கள் பொறுப்பேற்றதற்குப் பிறகு இந்த நல்ல காரியத்தைச் செய்த தற்காக எனது பாராட்டுதலைத் தெரிவித்துக் கொள்கிறேன். அவர்கள் எங்களில் ஒருவர். அவர் மந்திரியானதற்கு இரண்டு மாதங்களுக்கு முன்பு வரைகூட, அவர் எங்களோடு, 95 பிரதம நில அடமான பாங்குகளின் டைரக்டர்களில் ஒருவராக, ஈரோடு நில அடமான பாங்கின் தலைவராக இருந்து, இப்பொழுது மந்திரி ஆன பிறகுதான் அவர்கள் எங்களை விட்டு வந்திருக்கிறார். அவர் மந்திரியானதைக் குறித்துச் சந்தோஷம் அடைகிறோம். மந்திரிப் பொறுப்பு வகிக்கின்ற நேரத்தில், பிரதம நில அடமான பாங்கு களுக்கு வேண்டிய பல சௌகரியங்கள் ஏற்படும் என்று நாங்கள் நம்புகின்றோம்.

ஐந்தாண்டுத் திட்டங்களிலே கூட்டுறவு இயக்கம் முக்கிய பங்கு எடுத்து, அதை வெற்றிகரமாக நடத்த முயற்சி செய்து வருகிறது. இருந்தாலும், கவர்னர் பெருமான் அவர்கள் தம்முடைய உரையில் கூட்டுறவு இயக்கத்தைப்பற்றி ஒரு வார்த்தைகூடக் குறிப்பிடாம லிருப்பது கூட்டுறவாளர்களாகிய எங்களுக்கு மிகவும் வருத் தத்தை தருகின்றது. நமது தமிழகம் கூட்டுறவு இயக்கத்தில் முன்னணியில் நிற்கிறது. அதுவும், இப்பொழுது சொல்லப்படுகிற தமிழ்நாடு நில அடமான பாங்கு இந்தியாவில் மட்டுமல்ல, ஆசியாக் கண்டம் பூராவுக்குமே எடுத்துக்காட்டாக நல்ல முறை யில் இருந்து வந்திருக்கிறது. உலகத்தின் பல பாகங்களிலிருந்து சென்னை நில அடமான பாங்குக்கு வந்து அதன் நடைமுறையைத் தெரிந்துகொண்டு போகிறார்கள். அந்த பாங்குக்கு இம்மாதிரி உத்தரவாதம் கொடுப்பது மிகவும் அவசியமானது.

இந்த பாங்கு சென்ற முப்பத்திரண்டு ஆண்டுகளாக தமிழக மக்களுக்கு அரும்பாடு பட்டுக்கொண்டிருக்கிறது. அதற்குமுன் ஏதோ சில பிரதேசங்களில் சில குறிப்பிட்ட நில அடமான பாங்கு களே இருந்தன. அவைகளால் கடன் கொடுக்க வேண்டிய அளவுக்கு முதலீடு சேகரிக்க முடியவில்லை. முதலில் ஒரு சில பாங்குகள் இருந்தன. இப்பொழுது 95 நில அடமான பாங்கு களைக் கொண்டு மத்திய நில அடமான பாங்கு நடந்து கொண்டிருக்கிறது. இதுவரை 15 கோடி ரூபாய் ஈடு ஏற்படுத்தி, ஏறத்தாழ ஐந்து கோடி ரூபாய் திருப்பிக் கொடுக்கப்பட்டு, இன்னும் பத்து கோடி ரூபாய் இருக்கிறது. இம்மாதிரி நல்ல முறையில் செய்வதற்குக் காரணம், அரசாங்கம் உத்தரவாதம் கொடுத்ததன் பேரில் மக்கள் நம்பிக்கை வைத்து, இதிலே பணத்தை ஈடு செய்கிறார்கள். ஆனால், சமீப காலத்தில், காலம் மாறுதலாகிவிட்டது. இதற்கு முன்பெல்லாம், மத்திய நில அடமான பாங்கு ஒன்றுதான் அரசாங்க உத்தரவாதத்தோடு, ஈட்டுத் தொகையை எழுப்பி வந்தது. ஆனால், சமீப காலத்தில் பல கூட்டுறவு ஸ்தாபனங்கள் மட்டுமல்லாமல் மின்சார போர்டு, இன்டஸ்ட்ரியல் கார்ப்பரேஷன் போன்று பல ஸ்தாபனங்கள் இம் மாதிரியான ஈட்டுக் கடன் பத்திரங்கள் எழுப்பி வருகின்றன. இது மாதிரி மற்றவற்றுக்கும் அதிகமாகச் சலுகை கொடுப்பதால்,

27th April 1962]        [Sri N. S. Ramalingam]

நமக்கு தேவையான பணம் கிடைக்கவில்லை. ஆகையால், அரசாங்கம் அதற்கு ஆவன செய்து, அந்தச் சலுகையைப்பற்றிப் பரிசீலிக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

முக்கியமாக ஆயுள் இன்ஷ்யூரன்ஸைப் பற்றி ஒரு வார்த்தை கூற விரும்புகிறேன். ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பரேஷனில் அநேகமாக பங்கெடுத்துக் கொள்பவர்கள் விவசாயிகள். ஆனால், ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பரேஷன் மத்திய நில அடமான பாங்க் போடுகின்ற ஈட்டுத் தொகையில் பங்கெடுத்துக் கொள்ள மிகவும் கஷ்டப்படுகிறார்கள். சமீப காலத்தில்கூட, இரண்டு நாட்களுக்கு முன் இந்திய அரசாங்கத்தில் ஒரு உத்தரவு போட்டிருக்கிறார்கள். தொழில் ஸ்தாபனங்களுக்காவது 60 சத விகிதம் ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பரேஷன் முதலீடு போடவேண்டும் என்று உத்தரவு போட்டிருக்கிறார்கள். அதுபோல், விவசாய பாங்கிலும் 60 சத விகிதம், 70 சத விகிதம் ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பரேஷன் பங்கெடுத்துக்கொள்ள இந்திய அரசாங்கம் நடவடிக்கை எடுக்க வேண்டுமென்று நமது அமைச்சர் அவை மூலமாகக் கேட்டுக் கொள்ள விரும்புகிறேன்.

இன்னொரு விஷயம் சொல்லப்பட்டது. 30, 32 வருஷங்களாக இந்த அரசாங்கம் நில அடமான பாங்குக்கு 'இன்டெரிம் பினான்ஸ்' என்று சொல்லக்கூடிய வகையில் கடன் கொடுத்து வந்தது. அதை வைத்துத்தான் மத்திய அடமான பாங்க் கடன் கொடுத்து, பிறகு சொத்துக்களை அடமானம் வாங்கி, கடனைச் சுமார் ஒரு வருஷத்திற்குள் திருப்பிக் கொடுத்து வந்தது. ஆனால், சென்ற செப்டம்பர் மாதத்திலே திடீரென்று அரசாங்கம் நிறுத்திவிட்டு ஸ்டேட் பாங்க் பணத்தை வாங்கிக்கொள்ளும்படி சொல்லி விட்டார்கள். ஆட்சேபணை இல்லை. வாங்கிக்கொள்கின்றோம். ஆனால், 3½ சத விகித வட்டிக்கு அரசாங்கம் கொடுத்துக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் ஸ்டேட் பாங்கு 5 சத விகிதத்திற்குக் கொடுக்கிறார்கள். 1½ சத விகிதம் அதிகமாக இருப்பதால் ஏழை விவசாயிகள் அதிக வட்டி கொடுக்க நேரிடுகிறது. ஆகையால், மேல் நாட்டில் அரசாங்கம் கொடுப்பது போல் நமக்கு உபகாரம் கொடுத்து, அந்த வித்தியாசத்தையும் குறைக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

இன்னொரு விஷயம். மத்திய நில அடமான பாங்கில் வேலை பார்க்கின்ற உதவி டெபுடி ரிஜிஸ்ட்ரார்கள், கூட்டுறவு சப்-ரிஜிஸ்ட்ரார்களுடைய சம்பளத்தை நில அடமான பாங்கில் வாங்கிக்கொள்கின்றன. வருஷா வருஷம் இரண்டு லட்சம் ரூபாய் அந்த அளவிலே நாங்கள் கொடுக்க வேண்டியிருக்கிறது. அதை நீங்கள் தள்ளிக் கொடுத்தால் அந்த அளவுக்காவது வட்டியைக் குறைக்க எங்களால் சௌகரியம் ஏற்படும். அங்கே வேலை பார்க்கின்ற அரசாங்க உத்தியோகஸ்தர்களும், அதே வேலையை அவர்கள் பார்க்கிறார்கள். அப்படிப் பார்க்கின்றபோது மற்றவர்களுக்கு சம்பளம் கொடுத்துவிட்டு இவர்கள் சம்பளத்தை எங்களிடம் வாங்குவது நியாயமற்ற காரியம். அதைப் பல முறை எடுத்துக்

கூறிக் கொண்டு வருகிறோம். அதை அரசாங்கம் தள்ளிக் கொடுத்து, ஒத்துக்கொள்ளவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

நண்பர் திரு. கல்யாணசுந்தரம் அவர்கள் பேசுகின்றபோது, ஆயிரத்துக்குக் குறைவான கடன் குறைவாக கொடுக்கப்பட்டிருப்பதாகவும், பத்தாயிரத்திற்கு மேற்பட்ட கடன் அதிகமாகக் கொடுக்கப்பட்டிருப்பதாகவும் கூறினார்கள். தமிழ்நாடு நில அடமான பாங்கின் தலைவர் என்ற முறையிலும் நான் கூறுகின்றேன். இருபது வருஷத் தவணையில் கொடுக்கும் கடன் ஆயிரத்துக்குக் குறைவாகத் தேவையில்லை. ஆயிரம் ரூபாய் அளவுக்குக் குறுகிய காலக் கடன் கொடுப்பதென்றால் ரிகார்டு கொடுக்கக் கஷ்டங்கள் ஏற்படுகின்றன. ஆகையால்தான், ஆயிரம் ரூபாய்க்கு அதிகமாகக் கொடுக்கப்படுகிறதே தவிர, பாங்கில் கொடுக்க இடம் இல்லாமல் இல்லை. மத்திய பாங்கிலே சௌகரியமாக இருப்பதால், அங்கு வாங்குகிறார்கள். பத்தாயிரம் கடன்கள் எல்லாம் நில அடமான பாங்குகள் கொடுக்கின்றன. மத்திய நில அடமான பாங்கு நல்ல முறையில் வேலை செய்து வருகிறது. கனம் அமைச்சர் அவர்கள் கொண்டுவந்த தீர்மானத்தை ஆதரித்து என்னுடைய பேச்சை முடித்துக்கொள்கிறேன்.

***SRI J. MATHA GOWDER :** கனம் சபாநாயகர் அவர்களே, கூட்டுறவு இலாகா அமைச்சர் அவர்கள் கொண்டு வந்துள்ள நில அடமான பாங்கு திருத்த மசோதாவை ஆதரித்து ஒரு சில கருத்துக்களைச் சொல்ல விரும்புகிறேன். சாதாரணமாக, கூட்டுறவு இயக்கம் என்றால் எல்லாக் கூட்டுறவு இயக்கங்களிலும் வட்டி விகிதம் ஒரே மாதிரி இருக்கவேண்டுமென்பது என்னுடைய கருத்து. இப்போது மத்திய கூட்டுறவு பாங்குகளில் இருந்து ஐந்து சத விகிதத்திற்கு ஜில்லா கூட்டுறவு பாங்கின் மூலமாக கடன் கிடைக்கிறது. அவர்கள் கொடுக்கும் கடனுக்குக் கிராம மக்களிடமிருந்து 6½ சதவிகித வட்டி வசூலிக்கிறார்கள். நில அடமான பாங்கைப் பொறுத்தவரை கிராம மக்களிடம் இருந்து 7½ சத விகிதம் வட்டி வசூலிக்கிறார்கள். இவ்வாறு இரண்டு விதமாக வித்தியாசம் இருப்பது சரியல்ல. இருபது வருஷக் கடனாக இருப்பதால்தான் வட்டியை உயர்த்தியிருக்கிறோம் என்று சொல்லலாம். நீண்ட காலக் கடனுக்கு வட்டியைக் குறைத்தால் நல்லது என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். மாநில நில அடமானத் தலைவர் அவர்கள் முன்பு பேசும்போது, ஆயிரம் ரூபாய் கடன் கொடுக்க வேண்டுமென்றால் ரெக்கார்டுகளைக் கொடுப்பதில் சிரமம் இருக்கிறது என்று கூறினார்கள். சாதாரணமாக அக்ரிகல்சர் பாங்கு மூலம் கடன் வாங்கும்போது பூமியை அடமானம் செய்கிறார்கள். கூட்டாக இருந்தால்கூட அடமானம் செய்து கடன் வாங்கக் கூடிய நிலைமை இருக்கிறது. ஆனால் கூட்டுறவு இலாகாவின் நில அடமான பாங்கு என்று சொல்லிவிட்டால், பட்டா மற்றும் ரெக்கார்டுகளையெல்லாம் அவர்களிடம் ஒப்படைத்தால் தான் கடன் கொடுக்க முடியும் என்று இருக்கின்ற காரணத்தால்

27th April 1962] [Sri J. Matha Gowder]

இது வரை ஒதுக்கப்பட்ட பணத்தில் 3 கோடி ரூபாய் வரை கூட எட்டமுடியாத நிலையில் இருக்கிறது. அந்தக் கிராம மக்கள் உடனடியாகக் கடன் பெறும் நிலையும் இல்லை. அக்ரிகல்சரல் பாங்கிலே சொத்தை ஈடுவைத்து அடமானப் பத்திரம் வாங்கு வதற்குச் சட்டம் இருக்கிறது. ஆனால் நில அடமான பாங்கில் மட்டும் சட்டம் இல்லை. கூட்டுறவு முறையிலேயே ஒன்றுக்கொன்று முரண்பாடு இருப்பது சரியல்ல என்று கூற விரும்புகிறேன். கூட்டுப் பட்டாவாக இருந்தாலும் பட்டாதாரர்கள் எல்லாம் ஒப்பந்தக் கையெழுத்துப்போட்டால் கடன் கொடுக்கலாம் என்று இந்தச் சட்டத்தை தளர்த்தினால்தான் நில அடமான பாங்கின் மூலமாக மக்கள் பலன் அடைய முடியும், இல்லையென்றால் பலன் அடைய முடியாது என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

கிராம மக்கள் கடன் பெற்று எப்படியாவது தங்களுடைய நிலத்தையும் தோட்டத்தையும் சீர்படுத்தி நன்றாகப் பயிரிட வேண்டுமென்ற ஆசையினால்தான் கடனை வாங்குகிறார்கள். இதிலிருந்து ஒருவர் பணம் வாங்கவேண்டுமானால் 2 ஆண்டு கால மாகிறது. 1962-ம் ஆண்டு கடனுக்கு விண்ணப்பித்தால் 1964-ம் ஆண்டுதான் கடன் கிடைக்கிறது. ஆகவே, இது பற்றி சம்பந்தப் பட்ட அதிகாரிகளுடன் கலந்து பேசி, கூட்டுறவு என்ற முறையில் இரண்டுக்கும் ஒரே விதமான சட்டம் இருந்தால்தான் கிராம மக்களுக்கு நல்லது என்ற என்னுடைய கருத்தைக் கூறி அதற்கு ஆவன செய்யவேண்டுமென்று சொல்லிக் கொண்டு இந்த மசோதாவை ஆதரித்து என்னுடைய பேச்சை முடித்துக் கொள்கிறேன்.

**SRI M. SHANMUGAM:** சபாநாயகர் அவர்களே, சென்னை மத்திய நில அடமான பாங்கின் 'டிபெஞ்சர் ஹோல்டர்' களுக்கு உத்தரவாதம் அளிக்கும் முறையில், மேலும் 10 கோடி ரூபாய்க்கு உத்தரவாதம் கோரி சர்க்கார் கொண்டு வந்திருக்கும் திருத்த மானது மிகவும் முக்கியமானதாகும். இந்த நில அடமான பாங்குகள் விவசாயிகளுக்கு நீண்டகாலக் கடன் கொடுத்து அவதிப்படும் விவசாயிகளுக்கு நன்மை புரிந்து வருகிறது. இந்த பாங்குகள் மிக நல்ல முறையில் வேலை செய்து வருகிறது. இந்தப் பாங்கிலே பொறுப்பு தலைவரிடமும் செயலாளரிடமும் ஒப்படைக் கப்பட்டிருக்கிறது. அவர்கள் நல்ல முறையிலே பணியாற்றி அதிகமான விண்ணப்பங்களைப் பெற்று கடன் வழங்க வேண்டும். இதற்கு அரசாங்கம் எந்த அளவுக்கு உதவி செய்ய முடியுமோ அந்த அளவுக்கு உதவி செய்திருக்கிறார்கள். உண்மையிலேயே விவசாய மக்கள் பயன்பட வேண்டுமானால் சென்னைமாகாண நில அடமான பாங்கு 'டிபெஞ்சர்' பெறுவதற்கு சர்க்கார் உடனடியாக உத்தரவாதம் அளிக்க வேண்டும்.

நண்பர் கல்யாணசுந்தரம் அவர்கள், சிறிய அளவுக்குக் கடன் கேட்பவர்களுக்கு அதிகப்படியாக உதவி செய்யவில்லை என்று தெரிவித்தார்கள். இந்த மாதிரி சில கஷ்டங்கள் இருக்கின்றன. கடன் பெறுவதில் கால தாமதமாவதைத் தவிர்க்க சில விதிகளைக்

கொஞ்சம் தளர்த்திக் கொடுத்து சீக்கிரமாகக் கடன் கிடைப்பதற்கான வழிவகைகளைச் செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

சாதாரண பணக்காரர்களிடமிருந்து விவசாயிகளுக்குக் குறைந்த அளவுக்கு பணம் கிடைக்க வழியில்லை. இது நன்றாகத் தெரியும். நாமே ரிசர்வ் பாங்கிடமிருந்து பெறுவதைவிட பொது மக்களிடமிருந்து தேவையான பணத்தை எழுப்ப முயற்சி எடுத்துக்கொள்வது மிகவும் உதவியாக இருக்கும். அதற்கு வேண்டிய வழிவகைகளைச் செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். இன்னும் கூடக் கொஞ்சம் 1 சத விகிதம், 1½ சத விகிதம் குறைந்த வட்டிக்குக் கொடுக்கலாம். அரசாங்கமே கூட்டுறவு பாங்குகளில் வேலை செய்யக் கூடிய சிப்பந்திகளின் செலவை சப்ஸிடி செய்துவிட்டால் இந்த நன்மையைச் செய்ய முடியும். இதற்கும் வழி செய்யவேண்டுமென்று கேட்டுக்கொண்டு என் உரையை முடித்துக் கொள்கிறேன்.

* SRI K. S. SUBRAMANIA GOUNDER : சட்டமன்றத் தலைவர் அவர்களே, கூட்டுறவு அமைச்சர் அவர்கள் கொண்டுவந்துள்ள தீர்மானத்தை ஆதரித்துச் சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். ஏற்கனவே இம்மாதிரி டிபென்சர்களுக்கு 10 கோடி வரையில் அரசாங்கம் காரண்டி கொடுத்தது. இப்போது கொண்டு வந்திருக்கிற தீர்மானத்தின்படி பத்து கோடி என்பதை 20 கோடியாக உயர்த்துவதற்காக ஏற்பாடு செய்யப்படுகிறது. நமக்கு மூன்றாவது திட்ட காலத்தில் திட்டமிட்டபடி கடன் கொடுத்த பணம் போதாது. ஏற்கனவே பத்து கோடியில் ஒன்பது கோடி ரூபாய்க்கு மேல் பெற்றுவிட்டோம். அதற்காக வேண்டியே இன்னும் ஒரு பத்து கோடி வரைக்கும், அதாவது 20 கோடி பெறுவதற்கு இது வழியாகிறது.

கடன் கொடுப்பதில் கூட்டுறவு இயக்கத்தின் மூலமாக மூன்று விதக் கடன்கள் கொடுக்கப்படுகிறது. நில அடமானத்தின் மூலமாக நீண்டகாலக் கடன் பதினைந்து வருஷம் அல்லது இருபது வருஷத்தில் திருப்பிக் கொடுக்கப்படுகிறது. மத்திய காலக் கடன் என்ற முறையில் மூன்றாண்டு, ஐந்தாண்டுகளில் திருப்பிக் கொடுக்கப்படும் கடன் ஒருவகை. பயிர்கள் மாசூல் செய்வதற்காக சீசனல் அக்ரிகல்சரல் ஆப்பரேஷனுக்காக ஒரு வருஷக் கடன்களும் கொடுக்கிறோம்.

நில அடமான பாங்குகளின் மூலம் பணம் வாங்குவதில் முன்பு எவ்வளவு சிக்கல்கள் இருந்திருக்கின்றன என்பதை ஆராய்ந்து பார்த்தால் அந்தச் சிக்கல்கள் எல்லாம் இப்போது பெரும் அளவு தீர்க்கப்பட்டிருக்கின்றன என்பதை எல்லோரும் உணர்வார்கள். அவ்வாறு அந்தச் சிக்கல்களை எல்லாம் தீர்ப்பதற்கு யாராவது ஒருவர் காரணமாக இருந்தால் அது நமது முதல் அமைச்சர் அவர்கள் தான் என்று சொன்னால் அது மிகையானது இல்லவே இல்லை. அதில் இருக்கக்கூடிய பல பிரச்சனைகளை மிகச் சீக்கிரமாக, சுலபமாகத் தீர்த்து வைத்திருப்பதற்கு கூட்டுறவாளர்களும்,

27th April 1962] [Sri K. S. Subramania Gounder]

விவசாயிகளும் நமது முதல் அமைச்சருக்கு மிகவும் கடமைப் பட்டிருக்கிறார்கள். திரு. கல்யாணசுந்தரம் அவர்கள் சொன்னது போல முன்பெல்லாம் நிலத்தின் மதிப்பு "ப்ரி வார் ரேட்" என்ன இருந்ததோ அது கணக்கெடுத்துக் கொள்ளப்பட்டு பணம் கடன் அளிக்கப்பட்டது. ஆனல் இப்போது அந்தச் சிக்கல் நீக்கப்பட்டுவிட்டது. இன்றைய மார்க்கெட் நிலவரப்படிதான் நிலத்தின் மதிப்பு நிர்ணயிக்கப்படுகிறது. அது மாத்திரமல்ல. ஏற்கனவே திரு. ஷண்முகம் சொன்னது போல 3 ஆயிரம் ரூபாய் வரையில் கடன் கொடுப்பதில் தாமதம் இருக்கக் கூடாது என்றும் பிரதம நில அடமான பாங்குகளே கொடுக்கலாம் என்றும் இப் போது மாறுதல் செய்திருக்கிறோம். அதன் காரணமாக இப்போது சீக்கிரமே பணம் சாங்ஷன் செய்வதற்கு வசதி இருக்கிறது. ஸ்ரீ மாதா கவுடர் சொன்னபடி கூட்டுப் பட்டாவாக நிறைய இருக் கிற காரணத்தினுல் ஒரு கஷ்டம் இருக்கிறது என்பதை உணர் கிறேன். கூட்டுறவு அமைச்சர் மாத்திரமல்ல, ரெவின்யூ அமைச்சர் அவர்களும் இதுவிஷயத்தில் கவனம் செலுத்தி கூட்டுப் பட்டாக் களைத் தனிப்பட்டாவாகச் செய்வதில் தீவிர கவனம் செலுத்த வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். சாதாரணமாக ஏழை எளியவர்கள் தனிப்பட்டா வாங்க இயலாத காரணத்தினுல் நில அடமான பாங்குகளில் கடன் வாங்க முடிவதில்லை. ஆனல் சாதாரண குறுகியக்காலக் கடன் வசதிகளையோ, மத்திய கால கடன் வசதிகளையோ பெறுவதில் விவசாயிகளுக்கு எவ்விதமான கஷ்டமும் கிடையாது. திரு. கல்யாணசுந்தரம் அவர்கள் ரிசர்வ் பாங்கியின் வட்டி விகிதத்தை 3½ சத விகிதமாகச் செய்யவேண்டு மென்ற ஒரு திருத்தம் கொண்டுவந்துள்ளார்கள். அப்படிச் செய்வதனுல் கூட்டுறவு சங்கங்கள்தான் பாதிக்கப்படும். நில அடமான பாங்குகளை பாதிக்கக் கூடிய வகையில் இந்தத் திருத் தத்தை நிறைவேற்றுவதனுல் என்ன பயன்? காரணம் அப்படி அவர்கள் குறைத்துக்கொடுக்க மறுத்துவிட்டால் நாம் ஒன்றும் செய்வதற்கில்லை. சட்டசபையில் நாம் திருத்தம் நிறைவேற்றி விடுவதால் ரிசர்வ் பாங்க் கொடுக்கப்போவதில்லை. நம்முடைய கூட்டுறவு அமைப்புக்குத்தான் பாதகம் விளைவிக்குமேயன்றி சாதகமாக இராது என்று சொல்லி என் உரையை முடித்துக் கொள்கிறேன்.

THE HON. SRI N. NALLASENAPATHI SARKARAI MANRADIAR: கனம் சபாநாயகர் அவர்களே, இப்போது நான் சொல்ல வேண்டிய விஷயங்களை கனம் மெம்பர்கள் ஒவ்வொருவரும் சொல்லிக் கொண்டிருந்தார்கள். என் வேலையை மிகச் சுலபமாக முடித்து விட்டார்கள். அதற்கு முதலில் என்னுடைய நன்றி. நில அடமான பாங்கு உடனடியாக விவசாயிகளுக்கு உதவ வேண்டுமென்ற முறையில் கனம் சுப்பிரமணிய கவுண்டர் சொன்னதுபோல கொஞ்ச நாட்களுக்கு முன்பு கனம் முதல் அமைச்சர் அவர்களது நல்ல யோசனையின் பேரில் அதில் இருந்த பல சிக்கல்கள் நீக்கப்பட்டிருக்கின்றன. நில அடமான பாங்கு களே 3 ஆயிரம் வரையில் சாங்ஷன் செய்து கொடுக்க நல்ல

[Sri N. Nallasenapathi Sarkarai Manradiar] [27th April 1962

ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. எல்லோரும் அதை வரவேற்று உடனடியாகக் கடன் கேட்டுச் சுலபமாக பெற்று வருகிறார்கள். கனம் கல்யாணசுந்தரம் அவர்கள் இந்தத் திருத்தத்தை யோசித்துச் செய்யவேண்டும், இப்போது அவசரமாகச் செய்யவேண்டியதில்லையென்று சொன்னார். இது நல்ல முறையில் யோசித்தே செய்யப்பட்டு வருகிறது. இதில் அவசரமாக சர்க்கார் எதையும் செய்யமாட்டார்கள் என்று இந்தச் சமயத்தில் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

மற்ற விஷயத்தைப் பற்றியும் அங்கத்தினர்கள் சொன்னார்கள். ஊட்டியைப் பொறுத்த வரையில் கூட்டுப் பட்டாக்கள் நிறைய இருக்கின்றன. கூட்டுப் பட்டா நிறைய இருக்கிற காரணத்தினால் சில தடங்கல்கள் ஏற்படுகின்றன. அதை கனம் ஊட்டி மெம்பர் எடுத்துச் சொன்னார்கள். இதை உடனடியாக தனிப்பட்டாவாகச் செய்வதில் கவனம் செலுத்த வேண்டும். ஸ்ரீ சுப்ரமணியம் அவர்கள் மிக விளக்கமாக அதை எடுத்துச் சொன்னார்கள். இன்று, நில
9-30 a.m. அபிவிருத்தி செய்யவோ, விவசாயம் செய்யவோ அல்லது வேறு பிற காரியங்களுக்காகவோ வெளியே கடன் வாங்கும்போது அதிகப்படி வட்டி கொடுத்து வாங்க வேண்டியிருக்கிறது. ஆனால் நில அடமான பாங்குகளில் வாங்கப்படுகிற வட்டி அதிகமென்று சொல்வதற்கில்லை. எல்லோரும் உற்சாகத்தோடு இப்பொழுது அதைப் பெற்றுக் கொண்டிருக்கிறார்கள். பின்னர், நில மதிப்பைப் பற்றி சொல்லவேண்டுமென்று சொன்னார்கள். சுப்ரமணியம் அவர்களும் அதைப்பற்றி சொன்னார்கள். முன்பு அதிக மதிப்புள்ள நிலங்களைக் கூட குறைத்து மதிப்புப் போடும் நிலை "ப்ரீ வார் பீரிஸ்யடில்" இருந்தது. இப்பொழுது, இருக்கிற மார்க்கெட் விலையில் 50 சத விகிதம் கொடுக்கிறார்கள். நிலத்தின் மதிப்பு கூட உயர்த்திக் கொடுக்கப்படுகிறது. பின்னர் பல விஷயங்கள் பற்றி சொன்னார்கள். அவைகளையெல்லாம் நன்கு ஆலோசித்து ஆவன செய்யப்படுமென்று கூறிக் கொண்டு இந்தத் தீர்மானத்தை எல்லோரும் ஆதரித்து ஏற்றுக் கொள்ளவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

The amendment was by leave withdrawn.

MR. SPEAKER: The question is—

"This Assembly recommends to the State Government that they may under sub-section (2) of section 6 of the Madras Co-operative Land Mortgage Banks Act, 1934, increase the maximum amount of the guarantee given by them in respect of the debentures issued by the Madras Co-operative Central Land Mortgage Bank Limited, up to a total face value of Rs. 2,000 lakhs (rupees two thousand lakhs only) exclusive of each debentures as the Bank may from time to time redeem, such debentures being issued for periods not exceeding in any case 25 years from the date of issue and bearing interest at a rate not exceeding 5 per cent per annum."

The Resolution was put and carried.

V.—DISCUSSION ON THE GOVERNOR'S ADDRESS—*cont*.

MR. SPEAKER: We will now continue discussion on the Governor's Address.

SRI A. R. RAMASAMI: கனம் சபாநாயகர் அவர்களே, கவர்னர் அவர்களது உரையை ஆதரித்து நான் சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். நமது மாநிலம் எல்லாத் துறைகளிலும் முன்னேறிக்கொண்டிருக்கும நேரத்தில், விலைவாசியைக் குறைக்க, அரிசி விலையைக் குறைக்க எல்லோரும் முயற்சி செய்துகொண்டிருக்கிறார்கள். மத்திய சர்க்கார் செயற்கை முறையில் அரிசி தயாரிக்கவேண்டுமென்று திட்டத்தை ஐந்தாறு மாதங்களுக்கு முன்னர் பத்திரிகைகளில் வெளியிட்டார்கள். கிழங்கு மாவைக் கொண்டும், புஞ்சை தான்யங்களைக் கொண்டும் செயற்கை முறையில் அரிசி தயாரிக்கும் திட்டத்தை தெரிவித்திருந்தார்கள். அம்முறையினால் உணவுப் பற்றாக்குறையை ஓரளவு சமாளிக்கலாம் என்று கருதுகிறேன். உணவுப் பற்றாக்குறை ஏற்பட முக்கிய காரணம், ஜனத்தொகைப் பெருக்கமாகும். தினம்தோறும் மக்கள் தொகை பெருகிக்கொண்டே போகிறது. அந்த அளவிற்கு உணவு உற்பத்தி அதிகரிக்கவில்லையென்பது எல்லோருக்கும் தெரிந்த விஷயம். ஆகவே, குடும்பக் கட்டுப்பாடு திட்டத்தை நல்ல முறையில் அமுல்படுத்தி ஜனப்பெருக்கத்தை தடுக்க, வேண்டிய நடவடிக்கைகள் எடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டு எனது உரையை முடித்துக்கொள்கிறேன். வணக்கம்.

* SRI S. ARUMUGAM: மேன்மைமிக்கத் தலைவர் அவர்களே, கடந்த நான்கு நாட்களாக கவர்னர் அவர்களது உரையின்மீது விவாதம் நடைபெற்று வருகிறது. தொழில் வளம், விவசாயம் இவைகள் நம் மாநிலத்தில் முன்னேறும் வகையில் கவர்னர் அவர்களது உரையில் எதுவுமே குறிப்பிடப்படவில்லை என்று நான் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். நான் எனது தொகுதியிலிருந்து வெற்றி பெற்று வந்திருக்கிறேன், அங்குள்ள சில குறைகளைப்பற்றி எடுத்துக்கூறி முடித்துக்கொள்ளலாமென்று நினைக்கிறேன். சேலம் மாவட்டம் மிகவும் பின்தங்கிய மாவட்டமாக இருக்கிறது. 1947-ல் சுதந்தரம் பெற்ற பிறகு சேலம் மாவட்டத்தில் நல்ல தொழில் வளம் ஆரம்பிக்கப்படுகிற தன்மையிருந்தும், அதற்குரிய நிலையிருந்தும் தொழிற்சாலைகள் அங்கு ஆரம்பிக்கப்படாமலும், நீர்ப்பாசனத் திட்டங்கள் நிறைவேற்றத்தக்க வகையில் அணைகள் இருந்தும் அங்கு நீர்ப்பாசன வசதியின்றி விவசாயிகள் குறைகள் போக்கப்படாமல் இருப்பது கண்டு நான் மிகவும் வேதனைப்படுகிறேன். சேலம் மாவட்டத்தில் இரும்புத் தொழிற்சாலை ஆரம்பிக்கப்படுமென்றும் முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் சேர்த்துக்கொள்ளப்படுமென்றும், இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சேர்த்துக் கொள்ளப்படுமென்றும், மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சேர்த்துக்கொள்ளப்படுமென்றும் ஒவ்வொரு திட்டத்தின் போதும் கூறிவிட்டு, இப்படி ஆட்சியாளர்கள் தங்கள் கட்சிக்கு ஆதரவு தேடும் வகையில் இதை வைத்துக் கொண்டிருக்கிறார்களே தவிர, இந்த இரும்பு தொழிற்சாலை அமைப்பதை வலியுறுத்தி

[Sri S. Arumugam] [27th April 1962

அதைக் கொண்டுவருவதுபற்றி கவர்னர் அவர்களது உரையில் எதுவுமே குறிப்பிடப்படவில்லை. குறிப்பாகச் சொல்லவேண்டுமென்றால், இம்மாமன்றத்தில் எடுத்துக்கூறி நமது தமிழகம் தொழில்துறையில் முன்னேற, வளம் பெற, சேலத்தில் காயாக இருக்கிற இரும்புக் கனியை பழுக்க வைத்து தொழில் வளத்தைப் பெருக்கத்தக்க முறையில் உள்ள ஒரு நிலையை ஏற்படுத்தவேண்டுமென்று எண்ணி என்னைப் போன்றோர்கள் இங்கு வந்திருக்கிறோம். ஆனால் கவர்னர் அவர்கள் உரையைப் பார்க்கிறபோது காயாக இருந்த கனிகூட இன்று பிஞ்சாகக்கூடிய நிலையில் தான் இருக்கிறது என்பதைப்பார்த்து வருந்த வேண்டியிருக்கிறது என்பதை தெரிவித்துக் கொள்கிறேன். ஆக, இம்மாமன்றம் தகுந்த முயற்சிகள் எடுத்துக் கொண்டு சேலத்தில் இந்த இரும்புத் தொழிற்சாலையை ஏற்படுத்த ஆவன செய்யவேண்டுமென்று பணிவன்போடு கேட்டுக்கொள்கிறேன். சேலம் மாவட்டத்தை எடுத்துக் கொண்டால் குடி தண்ணீர் பிரச்னை ஒரு பெரிய பிரச்னையாக இருந்துகொண்டு வருகிறது. நாமக்கல், ராசிபுரம், திருச்செங்கோடு, சேலம் போன்ற பகுதிகளில் காவேரி ஆற்றுத் தண்ணீர் ஓடிக்கொண்டிருந்தாலும்கூட, குடி தண்ணீர் வசதியின்றி நகராட்சிமன்றங்களும், ஊராட்சிமன்றங்களும் ஆட்சியாளர்களிடம் கூறியும் அது கவனிக்கப்படாமல் இருக்கிறது. மேற்படி வட்டங்களின் குடி தண்ணீர் பிரச்னையைத் தீர்க்க இம்மாமன்றம் முயற்சி எடுத்துக் கொள்ளவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். காவேரி ஆற்றுத் தண்ணீரையாவது அல்லது தோப்பையாறு திட்டத்தையாவது மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சேர்த்து சேலம் மாவட்டவிவசாயிகளின் குறைகளைத் தீர்க்கும் வகையில் வழிவகை காணவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். தாழ்த்தப்பட்ட மக்களுக்கு வீடுகள் கட்டிக் கொடுக்கும் பிரச்னையை எடுத்துக் கொண்டால் நடைமுறையில் அமைச்சர்களின் பேச்சில் அது இருந்து கொண்டிருக்கிறதே தவிர அப்பிரச்னை தீர்க்கப்படவில்லை. அக்காபாளையம் பஞ்சாயத்து, மின்னக்கல், கொண்டலாம்பட்டி, இங்குள்ள ஹரிஜனங்களுக்கு வீடு கட்டிக் கொடுக்கும்படி 59-ம் ஆண்டிலேயே விண்ணப்பம் செய்திருக்கிறார்கள். அதுபற்றி கலெக்டர் முயற்சி எடுத்து சர்வே செய்தும் ஹரிஜனங்களுக்கு வீடு கட்ட வசதி ஏற்படுத்தித் தரப்படவில்லை. மேற்படி குறைகளைப் போக்க இம்மாமன்றம் முயற்சி எடுத்துக்கொள்ளவேண்டுமென்று கேட்டுக்கொள்வதோடு, இந்த ஐந்தாண்டுத் திட்டத்திலாவது ஏழைகள் பாதிக்கப்படாத வகையில், தொழிலாளர்கள் முன்னேறும் வகையில், தொழிற்சாலைகள் அமைக்க, கைத்தறியாளர்களுக்கு பாதுகாப்பு அளிக்க, விவசாயம் முன்னேற, தக்க வழிவகை காணவேண்டுமென்று பணிவன்போடு கேட்டுக்கொண்டு எனது உரையை முடித்துக்கொள்கிறேன். வணக்கம்.

* **SRI P. JAYARAJ :** மதிப்பிற்குரிய சபாநாயகர் அவர்களே, கவர்னர் பெருமான் ஆற்றிய உரைக்கு நன்றி தெரிவிக்கும் பிரேரணையை ஆதரித்து என்னுடைய கருத்துக்கள் சிலவற்றைச் சொல்ல முன்வருகின்றேன்.

27th April 1962] [Sri P. Jayaraj]

கவர்னர் பெருமான் ஆற்றிய உரையில் தேர்தல், ஐந்தாண்டுத் திட்டம், மின்சாரம், அதிக உணவு உற்பத்தி, தீவிர சாகுபடி, நியாய வாரச் சட்டம் என்று பல்வேறு வகையில் காணப்படுகிறது. இந்தச் சபையிலே பெருமளவுக்கு தேர்தல் சம்பந்தமாகப் பேசப் படுகிறதே தவிர, வேறு என்னென்ன கருத்துக்கள் சொல்லியிருக் கிருர்கள், அவைகள் நாட்டு மக்களுக்கு நல்லவையா, அல்லது கெட்டவைகளாக இருக்கிறதா என்று ஆராயும் நிலையில் யாரும் இல்லை. கவர்னர் ஆற்றிய உரையில், நியாய வாரச் சட்டத்தை ஆந்திராவிலிருந்து பிரிந்து வந்து சேர்ந்த திருத்தணிக்கும் கொண்டுவருவதாகக் குறிப்பிட்டிருக்கிருர்கள். குறிப்பாக விவசாயத் தொழிலாளர் சார்பில் சொல்லவேண்டுமாளுல்—நியாய வாரச் சட்டத்தினுல் விவசாய மக்களுக்கு நன்மை ஏற்பட்டிருக் கிறதா என்று ஆராயும் நிலையில்—விவசாய மக்களுக்கு பெருமள வுக்கு நன்மை இருந்தாலும், நடைமுறையில் விவசாய மக்களுக்கு பெருமளவுக்கு அது பாதகத்தை அளித்திருக்கிறது. குறிப்பாக, தஞ்சை ஜில்லாவை எடுத்துக்கொண்டால், சென்ற கோவிலடி உடைப்பின்போது வெள்ளத்தால் பாதிக்கப்பட்ட இடங்களில் விளைவு குறைந்து, விவசாயிகள் மிராசுதார்களுக்கு அளக்கும் நெல் குறைந்துவிட்டது. இதன் காரணமாக விவசாயிகள் பெரு மளவுக்கு அப்புறப்படுத்தப்படுகிருர்கள். இன்றைக்கு வார சாகுபடிதாரராக இருந்தால் களத்து மேட்டிலேயே வாரம் கொடுக்கப்படுகிறது. குத்தகை சாகுபடியை எடுத்துக்கொண் டால், குத்தகை என்று எழுதிக்கொடுத்து விட்டால், விளைந்தா லும் விளையாவிட்டாலும் கண்டிப்பாகக் கொடுக்கவேண்டும் என்ற கட்டத்தில், நூற்றுக்கணக்கான விவசாயிகள் அப்புறப்படுத்தப் படுகிருர்கள். 1960-ம் ஆண்டிலே பெய்த பெருமழையின் காரண மாக நெல் குத்தகைக்கு அளக்க முடியவில்லை. அடுத்தபடியாக கோவிலடி உடைப்பு காரணமாகவும், தண்ணீர் அதிகமாக வராத காரணத்தினுலும், விளைச்சல் அதிகமாக இல்லாத காரணத்தினு லும் அதிகமாக அளக்க முடியவில்லை. அவர்களால் குத்தகைப்படி அளக்க முடியாத காரணத்தினுல் விவசாயிகள் அப்புறப்படுத்தப் படுகிருர்கள். அந்த முறையில் கணக்கிட்டு எந்த அளவுக்கு இரண்டு ஆண்டுகளில் விவசாயிகள் வெளியேற்றப்பட்டு இருக்கிருர் கள், எதனுல் வெளியேற்றப்படுகிருர்கள், குத்தகை கொடுக் காத காரணத்தினுல் வெளியேற்றப்படுகிருர்களா அல்லது விளை யாத காரணத்தினுல் வெளியேற்றப்படுகிருர்களா என்று பார்த் தால் நியாய வாரச் சட்டத்தினுல் அதிக அளவு பலன் ஏற்படாத நிலை இருக்கிறது என்பது தெரியும். அந்த அளவுக்கு நியாய வாரச் சட்டம் திருத்தணிக்கு வரும்போது குத்தகைதாரர்கள் என்று சொன்னுல், விளையவில்லை என்று சொன்னுல், எந்த நிலை யிலும் நிலத்திலிருந்து அப்புறப்படுத்தக் கூடாது என்ற முறை யில் சட்டத்தை நிறைவேற்றினுல் உண்மையில் நியாய வாரச் சட்டம் நாட்டு மக்களுக்கு பலன் அளிக்கும். பண்ணையாள் பாது காப்புச் சட்டம் என்று தஞ்சை ஜில்லாவில் கொண்டு வந்தார்கள். எந்த விவசாயியையாவது வேண்டாமென்று நினைத்தால் ரூ. 150 கொடுத்தால் அவனை நிலத்திலிருந்து அப்புறப்படுத்தி விடலாம் என்று சட்டம் இருக்கிறது. ஆகையால் நல்ல முறையில்

[Sri P. Jayaraj] [27th April 1962

விவசாயிகள் நடந்துகொண்டாலும், உண்மையாக நடந்து கொண்டாலும், விவசாயிகள் 150 ரூபாய் பணத்தைக் கட்டி, இன்றைக்கு கன்ஸிலியேஷன் போர்டில் பண்ணையாள் இல்லை என்ற காரணத்தைக் காட்டி வெளியேற்றி விடுகிறார்கள். அந்தப் பணத்தைக் கட்டி விட்டால் அவன் தன்னுடைய பண்ணையை இழந்து விடுகிறான். 150 ரூபாய் என்பதை 300 ரூபாய் என்று அதிகப்படுத்தவேண்டும் அல்லது எந்தக் காரணத்தைக் கொண்டும் அப்புறப்படுத்தக் கூடாது என்று ஏற்படுத்தவேண்டும். அப் போதுதான் விவசாயிகளுக்கு நல்ல பலன் கிடைக்கும் என்று சொல்லிக்கொள்ள ஆசைபபடுகிறேன்.

அடுத்தபடியாக மின்சாரத்தைப் பற்றி நமது கவர்னர் அவர் கள் ஆற்றிய உரையில் 1,500 கிராமங்களுக்கு அதுவும் சீக்கிரம் கொடுககப்படும் என்று சொல்லுகிறார்கள். தஞ்சை ஜில்லா பெரு மளவுக்கு வஞ்சிக்கப்பட்டு புறக்கணிக்கப்படுகிறது. தஞ்சை ஜில்லா நெல் களஞ்சியம் என்று போற்றப்பட்ட ஜில்லா. முன்பு வேண்டிய அளவு தண்ணீர் பாய்ந்தது. இன்றைக்கு சரியான முறையில் தண்ணீர் வராத காரணத்தினால் விளைவு குறைகிறது. இதிலே கொஞ்சம் கவனம் செலுத்தி சென்ற ஆண்டில் இருந்ததை விட இந்த ஆண்டு எவ்வளவு குறைந்திருக்கிறது என்று பார்த்து விளைச்சல் குறையாத முறையில் அதற்கு தக்க நடவடிக்கைகள் எடுக்கவேண்டும்.

எனது தொகுதியில் மங்கநல்லூர் ரோடு பொறையாறிலிருந்து ஆடுதுரை வரையில் செல்லும் ரோடு பி.டபிள்யூ.டி. கையில் இருக் கிறது. இரு பக்கங்களிலும் பல்லாயிரக்கணக்கான மக்கள் மங்க நல்லூர் மில்லுக்கு நெல் கொண்டு வருகிறார்கள். ஜில்லா போர்டு தலைவராக இருந்த திரு. நாடிமுத்துப் பிள்ளை அவர்கள் காலத்தி லும், திரு. சாம்பசிவ அய்யர் அவர்கள் காலத்திலும் பல மனுக்கள் போட்டும் சரிவர கவனிக்கப்படவில்லை. அதை ஹைவேஸுக்கு மாற்றி போட்டுக்கொடுத்தால் வியாபாரத்திற்கும் மக்களுக்கு நெல் கொண்டு போவதற்கும் வசதியாக இருக்கும் என்று தெரிவித்துக் கொள்ள ஆசைப்படுகிறேன். இது நீண்ட நெடு நாட்களாகக் கூறப்பட்டு வருகிறது. இப்போது அது ஹைவேஸ் கைக்கு மாறி யிருப்பதாகத் தெரிகிறது. அதையும் கவனித்து பஸ் போக வழி வகை செய்தால் மிகவும் நன்மை ஏற்படும் என்று கூறிக்கொள்ளு கின்றேன்.

*DR. B. NATARAJAN: கனம் சபாநாயகர் அவர்களே, கவர்னர் அவர்களுடைய உரையைப் புறக்கணித்து எதிர்க்கட்சி யினர்—திராவிட முன்னேற்றக் கழகத்தினர்—சட்டசபையும் சட்ட மன்றமும் கூடிய போது வராது நின்று போய் விட்டார்கள். அதற்கு காரணமாக அவர்கள் சொன்னது, "இந்த கவர்னர் மக்களால் தேர்ந்தெடுக்கப்படவில்லை, அவர் ஜனாதிபதியினால் நியமிக்கப்பட்டவர், ஆகையால் அவருக்கு நாங்கள் மரியாதை செலுத்தத் தயாராயில்லை, எனவே வரவில்லை" இவ்வாறு எதிர்க் கட்சி அங்கத்தினர் ஒருவர் எடுத்துச் சொன்னார். உண்மை யில் மக்களால் கவர்னர் தேர்ந்தெடுக்கப்பட்டிருப்பாரானால், அவர்

27th April 1962] [Dr. B. Natarajan]

ஜனாதிபதியின் பிரதிநிதி ஆக மாட்டார். இங்கு பிரச்னை என்ன வென்றால் ஜனாதிபதியை நாம் மதிக்கிறோமா இல்லையா என்பது தான். ஜனாதிபதியின் பிரதிநிதியை ஜனாதிபதியாகவே மதிக்க வேண்டியது நமது கடமை. இல்லையானால் நாம் அரசியல் சட்டத் தைப் புறக்கணித்தவர்களாவோம். ஆனால் எதிர்க்கட்சியினர் இப்போது தங்களுடைய தவறை உணர்ந்திருக்கிறார்களென்று தெரிகிறது. ஏனென்றால், கூட்டத்திற்கு வந்து, பிறகு எழுந்து போகாமல் வராதவரே இருந்து விட்டார்கள். தவறு செய்து விட்டோம், அதை எப்படி மாற்றிக்கொள்வது என்று மானத் தால் இடர்படுகிறவர்களாகத் தெரிகிறது. இனிமேல் இதைப் பார்க்காமல் முறையாக கவர்னர் வரும் கூட்டத்திற்கு வந்து, எப்போது அரசியல் சட்டத்திற்கு அடங்கி நாம் ஆட்சியிலும், சட்டசபை நடத்துவதிலும் பங்கு கொண்டு விட்டோமோ அப் போதே இதில் ஏற்பட்டிருக்கும் எல்லா சம்பிரதாயங்களுக்கும் அடங்கி நடப்பது முறையாகும் என்பதை உணர்வார்கள் என்று நம்புகிறேன்.

கவர்னர் அவர்கள் இந்த அவையில் ஆற்றிய உரை மிகவும் சுருக்கமாக இருக்கிறது. குறிப்பாக எதிர்க்கட்சி அங்கத்தினர்கள் இதை நன்றாகத் தெரிந்துகொள்ளவேண்டும். சுருக்கமாக அவர்கள் விளங்கவைத்தது நமக்குப் படிப்பினை போன்றதாகும். கவர்னர் அவர்கள் சொல்லியிருப்பதில் பெரும்பாகம் நமது திட்டத்தில் எந்த அளவுக்கு மத்திய அரசாங்கம் உதவிசெய்கிறது என்பது. பெரும்பாலாக அவர்கள் உரையில் குறிப்பிட்ட சாதனைகள் எல்லாம் மத்திய அரசாங்கத் திட்ட சாதனைகளாக இருக்கின்றன. ஆகவே மத்திய அரசாங்கமும் மாநில அரசாங்கமும் ஒன்றாக இணைந்து இந்தத் திட்டத்தை உருவாக்குவதிலும், நாட்டை முன்னேற்றுவதிலும் முனைந்திருக்கிறார்கள் என்று அவர்கள் உரை வற்புறுத்துகிறது.

மேலும் கவர்னர் அவர்கள் உரையில் விலைவாசியைப்பற்றி ஒன்றுமே சொல்லவில்லை என்று பல அங்கத்தினர்கள் சொன்னார் கள். விலைவாசி பற்றி பல நண்பர்கள் சரியாக புரிந்து கொள்ள வில்லை என்றே நினைக்கிறேன். விலைவாசி உயர்வு என்பது, வளரு கின்ற ஒரு குழந்தைக்கு வருடந்தோறும் புதுப்புதுச் சட்டை தைத்துக் கொடுப்பது போல் தான். ஒரே சட்டையை வளருகின்ற குழந்தைக்கு போட்டுக்கொண்டு இருக்க முடியாது. அது குறுகி விடும். ஒவ்வொரு ஆண்டுக்கும் புதுப்புது சட்டை போடத்தான் வேண்டும். ஒரு ரூபாய்க்கு மூன்று படி அரிசி கிடைக்குமா என்பதை மட்டும் பார்க்கக் கூடாது. அமெரிக்காவில் போனால் ஒரு முறை கிராப் வெட்டிக்கொள்வதற்கு 5 ரூபாய் ஆகிறது. காலை உண்டி சாப்பிட வேண்டுமென்றால் ஐந்து ரூபாய் ஆகிறது. எனவே ரூபாய்க்கு எத்தனை படி அரிசி என்பதல்ல முக்கியம். வருமானம் எவ்வளவுக்கு உயர்ந்திருக்கிறது என்பதையும் நாம் பார்க்க வேண்டும். எட்டு அணா சம்பளம் கிடைத்துக்கொண்டிருந்த காலத்தில் ரூபாய்க்கு எத்தனை படி கிடைத்தது, இப்போது இரண்டு ரூபாய் சம்பளம் கிடைக்கக்கூடிய காலத்தில் எத்தனை படி கிடைக்கிறது—என்பதைக் கணக்கிட்டுப் பார்த்து, அதிலி

[Dr. B. Natarajan] [27th April 1962

ருந்து மக்களின் வாழ்க்கைத்தரம் உயர்ந்திருக்கிறதா என்பதைத் தான் சிந்தித்துப் பார்க்கவேண்டும். சென்ற பத்து ஆண்டு காலமாக விலைவாசி 20 அல்லது 25 சதவிகிதம் உயர்ந்திருக்கிறது. நம்முடைய திட்டத்தின் பயனாக ஆண்டு ஒன்றுக்கு இரண்டு, இரண்டரை சதம் விலை உயர்ந்துகொண்டு போகிறது. திட்டம் போட்டு நாம் வளர வேண்டுமென்றால் விலைவாசி உயர்ந்து கொண்டு தான் போகும் என்பதை நான் உறுதியாக கூறிக்கொள்ள விரும்புகிறேன். ஒரு திட்டமிட்ட நாட்டின் வளர்ச்சி என்பது கருவுற்றிருக்கும் ஒரு தாய் பத்து மாதங்கள் கஷ்டப்பட்டு பிரசவித்த பின்னால் தான் குழந்தையைக் காண முடியும் என்பது போன்றது. அதே முறையில் தான் நாம் திட்டத்தின் ஒவ்வொரு பகுதியின் பேராலும் செலவு செய்யும் பணம் எல்லாம் பண்டங்களாக வருவதற்கு ஐந்து அல்லது ஆறு ஆண்டுகளாவது ஆகும். அது வரை விலைவாசி உயர்ந்து கொண்டுதான் இருக்கும். சென்ற ஆண்டின் விலைவாசியைப் பார்த்தால் விலை ஒரே மட்டமாகத்தான் இருந்து கொண்டிருந்தது என்று புள்ளிவிவரங்கள் சொல்லுகின்றன. என்னுடைய நண்பர் திரு. ஆர். வி. சாமிநாதன் அவர்கள் சொன்னார்கள், இந்த விலைவாசியை குறைப்பதற்கு, ஆளும் கட்சியிலுள்ளவர்கள், எதிர்க் கட்சியிலுள்ளவர்கள் ஆகியவர்கள் அடங்கிய ஒரு கமிட்டியை நியமித்து பரிசீலனை செய்யவேண்டும் என்று. நான் கூறுவது என்னவென்றால், எந்த விதமான கமிட்டி போட்டு எந்த விதமான பரிசீலனை செய்தாலும், திட்டமிருக்கும் வரை விலைவாசி உயர்வும் ஓரளவு இருந்துகொண்டேதானிருக்கும். வேண்டுமென்றால், விலைவாசி உயர்வு என்பது என்ன, விலைவாசி எதனால் உயர்கின்றது, எந்த அளவுக்கு ஏற முடியும் என்பதைப்பற்றி விரிவாக நண்பர்களுக்கு எல்லாம் ஒரு பயிற்சி அளிப்பதற்குத் தான் இந்த கமிட்டி பயன்படும் என்று நம்புகிறேன்.

இன்னும் சில உறுப்பினர்கள் மாநில மத்திய சர்க்காரின் நிதி பங்கீடு பற்றி குறிப்பிட்டார்கள். நண்பர் கல்யாணசுந்தரம் அவர்களும் இதைப்பற்றி பேசினார்கள். இதைப்பற்றி பட்ஜெட் வரும்போது விரிவாக சர்ச்சை செய்து கொள்ளலாம். நமது மூன்றாவது திட்டம் ரூபாய் 290 கோடியில் 190 கோடி ரூபாய் மத்திய அரசாங்கம் தான் கொடுக்கிறது. இது போதவில்லை என்றால், இனியும் கேட்டு வாங்கிக் கொள்ளலாம். கடனாகப் பெற வேண்டுமென்றாலும் கடனாக வாங்கிக் கொள்ளலாம். நாம் ஐந்து ஆண்டுகளுக்கு போட்டிருக்கும் திட்டத்தை மூன்று ஆண்டுகளில் நிறைவேற்றிக் கொடுத்தால் இன்னும் வேண்டிய பணத்தைக் கொடுப்பதற்கு மத்திய அரசாங்கம் தயாராக இருக்கிறது. ஆகவே இதைப்பற்றி குறை சொல்வதற்கு ஒன்றுமில்லை. மத்திய அரசாங்கத்திற்கு மட்டும் பணம் எங்கேயிருந்து வருகிறது? மாநிலங்களிலிருந்து தான் பணம் போகிறது. திட்டத்தில் சில பணிகளை மாநிலம் நடத்துகிறது, சில பணிகளை மத்திய அரசாங்கம் நடத்துகிறது. அந்த அளவில் தான் நிதி பங்கீடு முறை அமைந்துள்ளதே தவிர, மத்திய அரசாங்கம் மூட்டை கட்டி நம்முடைய பணத்தை எங்கோ அனுப்பிவிடப் போவதில்லை, அல்லது டெல்லியில் ஒளித்து வைத்து விடவும் போவதில்லை.

கடைசியாக, கவர்னர் அவர்களது உரையில் பல விஷயங்களைச் சேர்க்கவில்லையே என்று எண்ண வேண்டாம். சிறப்பான சில விஷயங்களை எடுப்பான அளவில் சொல்லியிருக்கிறார்கள். எல்லா விஷயங்களையும் இதில் சொல்லிவிட்டால், நாம் இங்கு சட்டசபை கூட்ட வேண்டிய தேவையே இல்லை.

பஸ் போக்குவரத்தை தேசியமயமாக்கவேண்டும் என்பது பற்றி குறிப்பிடவில்லை என்று சொன்னார்கள். இதைப்பற்றி பட்ஜெட் வரும்போது விரிவாகப் பேசுவோம். ஆனால் முதலாவதாக பஸ் போக்குவரத்தை தேசியமயமாக்கியது, 1947-ல் திரு. பிரகாசம் அவர்கள் காங்கிரஸ் சர்க்காரின் தலைவராக இருந்த காலத்தில்தான். ஆகவே தேசியமயமாக்குவது காங்கிரஸ் சர்க்காரின் கொள்கைக்கு முரணானது என்று சொல்வது சரியல்ல என்பதை இந்தச் சமயத்தில் ஞாபகமூட்டிக்கொண்டு இப்பொழுது என் உரையை முடித்துக்கொள்கிறேன். வணக்கம்.

* SRI T. L. SASIVARNA THEVAR: மதிப்பிற்குரிய சபா நாயகர் அவர்களே, நம் மாநில கவர்னர் பெருமான் அவர்கள் உரை மீது எதிர்க்கட்சியின் சார்பில் கொண்டுவந்திருக்கின்ற தீர்மானத்தின் மீது, அதை ஆதரித்து சில வார்த்தைகள் கூற ஆசைப்படுகின்றேன். கவர்னர் பெருமான் அவர்களுடைய உரையானது, அவரால் பேசப்படுவதல்ல என்பதை நாம் அறிவோம். அரசாங்கத்தினுடைய கொள்கையைப் பற்றி கவர்னர் பெருமான் அவர்கள் எடுத்துக் கூறியிருக்கின்றார்கள். அண்மையில் நடந்த பொதுத் தேர்தலைப் பற்றியும் அவர்கள் குறிப்பிட்டிருக்கிறார்கள். இதில் நடந்த பல காரியங்களைப் பற்றி இங்கு மூன்று தினங்களாக பேசப்பட்டு வருவதை இங்குள்ள அங்கத்தினர்கள் அறிவார்கள். நம் மாகாணத்தில் பருவ மழை பெய்யத் தவறிவிட்டது. ஆனால் பண மழை பெய்ய தவறவில்லை என்பதை ஞாபகப்படுத்த விரும்புகிறேன். இதற்கு காரணம் நவீன வருண பகவான் நமது முதலமைச்சர் தான் என்பதையும் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகின்றேன். இங்குள்ள பல நண்பர்கள் ஒரு விஷயத்தை மட்டும் குறிப்பிட மறந்து விட்டார்கள். நமது மாகாணத்திலிருந்து பாராளுமன்றத்திற்கு முதல் முதலாக போட்டியின்றி ஒரு அங்கத்தினர் தேர்ந்தெடுக்கப்பட்டார் என்பதை ஞாபகமூட்ட விரும்புகிறேன். ஆனால் எந்த முறையில் அவர்கள் போட்டியின்றி தேர்ந்தெடுக்கப்பட்டார் என்பது எல்லோருக்கும் தெரிந்த விஷயம். பல லட்சக் கணக்கான ரூபாய் செலவு செய்துதான் போட்டியின்றி தேர்ந்தெடுக்கப்பட்டதாக எங்கள் பக்கத்தில் பரவலாக ஒரு செய்தி இருந்து வருகிறது என்பதை நான் ஞாபகமூட்ட விரும்புகிறேன். இரண்டாவது, இங்கேயுள்ள சில அன்பர்கள் தேர்தலில் பல இடங்களில் பணம் கொடுத்துத்தான் வோட்டு வாங்கப்பட்டது என்றும் சொல்லப்பட்டது. இது சகஜமான செய்தி. பணம் கொடுத்துத்தான் பல இடங்களில் வோட்டு வாங்க முடிந்தது என்பதை நண்பர் கோசல்ராம் கூட ஒப்புக் கொண்டார்கள். (குறுக்கீடு) . . . பணம் கொடுப்பது சகஜம் என்ற அளவில் அவர்கள் ஒப்புக்கொண்டார்கள் என்று நினைக்கிறேன்.

[Sri T. L. Sasivarna Thevar] [27th April 1962

என்னுடைய பிராந்தியத்தைப் பொறுத்த வரையில் பணம் அதிகமாகக் கொடுக்கப்பட்டுத்தான் வோட்டு வாங்கப்பட்டது என்பதை என்னால் சொல்ல முடியும். சம்பிரதாயத்திற்காக வேண்டுமென்றால் இல்லை என்று சொல்லிவிடலாம். இப்படி நடந்து கொண்டிருந்தால் உண்மையான ஜனநாயகம் நாட்டில் வளர முடியுமா என்பது தான் சந்தேகம். இம்மாதிரியான நிலைமை இருந்து கொண்டிருந்தால் இனிமேல் வருகின்ற 67-வது வருட தேர்தலில் பணம் இல்லாமல் ஒருவர் தேர்தலுக்கு நிற்க முடியுமா என்பது சந்தேகமாகவே இருக்கிறது. எங்கள் பக்கத்தில் எங்களுக்கு எல்லாம் 4,000 ரூபாய்க்குள் தான் செலவு செய்யவேண்டிய நிலைமை ஏற்பட்டது. ஆனால் காங்கிரஸ் கட்சி சார்பாக போட்டியிட்ட அங்கத்தினர்களிடையே அதிகப்படியான பணப் புழக்கம் இருந்தது என்பதை என்னால் சொல்லாமல் இருக்க முடியாது. அடுத்தபடியாக, உத்தியோகஸ்தர்கள் பாரபட்சமாக நடந்து கொண்டார்கள் என்று இங்கு சொல்லப்பட்டது. இது சம்பந்தமாக ஒரு புகார் ஜாபிதாவும் இங்கு கொடுக்கப்பட்டது. நான் மேலும் ஒரு புகார் ஜாபிதாவை கொடுக்க விரும்பவில்லை. அதிகாரிகள் அதிகாரத்தை துஷ்பிரயோகம் செய்தார்கள், அரசாங்கம் அதற்கு ஆதரவாக இருந்தது என்பதற்கு நான் ஒரு புதிய குற்றச்சாட்டை சொல்ல விரும்புகிறேன். அதாவது ஏற்கனவே தண்டனைக்
10-00 a m குட்பட்டு, சிறையிலே இருக்கக்கூடிய கைதிகளை பெரோலில் கொண்டு வந்து எங்களுடைய தொகுதியிலே காங்கிரஸ் சார்பாக பிரசங்கம் செய்யச் செய்தார்கள். முதுகுளத்தூர் கலவரம் சம்பந்தமாக பலர் ஜன்மக் கைதிகளாக சிறையில் இருந்தார்கள். அதிலே ஒருவரை பெரோலில் விடவேண்டுமென்று அவர்மேல் அக்கறை எடுத்துக்கொண்டு போலீஸ் அமைச்சர் அவர்களைக் கேட்டதற்கு, அப்படியே விடுதலையும் செய்தார்கள். ஆனால் அதே இடத்தில் இவர்களும் சிலரைக் கொண்டுவந்து, காங்கிரஸ் பிரச்சாரமே செய்யச் சொன்னதைப் பார்த்த உடனே எங்களுக்குத் தூக்கிவாரிப்போட்டது. பெரோலில் வரக்கூடியவர்கள் அரசியல் காரணமாக எதிலும் பங்கெடுத்துக்கொள்ளக் கூடாது என்று கண்டிஷன் இருக்குமென்று நான் நினைக்கிறேன். என்னுடைய தொகுதியிலே காங்கிரஸ் கட்சிப் பிரசாரம் எந்த வகையிலே எல்லாம் நடந்தது என்பதை ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். இமானுவேல் கொலை வழக்கிலே சம்பந்தப்பட்டவர்களையெல்லாம்கூட கொண்டு வந்து காங்கிரஸ் கட்சி சார்பாகப் பிரச்சாரம் செய்தார்கள் என்பதை இந்த நேரத்தில் உங்களுக்கு ஞாபகப்படுத்திக் கொள்கிறேன். இரண்டாவதாக, இப்படிப்பட்ட அகதிகள் எல்லாம் எங்கள் தலைவர் தேவர் அவர்களை எப்படியெல்லாம் மிகவும் கண்ணியக் குறைவாக பேசியிருக்கிறார்கள் என்பதையும் இந்த நேரத்தில் உங்களுக்கு ஞாபகப்படுத்திக் கொள்ள விரும்புகிறேன். அதிலும் அரசாங்கத்தார் தங்கள் அதிகாரத்தை வைத்துக்கொண்டு, அதிகாரிகளை யெல்லாம் எந்த அளவுக்கு பிரச்சாரம் செய்வதற்கு உபயோகப்படுத்திக் கொள்ள முடியுமோ அந்த அளவுக்கு உபயோகப்படுத்திக் கொண்டார்கள். இதற்குமேலும் என்ன குற்றச்சாட்டுகளைச் சொல்ல முடியும் என்பது எனக்குச் சந்தேகமாக இருக்கிறது. பல குற்றங்கள்

செய்தார்கள். அவைகள் அனைத்தையும் சொல்லி என்ன பிரயோஜனம்? தங்களுக்குள்ள மெஜாரிடி பலத்தில் பதில் சொல்லாமல் போனாலும் போகலாம்.

முக்கியமாக, தேர்தல் சமாதானமாக நல்ல முறையிலே நடந்தது என்று கவர்னர் அவர்கள் குறிப்பிட்டிருக்கிறார்கள். இதிலே இந்தப் போஸ்டல் பாலட்டை பற்றிக் குறிப்பிட விரும்புகிறேன். தேர்தல் காலத்திலே அந்த வேலைகளை கவனித்த உத்தியோகஸ்தர்கள் ஓட் அளிக்க வசதி செய்வதற்காக அவர்களுக்கு இந்த போஸ்டல் பாலட் முறை ஏற்பாடு செய்யப்பட்டது. இப்படி ஓட் அளிப்பதை அவர்கள் 2, 3 தினங்களுக்கு முன்னதாகவே அனுப்பி விடக்கூடிய ஒரு வசதி இருந்தது. அதையெல்லாம் ஆளும் கட்சியினர் எந்த அளவுக்கு தெரிந்துகொள்ள முடியுமோ அந்த அளவுக்கு அவர்களுக்கு வசதி இருந்தது. அதேபோல் காங்கிரஸார் நேரிலே சென்று பலவந்தமாக தங்கள் சார்பாக அவர்களை வாக்களிக்கும்படி செய்வதற்கு, வாக்காளருக்கு விரோதமாக வாக்களிப்பதற்கு மனமிருந்தாலும், அப்படிச் செய்ய முடியாத அளவுக்கு வசதி இருந்தது என்பதை ஞாபகப்படுத்திக்கொள்ள விரும்புகிறேன். இரண்டாவதாக, மதுரை நகர பாராளுமன்றத் தொகுதியிலே தவறு நடந்திருக்கிறது. அது என்ன தவறு என்பதையும் சொல்கிறேன். அதாவது போஸ்டல் பாலட் 3000, 4000 அனுப்பியதில் அசெம்பிளி தொகுதிக்கு மட்டும் கொடுக்கப்பட்டு, பார்லிமென்ட் தொகுதிக்கு அனுப்பாமல் நிறுத்தப்பட்டிருக்கிறது. அதேபோல் பெரியகுளம் பார்லிமென்ட் தொகுதியில் காங்கிரஸ் கட்சிக்காரர்கள் . . . .

THE HON. SRI M. BHAKTAVATSALAM: கனம் சபாநாயகர் அவர்களே, இந்த விவாதத்திலே கனம் அங்கத்தினர் குறிப்பிடுகின்ற விஷயங்களிலே ஏதாவது ஒழுங்கீனங்கள் இருந்தால், அதைப்பற்றி நான் என்ன பதில் சொல்ல முடியும்? நான் எவ்வாறு பதிலளிக்க முடியும் என்று எதிர்பார்க்க முடியும்? அப்படி ஏதாவது குறைகள் இருந்தால் எலெக்ஷன் பெடிஷன் போட்டு, அதைப்பற்றி எலெக்ஷன் டிரிபியூனலிலோ அல்லது கோர்ட் மூலமோ விசாரணை செய்யவேண்டும். ஆகவே, நான் அதைப் பற்றி எவ்வித தகுந்த பதிலும் சொல்ல முடியாது, சொல்லத் தெரியாது என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

SRI T. L. SASIVARNA THEVAR: அது சம்பந்தமாக இன்னும் சில நிமிஷம் . . . .

THE HON. SRI K. KAMARAJ: எல்லோருக்கும் 5 நிமிஷம் என்று சொல்லும்போது, உங்களுக்கும் 5 நிமிஷம் தான்.

SRI T. L. SASIVARNA THEVAR: கவர்னர் பெருமான் உரையிலே சொல்ல மறந்த சில விஷயங்களைக் குறிப்பிடுகிறேன். எல்லா விஷயங்களையும் சொல்வதற்கு நேரமில்லை. முக்கியமாக, பெரிய திட்டங்களைப் பற்றியெல்லாம் அவர் சொல்வதற்கு மறந்து இருக்கிறார்கள். நேற்றுப் பேசிய எனது நண்பர் திரு. கல்யாணசுந்தரம் அவர்கள் சொல்லியபடி முக்கியமாக சேதுசமுத்திர

திட்டத்தைப் பற்றி ஒன்றும் குறிப்பிடவில்லை. அந்த சேது சமுத்திர திட்டத்தை ஒரு வேளை சமுத்திரத்திலேயே தூக்கிப் போட்டு விட்டார்களோ என்று நான் நினைக்கிறேன். அதேபோல், ராமநாதபுரம் பகுதி சம்பந்தப்பட்ட மட்டில் மேல்பெரியாறுத் திட்டம், (அப்பர் பெரியார் ஸ்கீம்) என்னும் திட்டத்தை நிறைவேற்றும்படி சென்ற சட்டசபையிலேகூட நாங்கள் வற்புறுத்தியிருக்கிறோம். அதைப்பற்றிகூட சென்ற டிசம்பர் மாதம் முன்னுள் கேரள சர்க்காருக்கு நமது முதல் அமைச்சர் அவர்கள் இந்த மேல் பெரியாறு திட்டத்தைப் பற்றி காலதாமதமாவதைக் குறிப்பிட்டு கடிதம் எழுதியதாகப் பத்திரிகையில் படித்தேன். அது எந்த நிலையில் இருக்கிறது என்பதைத் தெரிந்து கொள்ள ஆசைப்படுகிறேன். சமீபத்தில்கூட ஸோனல் கவுன்ஸில் கூட்டம் கூடவிருக்கிறது. அதிலே இந்த மேல் பெரியாறு திட்டத்தைக் கொண்டு வந்து, அங்கு ஒரு அணையைக் கட்டிக்கொடுத்தால் கிழக்கு ராமநாதபுரம், இன்னும் மதுரையில் ஒரு சில பகுதிகள் நீர்ப்பாசன வசதி பெறும் என்பதைச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

அதேபோல், விலைவாசி ஏற்றத்தைப் பற்றி எதுவும் குறிப்பிடவில்லை. அதை அடியோடு மறந்து விட்டிருக்கிறார்கள். இன்றுள்ள நிர்வாகத்திலே லஞ்ச ஊழல் அதிகரித்திருக்கிறது. இதைப்பற்றி எல்லாம் சவிஸ்தாரமாக சொல்லப்படும் என்று எதிர்பார்த்து, ஒன்றும் இல்லாததால் குறை கூருமல் இருப்பதைத் தவிர வேறு வழியில்லை. ஆகவே, இப்படி பல குறைகள் உள்ள கவர்னர் பெருமான் அவர்கள் உரையை நான் ஆதரிப்பதற்கில்லை என்று தெரிவித்துக்கொண்டு நான் முடித்துக் கொள்கிறேன். வணக்கம்.

* SRI G. GOMATHI SANKARA DIKSHITAR : மேன்மைமிக்க சபைத்தலைவர் அவர்களே, கவர்னர் பெருமான் உரைக்கு வந்தனம் கூறும் தீர்மானத்தை ஆதரித்துப் பேசுவதற்கு வாய்ப்பு ஏற்படுத்திக் கொடுத்ததற்கு முதலில் உங்களுக்கு என் வணக்கத்தைத் தெரிவித்துக் கொண்டு சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். கவர்னர் அவர்கள் இந்த வருஷத்தில் அரசாங்கம் எவ்வாறு நடக்கும், எத்தகைய சீரிய கொள்கையின் அடிப்படையில் அரசாங்கம் நடைபெறும் என்ற முறையிலே கொள்கையை விளக்கினார்கள். முதல்முதலாக இந்த அமைச்சர் அவையைப்பற்றி குறிப்பிடும்போது, தமிழ்நாடு பெருமைப் படும்படியாக கடந்த 10 ஆண்டு காலமாக நம்முடைய திட்டங்கள் நல்லமுறையில் நிறைவேற்றப்பட்டு, மக்களுடைய பாராட்டுக்கும், ஏன் இந்தியாவிலுள்ள மற்ற ராஜ்யங்களின் பாராட்டுக்கும் ஆளாகி இருக்கும் இந்த மந்திரிசபை மிகவும் போற்றக்கூடியது என்பதைத்தான் கவர்னர் பெருமான் அவர்கள் விளக்கி இருக்கிறார்கள். தமிழர்களின் இந்த ஒப்புயர்வற்ற சுதந்திரத்திற்காக அரும்பாடுபட்ட நமது திரு. காமராஜ் அவர்கள் பெயரால் நடைபெறுகின்ற இந்த மந்திரிசபையைப் பற்றி நாம் பாராட்டக் கடமைப்பட்டிருக்கிறோம். அதைத்தான் கவர்னர் பெருமான் அவர்கள் தமது

27th April 1962] [Sri G. Gomathi Sankara Dikshitar]

உரையில் எடுத்துக் கூறியிருக்கிறார்கள். பத்து வகுப்புகள் முடிய இந்த தமிழ்நாட்டிலே உள்ள எல்லாக் குழந்தைகளுக்கும் இலவசமாக கல்வி அளிக்கும் திட்டம், மதிய உணவுத் திட்டம், இன்னும் வயது வந்தவர்களுக்கு உபகாரச் சம்பளம் அளிக்கும் திட்டம ஆகிய இவைகளை யெல்லாம் சோஷலிச பாணியில் இயக்கக்கூடிய அரசாங்கமாதலால், இந்த மந்திரிசபை பெருமையாக விளங்குவதிலே யாரும் மறுக்க முடியாது. தேர்தலைப்பற்றி எதிர்க்கட்சி கூறக்கூடிய காலத்தில் அவர்கள் கருத்துப்படி எதை வேண்டுமானாலும் பேசிக் கொள்ளலாம். அதற்காக இந்த தேர்தல் நல்லமுறையிலே நடைபெறவில்லை என்றுகூட மாற்றுப் பிரச்சாரம் செய்யலாம். ஆனால் உண்மையாகவே, காந்திஜியின் அடிப்படை கொள்கைப்படி ஆட்சி நடத்தும் இந்த காங்கிரஸ் அரசாங்கம் நாட்டிலே சமாதானம் நிலைத்திருக்க வேண்டும், அன்பும், அஹிம்சையும் நாட்டிலே வளர வேண்டும், மக்கள் பொருளாதாரத் துறையிலே வளப்படுவதற்காக எந்த அடிப்படையிலே பாடுபடவேண்டும் என்கிற முறையிலேதான் ஆட்சி செய்துகொண்டு வருகிறது. அந்த வகையிலே தான் பொதுத் தேர்தலையும் நல்லமுறையிலே நடத்தி இருக்கிறது. என்பதை உலகமே போற்றுகிறது. எதிர்க்கட்சிக்காரர்கள் தங்களுக்கு இயற்கையாக இருக்கக்கூடிய பார்வையின் மூலம் குறைகள் சொல்லலாம். ஆனால் இந்த மூன்றாவது பொதுத் தேர்தல் நன்கு நடைபெற்றிருக்கிறது. சமாதானமாக நடைபெற்றிருக்கிறது. முக்கியமாக என்னுடைய தொகுதியை எடுத்துக் கொண்டால், திராவிட முன்னேற்றக் கழகக் கட்சிக்காரர்களும், கம்யூனிஸ்டு கட்சிக்காரர்களும் வகுப்புவாத அடிப்படையிலே தான் தேர்தல் வேலையை நடத்தி வந்தார்கள் என்று சொன்னால் அது மிகையாகாது. ஆகையால் பொதுத் தேர்தல் நல்லமுறையிலே நடைபெற்று இருக்கிறது என்று கவர்னர் பெருமான் பாராட்டி இருப்பது மிகவும் நியாயம்.



இன்னும் இந்த ஆண்டிலே அரசாங்கம் என்னென்ன காரியங்களைச் செய்யப்போகிறது என்பதை குறிப்பாக கவர்னர் அவர்கள் குறிப்பிட்டிருக்கிறார்கள். முக்கியமாக என்னுடைய தொகுதியைப் பற்றி நான் கூற விரும்புகிறேன். பாபநாசம் டாம் மின்சாரத்திற்கு உபயோகப்படக்கூடிய ஒரு அணைக்கட்டாக இருந்தபோதிலும், நீர்ப்பாசன வசதிக்காகவும் அந்த இடத்திலே அதாவது சேர்வையாற்றிலே ஒரு சிறிய அணைக்கட்டு கட்டினால், தாம்பரபரணி பாசனத்தினால் அதைச் சுற்றியுள்ள விவசாயிகளுக்கு நீர்ப்பாசன வசதி செய்து கொடுக்க முடியும் என்பதை இந்தச் சந்தர்ப்பத்திலே தெரிவித்துக் கொண்டு, தொழிலாளர்கள் வாழ்கின்ற விக்கிரமசிங்கபுரத்திற்கு இந்த மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திலே ஏற்கனவே இருக்கக்கூடிய குடிதண்ணீர் திட்டத்தை விரைவிலே செயல்படுத்த வேண்டுமென்றும் கேட்டுக் கொள்கிறேன். மின்சாரத் துறை அபிவிருத்தி அடைந்திருந்தாலும், பம்ப் செட்டுகளுக்கு லைசன்ஸ் கொடுப்பதிலே காலதாமதமாகிறது. முக்கியமாக ஹரிஜனங்கள் வாழ்கின்ற இடங்களுக்கு எல்லாம் மற்ற இடங்களைக்

காட்டிலும் மின்சார வசதி செய்து கொடுக்க வேண்டும். இவைகளை யெல்லாம் மிகவும் விரைவிலே செய்துகொடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டு, என்னுடைய உரையை முடித்துக் கொள்கிறேன்.

* SRI R. THANGAVELU: கனம் சபாநாயகர் அவர்களே, கவர்னர் பெருமான் நல்லுரைக்கு நன்றி காட்டும் வகையில் சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். கவர்னர் பெருமான் பேருரைக்கு திராவிட முன்னேற்றக் கழகம் வராமல் இருந்தது பார்லிமெண்டரி ஜனநாயகத்திற்கு முரண்பட்ட செயல் என்றே நான் கருதுகிறேன். அதற்கு அவர்கள் கூறிய காரணம், கவர்னர் பதவி தேவையற்றது, நாட்டினுடைய வருமானம் ரூ. 10,000 பறிபோய் விடுகிறது, குடியரசுத் தலைவரின் நியமனப் பதவி அது என்பது தான். 'வடவர், தென்னவர்' என்று நாங்கள் கருதி வராமல் இருக்கவில்லை' என்று விளக்கம் கூறினார்கள். அதே திராவிட முன்னேற்றக் கழகத்தைச் சார்ந்த ஒரு அங்கத்தினர் நேற்று மேல் சபையில் பேசிய பேச்சை இந்த மக்கள் மன்றத்தின் கவனத்திற்கு ஈர்க்க விரும்புகிறேன். அந்த அங்கத்தினர் கனம் ஸ்ரீ எம். ஜி. ராமச்சந்திரன் அவர்கள். அவர் 'காமராஜ் அவர்கள் கவர்னராக இருப்பாரானால் எங்களுக்கு ஆட்சேபணை இல்லை. வடவர் ஒருவர் இருப்பதை நாங்கள் ஆட்சேபிக்கிறோம்' என்று மேல்சபையில் கூறினார். மேல் சபையில் பேசியதொன்று, கீழ் சபையில் பேசிய பேச்சு ஒன்று. மக்கள் மத்தியிலே பேசியது பிறிதொன்றாக இருக்கிறது என்ற காரணத்தைக்காட்டி, அவர்களுக்குள்ளேயே கருத்து வேற்றுமை இருக்கிறது, கொள்கை குழப்பம் இருக்கிறது, முன்னுக்குப் பின் முரணான கருத்து இருக்கிறது என்று சட்ட மன்றத்தில் அவர்கள் மீது நான் குற்றம் சாட்ட விரும்புகிறேன்.

மேலும் எதிர்க்கட்சி அங்கத்தினர் ஒருவர் பேசும்பொழுது கவர்னர் பதவி தேவையில்லாதது, ஆட்டுக்கு தேவையில்லாத தாடி என்று ஒரு உவமையுடன் கூறிய நிகழ்ச்சியை நான் இந்த மன்றத்தில் நினைவுப்படுத்த விரும்புகிறேன். ஆட்டுக்கு தாடி ஆண்டவன் படைத்தது, நாட்டுக்கு கவர்னர் பதவி அரசியல் சட்டத்தின் தீர்ப்பு என்பதை நான் மிகவும் தாழ்மையோடு கூறிக் கொள்ளுகிறேன்.

கவர்னர் உரையை எதிர்த்துப் பேசிய எதிர்க்கட்சி அங்கத்தினர்களெல்லாம் கவர்னர் உரையில் ஹரிஜன முன்னேற்றம் இடம் பெறவில்லை என்று குறை கூறினார்கள். ஹரிஜன முன்னேற்றம் ஒரு மாவட்டத்தின் பிரச்னை என்றோ, அன்றி மாநிலப் பிரச்னை என்றோ இந்தியப் பேரரசு கருதவில்லை. ஹரிஜன முன்னேற்றத்தை ஒரு தேசீயப் பிரச்னையாக, அகில இந்தியப் பிரச்னையாக நம்முடைய இந்தியப் பேரரசு கவனிக்கிறது. எனவே தான், இந்த நாட்டின் அரசியல் நிர்ணயச் சட்டத்தில் ஹரிஜன மக்களுக்கு நல்ல அரசியல் பாதுகாப்பு கொடுக்கப்பட்டிருக்கிறது என்பதை நான் இந்த மன்றத்தில் பெருமையோடு கூறிக்கொள்ள விரும்புகிறேன். எனவே ஹரிஜன மக்கள், என்றும் பழுத்த அனுபவமும் மிகுந்த ஆற்றலும் உள்ள தமிழ் நாட்டு அமைச்சர் அவைக்கு மிகவும் நன்றி உள்ளவர்களாக இருக்கிறார்கள் என்பதை தாழ்மையுடன் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக, தஞ்சாவூர் தீவிர சாகுபடித் திட்டத்தை அம்மாவட்டத்தின் மற்ற பகுதிகளுக்கும் சர்க்கார் விஸ்தரிக்கப் போகிறார்கள் என்று உரையில் கண்டிருக்கிறது. இந்தத் திட்டம் விஸ்தரிக்கப்படப்போகிறது என்பதைக் காணும்பொழுது உண்மையில் நான் மகிழ்ச்சி அடைகிறேன். ஆனால், தீவிர சாகுபடி திட்டத்தின் கீழ் விவசாயப் பெருங்குடி மக்களுக்கு கடன், ரசாயன உரம், மான்யம், இவைகள் காலாகாலத்தில் கிடைக்க வழி வகை செய்தால், உழவர் கரங்கள் பலப்பட்டு, நாட்டில் வளம் பெருகும், கொழிக்கும் என்பதை மிகவும் தாழ்மையுடன் சர்க்காரின் கவனத்திற்குக் கொண்டு வர விரும்புகிறேன்.

மேலும் கவர்னர் பெருமான் உரை என்னைப்போன்ற புதியதாக சட்ட மன்றத்திற்கு வந்திருக்கிற அங்கத்தினர்களுக்கு மிக நல்ல அறிவுரை என்று நான் அதை ஏற்றுக்கொள்ளுகிறேன்.

Political ideologies may appear to divide you, but please bear in mind that you are all toiling for the common purpose of ensuring the fair administration of the State— என்று அவர்கள் கூறியிருப்பது சட்டமன்றத்திலுள்ள எங்களுக்கெல்லாம் ஒரு வழிகாட்டியாக, அறிவுரையாக இருக்கிறது என்று நான் கருதுகிறேன். குறிப்பாக, சுருங்கக்கூறுமிடத்து கவர்னர் பெருமான் அவர்களின் பேருரை ஆவடியில் கண்ட சமதர்ம சமுதாயத்தை உருவாக்கவும், நாட்டில் இருக்கிற வறுமை, வேலையில்லாத் திண்டாட்டம் போன்றவைகளை தீர்த்து வைக்கும், பிணி தீர்க்கும் பெரு மருந்தாக விளங்குகிறது என்று கூறி, என்னுடைய வார்த்தைகளை முடித்துக்கொள்ளுகிறேன்.

* SRI S. MADHAVAN: மதிப்பிற்குரிய சட்ட மன்றத் தலைவர் அவர்களே, கவர்னர் பெருமான் அவர்களின் உரையில் தொழில் வளம் பெருகியிருப்பது குறிப்பிடப்பட்டிருக்கிறது. நேற்று ஒரு கேள்விக்கு பதில் அளிக்கையில் ஒரு மாவட்டத்திற்கு ஒரு கூட்டுறவு நூற்பு ஆலை ஏற்படுத்த முயற்சி செய்து வருகிறோம் என்று தொழில் அமைச்சர் அவர்கள் குறிப்பிட்டார்கள். அதிலே ஒரு துணைக்கேள்வி கேட்டபொழுது தவறாக கேட்டதினால், விளக்கத்தை பெறமுடியாமல் போய்விட்டது. கூட்டுறவு நூற்பு ஆலை பொதுத் துறையிலே ஆரம்பிப்பது யாவரும் அறிந்த செய்தி தான். அதற்குத் தேவைப்படுகிற 14 லட்சம் ரூபாய் சேகரிப்பது கஷ்டமாக இருப்பதின் காரணமாக, ஏற்கனவே மில் ஆலை முதலாளிகளாக இருக்கும் சில பேர்கள் 'Chief promoters' என்ற முறையிலே நூற்பு ஆலையில் பங்கு பெறுவதற்கு வாய்ப்பு இருப்பதாகக் தான் கேள்விப்படுகிறேன். அது எந்த அளவுக்கு உண்மை என்று அறிய ஆசைப்படுகிறேன்.

ஆட்சி பீடத்தில் இருக்கும் நண்பர்கள் சிலர் தேர்தல் மிகவும் நல்ல முறையில் நடைபெறவில்லை என்று குறிப்பிட்டார்கள். என்னுடைய பகுதியிலிருந்து வெற்றி பெற்றிருக்கும் சனம் ஆர். வி. சுவாமிநாதன் அவர்கள் திராவிட முன்னேற்றக் கழகத்தைப்பற்றி, சிவகங்கையில் திராவிட முன்னேற்றக் கழகம்

எப்படி நடந்துகொண்டது என்பதைப் பற்றி குறிப்பிட்டார்கள். அதிகாரிகளெல்லாம் எதிர்க்கட்சிக்கு ஆதரவு தநததாகவும், குறிப்பாக கனம காமராஜ் அவர்கள் தோறகவேண்டும் என்ற விருப்பத்தை ஒருவர் தெரிவித்ததாகவும் சொன்னார்கள். அது எந்த அளவுக்கு உண்மை என்பது எனக்குத் தெரியாது. ஒன்று மட்டும் தெரியும். கனம் காமராஜ் அவர்கள் எப்படியும் வெற்றி பெற்றுவிடுவார்கள் என்பது எங்கள் பகுதியிலே ஊர் அறிந்த ரகசியம். அந்த ரகசியத்தை புரிந்துகொள்ளாத ஒரு அதிகாரி இருந்திருப்பார் என்றால் அது உண்மையிலேயே வருந்தக்கூடிய செய்கையாகும். இன்னொன்றும் கனம் ஆர். வி. சுவாமிநாதன் அவர்கள் இங்கு தெரிவித்துக்கொண்டார்கள். அவர்களுடைய தொகுதியிலே திராவிட முன்னேற்றக் கழகம் எதிர்ப்பிரசாரம் செய்ததாகக் கூறினார்கள். அது உண்மை என்றே கூறிக்கொள்ள ஆசைப்படுகிறேன். ஆளும் கட்சியை எதிர்த்த கட்சிக்கு திராவிட முன்னேற்றக் கழகம் உதவி செய்ததிலே ஆச்சரியப்படுவதற்கு ஒன்றுமில்லை என்று நான் கருதுகிறேன். இன்னொன்று அவர் குறிப்பிட்டது திராவிட முன்னேற்றக் கழகம் ஏதோ அவரைப்பற்றி தாறுமாறாகப் பேசியது என்பது. என்ன பேசியது, எப்படிப் பேசியது என்ற விளக்கம் அவர் உரையிலே காணப்படவில்லை. ஒன்று மட்டும் நான் கூறிக்கொள்ள ஆசைப்படுகிறேன். அவரை எதிர்த்துப் போட்டியிட்டவர் அவருடைய சொந்த மருமகனுடன் உடன் பிறந்தவர். அந்த முறையில் அவரைப்பற்றியோ, அவர் குடும்பத்தைப்பற்றியோ திராவிட முன்னேற்றக் கழகம் பேசக்கூடிய வாய்ப்பு இல்லை என்பது வெளிப்படை. இன்னொன்றும் கூறிக்கொள்ள ஆசைப்படுகிறேன். ஒரு வேளை அவர் செய்த பிரசாரத்திற்காக மாற்றுப் பிரசாரம் திராவிட முன்னேற்றக்கழகம் செய்திருந்தால், அதில் ஆச்சரியப்படுவதற்கில்லை அவர் 'நான் வெற்றி பெற்றால் தமிழ் நாட்டு அமைச்சர் அவையில் இடம் கிடைக்கும்' என்று கூறினார். நாங்கள் அதற்கு மாற்றுப் பிரசாரம் செய்தோம். கனம் காமராஜ் அவர்கள் ஆர். வி. சுவாமிநாதன் அவர்களுக்கு உடனடியாக அமைச்சர் அவையில் இடம் கொடுக்கக் கூடிய அளவிற்கு ராஜதந்திரி அல்ல என்று நாங்கள் மேடையிலே பேசினோம். அதிலே தவறு இல்லை என்றே நான் கருதுகிறேன். ஆகையினால், யார் தவறாகப் பேசியது என்பது கனம் காமராஜ் அவர்களுக்கு நேரடியாகத் தெரியும்.

ஜனவரி 26-ம் தேதியன்று சிவகாசியில் நடைபெற்ற புனிதமான குடியரசு தினத்தன்று கனம் ஆர். வி. சுவாமிநாதன் அவர்கள் பேசியிருக்கிறார். அவர் பேசிய பேச்சை, அந்த வார்த்தைகளை நான் குறிப்பிட ஆசைப்படுகிறேன். 'ஒரு சொட்டு ரத்தத்திற்கு 9 சொட்டு ரத்தம்' என்ற முறையில் அவர் பேசியிருக்கிறார். இதை மாவட்ட போலீஸ் அதிகாரி ஒருவர் கனம் காமராஜ் அவர்களிடம் நேரிடையாக குறிப்பிட்டதாக நாங்கள் கேள்விப்படுகிறோம். அந்த முறையிலே அதிகாரிகள் நியாயமான முறையில் நடந்துகொண்டு அவரைப்பற்றி குறை கூறியிருப்பதால், அவர்கள் எதிர்க்கட்சிக்காரர்களுக்கு ஆதரவாக இருந்தார்கள் என்று கூறுவதில் பொருள் இல்லை என்று நான் கருதுகிறேன்.

27th April 1962] [Sri S. Madhavan]

என்னுடைய மாவட்டத்தைப் பொறுத்தவரையில் ராமனுதபுர மாவட்டம் மிகவும் பின்தங்கிய மாவட்டம் என்பதை எல்லா உறுப்பினர்களும் ஒப்புக்கொண்டுள்ளார்கள். கனம் காமராஜ் அவர்கள் எங்கள் பகுதியிலிருந்து வந்திருப்பதன் காரணமாக ஓரளவுக்கு அந்தப் பகுதி, அதுவும் மேற்கு ராமனுதபுரம் வளர்ந்து வருகிறது என்புதை ஒப்புக்கொண்டு, அதேமாதிரி கிழக்கு ராமனுதபுரம் பகுதியையும் சிறிது கண்கொண்டு பார்த்து, அங்கே தொழில் வளம் பெருகுவதற்கு வாய்ப்பை தேடித் தருவார்கள் என்று நினைக்கிறேன்.

விலைவாசிப் பெருக்கத்தைப்பற்றி பலதரப்பட்ட கருத்துக்கள் தெரிவிக்கப்பட்டன. விலைவாசி பெருக்கத்தைப்பற்றி நாங்கள் பொருளாதார தத்துவத்தை முன் வைக்க பேச விரும்பாவிட்டாலும், எங்களுடைய ஆசை, எதிர்க்கட்சியினுடைய ஆசை விலைவாசி குறைக்கப் படவேண்டும் என்பது தான். அந்த ஆசையை ஆளும் கட்சியில் உள்ளவர்கள் நிறைவேற்றவேண்டும், நிறைவேற்றுவார்கள் என்ற நம்பிக்கை தெரிவித்து, என்னுடைய பேச்சை முடித்துக்கொள்ளுகிறேன்.

* SRI M. CHELLIAH : கனம் சபாநாயகர் அவர்களே, கவர்னர் பெருமான் உரையை வரவேற்றுப் பாராட்டி, இந்த மன்றத்திலே ஒரு சில வார்த்தைகள் பேச விரும்புகிறேன். நடைபெற்ற பொதுத் தேர்தலிலே, கடமை, கண்ணியம், கட்டுப்பாடு, நேர்மை என்று உபதேசம் செய்து கொண்டிருக்கிற எதிர்க்கட்சியால் கொலைநடத்தப் பட்ட, ஸ்ரீவில்லிபுத்தூர் தொகுதியிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரு அங்கத்தினர் என்ற முறையிலே இந்த மன்றத்திலே பேசிக்கொண்டிருக்கிறேன். கொலை எதற்காக நடந்தது என்பது பற்றி சுருக்கமாக ஒரு சில வார்த்தைகள் சொல்ல ஆசைப்படுகிறேன். கொலையைப் பற்றி அதிகமாகப் பேசுவதற்கில்லை; ஏனென்றால், கோர்ட்டிலே கேஸ் நடந்து அந்த கேஸ் செஷனுக்கு கமிட் செய்யப்பட்டு இருப்பதால், அது பற்றி விவரமாகக் கூற விரும்பவில்லை. இருந்தாலும், என்ன காரணத்திற்காக அந்தப் பகுதியில் கொலை நடந்தது என்பது பற்றி சொல்ல விரும்புகிறேன். தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டியினரால் . . . .

MR. SPEAKER : அது கோர்ட்டிலே இருக்கிறது என்று கனம் அங்கத்தினரே கூறிவிட்டு அதைப்பற்றி அவரே எப்படி பேசலாம்? கவர்னர் உரைபற்றி பேசுமாறு கனம் அங்கத்தினரைக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

SRI M. CHELLIAH : அடுத்தபடியாக, எங்கள் தொகுதியிலே, ராமநாதபுரம் மாவட்டத்திலே, ஸ்ரீவில்லிபுத்தூர் தாலுகாவில் விவசாயிகள் மழையை நம்பியே இருக்கவேண்டியிருக்கும் சூழ் நிலை தான் இருக்கிறது. ஆகவே, மழை பெய்யவில்லையென்றால், பருவ மழை தவறிவிட்டால், விவசாயிகள் ரொம்பப் பாதிக்கப்படுகிறார்கள். ஆகவே, ஏற்கனவே சர்க்கார் கவனத்தில் இருக்கும் பிளவைக்கல் அணைக்கட்டு திட்டத்தை துரிதமாக எடுத்து நடத்துவதற்கு ஏற்பாடு செய்ய வேண்டுமென்று ஞாபகப்படுத்த விரும்புகிறேன். அது சம்பந்தமாக பல மாநாடுகள் போட்டும், மகஜர்கள்

[Sri M. Chelliah] [27th April 1962

அனுப்பியும் இருக்கிறார்கள் அந்தப் பகுதி மக்கள். ஆகவே, அந்த பிளவைக்கல் திட்டத்தை உடனடியாக எடுக்க வேண்டுமென்று உங்கள் மூலம் சர்க்காரைக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

எங்கள் பகுதியில், வத்ராயிருப்புக்கு வடக்கே சதுரகிரி மகாலிங்கம் கோவில் என்று இருக்கிறது. அங்கே வருஷத்திற்கு ஒரு முறை, ஆடி அமாவாசையன்று திருவிழா நடைபெறுகிறது. அதற்கு பல லட்சக்கணக்கான தமிழ்நாட்டு மக்கள் தரிசனம் செய்ய வருகிறார்கள். இந்தக் கோவில் வத்ராயிருப்பு என்ற இடத்திலிருந்து ஒன்பது மைலுக்கு வடக்கே இருக்கிறது. அதற்குப் போக சரியான போக்குவரத்து வசதி கிடையாது. கட்டை வண்டிகள்தான் போகமுடியும். ஆகவே, லட்சக்கணக்கான தமிழ் மக்கள் அங்கே வரும் சமயத்திலே மிக்க கஷ்டத்திற்குள்ளாகிறார்கள். வத்ராயிருப்பிலிருந்து பஸ்கள் ஏறிப் போகக் கூடிய அளவுக்கு அந்த ஒன்பது மைல் தூரத்திற்கும் நல்ல ரஸ்தாவை அமைத்து, சதுரகிரி மகாலிங்கம் கோவிலுக்கு பஸ் போக்குவரத்துக்கு ஏற்பாடு செய்ய வேண்டுமென்று சர்க்காரைக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

* SRI SAW GANESAN: கனம் சபாநாயகர் அவர்களே, கவர்னர் பெருமான் உரைக்கு நன்றி தெரிவிக்கின்ற தீர்மானத்தை நான் வரவேற்கிறேன். வரவேற்று அதோடு சில குறைகளையும் சேர்க்கவேண்டு மென்னும் பிரேரணையைக் கொடுத்திருக்கிறேன். நான் கருதுகிறேன், நம்முடைய அரசியல் சட்டப்படி கவர்னர் பெருமானின் உரைக்கு நன்றி செலுத்துவதை எதிர்ப்பது பொருந்தாது என்று. அந்த முறையிலேயே, அதை வரவேற்று அதன் பின் ஒரு திருத்தத்தையும் சமர்ப்பித்திருக்கிறேன். அதோடு கூட விஷயத்திற்கு வருமுன்னே, நமக்குள்ளே சுமுகமான சூழ்நிலை நிலவ ஒரு கட்டுப்பாட்டை ஏற்றுக்கொண்டு விட்டால், நல்லது என்றும் கூறுகிறேன். நாம் ஒவ்வொருவரும் பரஸ்பரம் தத்தம் கருத்திற்கே பிரதானம் கொடுத்து, பிறர் மீது பழிசுமத்திப் பொல்லாங்கு சொல்வதால் நல்ல சூழ்நிலை அமையாமற்போவதன் காரணமாக நமக்குள்ளே ஒரு நல்ல உறவு வளர்ச்சிக்கு வாய்ப்புக்கிட்டாது என்று நான் மனப்பூர்வமாக நம்புகிறேன். அதனால், தத்தம் கொள்கைகளை எடுத்து விளக்க, பிற கொள்கைகளை மறுத்துரைக்க, தரமான முறையை நாம் அமைத்துக்கொள்வது பயன் உள்ளதாகவும், பண்புடையதாகவும் கூட இருக்கும் என்று நான் மனப்பூர்வமாகக் கருதுகிறேன். ஆகவே, நாமெல்லாம், அரசாங்கத்தின் மீது கேவலம் குற்றம் சுமத்துவதையே கடமையாகக் கொண்டு இராமல், இன்னின்ன குறைகள், இதை இதை இப்படி இப்படிச் செய்ய வேண்டும், இது இது நன்மை என்றெல்லாம் எடுத்துக் காட்டுவது சிறப்பாக இருக்கும் என்பது என்னுடைய துணிவான எண்ணம். அது மட்டுமல்ல, அந்தக் கருத்திலேயே, அம்மையார், மதுரைத் தொகுதியிலிருந்து வந்திருக்கும் கனம் உறுப்பினர் லட்சுமிகாந்தம் அவர்கள் குறிப்பிட்டார்கள்: "எங்களுடைய கடமை, எங்கள் கட்சி செய்துள்ள நல்லவைகளைக் கண்டு பெருமைப்படுவது; உங்கள் கடமை எங்கள் தவறுகளை இடித்துக் காட்டிக் குறை கூறுவது" என்று. அவர்கள் சொன்னதை நான் திருப்தியோடு, நல்ல

27th April 1962] [Sri Saw Ganesan]

ஆறுதலோடு வரவேற்கிறேன். அந்தக் கருத்துக்கு நன்றியும் தெரிவிக்கிறேன். அப்படி இருந்தால்தான் இதை அவை முழுமை (நிறைவு) பூரணத்துவம் பெற முடியும். ஒரு சார்பிலே நன்மைகளை பெருமையாகச் சொல்லவும், மறு சார்பிலே தவறுகளைச் சுட்டிக்காட்டவும் நலமாக முடியும. இதனால், குறையும, நிறையும் பேசப் பெற்று, குறைகள் தவிர்க்கப் பெற்று, நிறைகள் வளர்க்கப் பெற்று நல்ல வாய்ப்பும், வசதியும் இருக்கும் என்று நான் மனப்பூர்வமாக கருதுகிறேன்.

விஷயத்திற்குப் போவதற்கு முன்னே, ஒரே ஒரு பதிலைமட்டும் சொல்ல விரும்புகிறேன். எங்களைப் பற்றிச் சொன்ன எல்லாவற்றிற்கும் பதில் சொல்ல விரும்பவில்லை. அதற்கு இதைச் சந்தர்ப்பமாக்கிக் கொள்வதும் சரியில்லை; இந்த சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக்கொள்ள விரும்பவுமில்லை. அதற்கு ஏன் பதில் சொல்ல வருகிறேன் என்றால், அது நாட்டிற்குத் தீமை என்று எண்ணுவதால்தான்—அதைச் சொன்ன அங்கத்தினர் பெயரையும் நான் உச்சரிக்க விரும்ப வில்லை—ஆளும் கட்சியைச் சேர்ந்த ஒரு கனம் அங்கத்தினர் நேற்று சொன்னார்: திராவிட முன்னேற்றக் கட்சியினரை இடித்துரைப்பதுபோல் பேசியதில், "அவர்கள் இந்த ஜாதியோடு உறவு கொண்டு இந்த ஜாதிக்காரர்கள் ஓட்டுகளைப் பெற்றார்கள், இவர்களோடு உறவு கொண்டு இந்த மதக்காரர்களின் ஓட்டுகளை பெற்றார்கள், சுதந்திரக் கட்சியோடு உறவு கொண்டு பார்ப்பனர்கள் ஓட்டுகளைப் பெற்றார்கள்" என்று குறிப்பிட்டார்கள். அதற்கு நான் கடுமையாகக் கண்டனம் தெரிவிக்கிறேன். அந்த எண்ணம் தேச வளர்ச்சிக்குப் பாதகமானது. தேசத்திற்கு அழிவைக் கொடுக்கும் என்பதைப் பணிவோடு அந்த அங்கத்தினருக்கு எடுத்துக்காட்ட விரும்புகிறேன். சுதந்திரக் கட்சி பார்ப்பனர் கட்சியா? எந்த கட்சியானாலும் யாராவதுதான் துவங்க வேண்டும். இந்த தேசத்தில் எங்குதான் ஜாதி இல்லை? யாரைச் சொன்னாலும் அவர் ஒரு ஜாதியைச் சேர்ந்தவராகவே இருக்கிறார். ஜாதி இல்லாதவர் யார்? இன்று காங்கிரஸ் கட்சியையே எடுத்துக் கொள்ளுங்கள். அது ஒரு காலத்தில், ராகவராவ் வீட்டில், சுப்பிரமணிய அய்யரால் துவக்கப்பட்டது. அதனால் அதை பார்ப்பனர் கட்சி என்று கூறலாமா? ஆகவே, ஜாதிப் பெயரில் பேசுவது நியாயம் இல்லை என்று பணிவோடு சொல்ல விரும்புகிறேன். அது தேசத்திற்கு விரோதமானது. ஜாதி மதம் என்கிற பேதங்கள் கூடாது என்று சொல்கிற குழுவிலே இருக்கும் அங்கத்தினர்கள் அம்மாதிரிச் சுட்டிக்காட்டிச் சொல்லுவது ஜாதி வெறியைக் கிளப்பிவிடக் கூடியதாக இருக்கிறது, இல்லையா? தயவுசெய்து அங்கத்தினர்கள் கவனிக்க வேண்டும், கருத்துக்களைப் பரிமாறிக் கொள்ளும்பொழுது கொள்கைகளைப் பற்றிப் பேசிக்கொண்டால் சூழ்நிலை நன்றாக அமையும், தரம் குறையாது; பண்பு கெடாது. என்னவர்களையும் சேர்த்தே எல்லோருக்கும் இதைப் பணிவோடு விண்ணப்பித்துக்கொள்ள விரும்புகிறேன். இனி விஷயத்திற்கு வருகிறேன். கவர்னர் உரையில் பலவற்றை குறிப்பிடவில்லை. எல்லாவற்றையும் குறிப்பிட முடியாது என்பது எனக்குத் தெரியும். எல்லாவற்றையும் குறிப்பிட வேண்டும் என்பது

முடியாத காரியம். அதை ஒப்புக்கொள்ளக்கூடியவர்களில் நானும் ஒருவன்தான். இருந்தாலும் அதை வைத்துக்கொண்டு பேசுவதையே எல்லோரும் பயன்படுத்திக்கொள்ள முயலுவார்கள். அந்த வகையில் நானும் ஒருவன்.

விலைவாசியைப்பற்றிப் பேசும்போது நம்முடைய நாட்டில் முதுகெலும்பாக இருக்கக்கூடியவர்கள், பெரும்பான்மையானவர்கள், விவசாயிகள் தாம். அவர்களைப்பற்றி சூசகமாகக்கூட உரையில் கூறப்படவில்லை. இதைப்பற்றி பலரும் எடுத்துக்கூறி இருக்கிறார்கள். அவர்களைப்பற்றி எவ்வளவோ சொல்ல நான் ஆசைப்படுகிறேன். நேற்றையதினம் பேசிய ஸ்ரீவில்லிபுத்தூர் கனம் அங்கத்தினர் "விலைவாசிகளைக் குறைப்பதற்கு என்ன செய்ய வேண்டும்? ஒருவரும் அதைப்பற்றி சொல்லவில்லையே" என்று சொன்னார். அதைப்பற்றி நான் சொல்லுகிறேன். விலைவாசிகளையெல்லாம் குறைக்க என்ன செய்யவேண்டும் என்றெல்லாம் சொல்வதற்கு முன் நமது ஆட்சி முறையில் இருக்கவேண்டிய ஒரு விஷயத்தை எடுத்துச் சொல்லவேண்டியதாக இருக்கிறது. நமது ஆட்சி முறையில் ஜாதியையோ அல்லது மதத்தையோ கருத்தில் கொள்ளாமல் யாவருக்கும் சமசந்தர்ப்பம் இருந்தால் எவ்வளவோ நலமாக இருக்கும். இதை நான் சொல்லும்போது ஒருவரும் இதற்கு ஆட்சேபணை சொல்ல மாட்டார்கள் என்றே நினைக்கிறேன். அரசியல் தொடர்பைக் கூடக் கவனிக்காமல் எல்லோருக்கும் சம சந்தர்ப்பம், சம வாய்ப்பு கிடைக்கத்தக்க ரீதியில் நடைமுறையிருந்தால் அன்றி பயன் கிடைக்காது. அந்த முறையில் அரசியல் அமைய வேண்டும். நமக்குள் கருத்து வேறுபாடுகள் இருக்கலாம். அதே நேரத்தில் எவ்வளவோ பேர்கள் நம் நாட்டில் கஷ்டப்படுகிறவர்கள், துன்பப்படுகிறவர்கள் இருக்கிறார்கள். அப்படி இருக்கக்கூடியவர்கள் ஹரிஜனங்கள், ஆதிவாசிகள். அந்த ஆதிவாசிகளை என்னுடைய தொகுதியில் 'மலையர்கள்' என்று சொல்லுவார்கள். அந்த ஆதிவாசிகளின் கூட்டத்தைச் சேர்ந்தவர்கள் மிகவும் பிற்பட்டவர்கள். அவர்கட்கு எந்தவிதத்திலும் சலுகைகள் கொடுக்க வேண்டியது அவசியம்தான். அப்படிப்பட்டவர்களுக்கு சலுகைகள் கொடுப்பதை யாரும் மறுக்க மாட்டார்கள்; எல்லோரும் ஒப்புக்கொள்வார்கள். அதைப்போலவே இந்த மாநிலம் பூராவும் அல்லது இந்த தேசம் பூராவும் செழித்து வளரவேண்டுமானால், முடிந்த வரையில் இந்த தேசத்தில் அந்த அந்த மாநிலத்தில் அல்லது மாவட்டங்களில் தனக்குத் தானே வேண்டியவற்றை நிறைவேற்றிக் கொள்ளக் கூடியவாறு வசதிகள் செய்துத்தர வேண்டும். அதையேதான் காந்தியடிகளும் சொன்னார்கள். அதாவது தன்னிறைவுத் திட்டம் **(Self-sufficiency scheme)** என்று. அதாவது உணவுப் பொருள்கள் இன்னும் மற்ற தேவைகளை அவரவர்களே தங்களுக்கு தேவையான அளவு தேடிக்கொள்ள வேண்டும். அதற்கு வேண்டிய வாய்ப்புக் கொடுக்க வேண்டும் என்று சொல்லி இருக்கிறார். அதை மனதில் வைத்துக்கொண்டு செய்யவேண்டும். அப்பொழுதுதான் அவரவர்களும் சுதந்திரமாக வாழ முடியும். ஆனால் இன்றைக்கு நடக்கக்கூடியவைகளைப் பார்த்தால் எல்லாம் அக்கொள்கைக்கு

27th April 1962] [Sri Saw Ganesan]

முரணுகத்தான் இருக்கின்றன என்பதை வருத்தத்துடன் சொல்லியாக வேண்டியதாக இருக்கிறது. இன்றைக்குப் பார்த்தால் அரசாங்கமே எல்லாவற்றையும் எடுத்து நடத்தவேண்டுமென்ற அளவில் போய்க்கொண்டிருக்கிறது. எல்லா தொழில்களேயும் அரசாங்கமே வைத்துக்கொள்ள வேண்டும் என்று நினைக்கிறது. அதன் காரணமாக பொருளாதாரத்தின் கடிவாளம் அவர்களுடைய கையில் போய்விடுகிறது. மற்றவர்கள் அரசாங்கத்தின் கையாளாக ஆகவேண்டியதாக இருக்கிறது. பொருளாதாரக் குதிரையை அரசாங்கமே ஓட்டிச் செய்யக்கூடிய அளவில் போய் விடுகிறது. தனிப்பட்டவர்கள் தாங்களே செல்ல முடியாமல் அரசாங்கம் செலுத்தக்கூடிய அளவில் போய்க்கொண்டிருக்கிறது. அந்த நிலைமையில் இன்றைக்கு எல்லாம் அமைக்கப்பட்டிருக்கிறது. இதனுல்தான் அரசாங்கத்தின் துறை பெருகி விரிந்து பரந்து நிற்கிறது. இதைச் சுருக்க வேண்டும் என்பதுதான் என்னுடைய கருத்து. அதேமாதிரிதான் விவசாயிகளுடைய கூட்டமும் இருக்கிறது. கூட்டுறவுப் பண்ணை கூட்டுப்பண்ணை என்று ஆரம்பித்தால் அவர்களுக்குத் தங்களுடைய நிலத்தின் மீது எந்தவிதமான பொறுப்பும், அக்கறையும் இல்லாமல் போய் விடுகிறது. எவ்வளவோ ஆண்டுகள் நிலப்பட்டா தனித்தனியாகத்தான் இருந்து வந்திருக்கிறது. அவற்றை இன்றைக்கு ஒன்று சேர்க்க வேண்டிய அவசியமே இல்லை. இவ்வளவு ஆண்டு காலமும் தனித்தனியாகவேதான் ஆண்டு வந்தார்கள்; பாடுபட்டு வந்தார்கள். தனித்தனியாகத்தான் பட்டா வைத்துக்கொண்டிருந்தார்கள். (கனம் ஸ்ரீ கே. காமராஜ் குறுக்கீடு.) அது சரிவர நடைபெறுவது இல்லை. எனக்குத் தெரியும் எங்கள் பக்கத்தில் பட்டா கூட்டாக இருந்து விவசாயம் செய்தபோது அந்தக் கூட்டில் ஒருவர் வாய்தா செலுத்தாமல் இருந்தால் அந்தப் பட்டாவிலுள்ள எல்லா நிலத்தையும் ஏலத்திற்குக் கொண்டுவந்து விட்டார்கள். அந்த நிலைமைதான் ஏற்படும் கூட்டுப்பண்ணை நடத்தினுல். ஒருவரின் தவறினுல் மற்றவர்களுடைய நிலமும் போய்விடக் கூடிய நிலைமை ஏற்படும். அவரவர்களுடைய நிலம் அவரவர்களுடைய கையில் இருந்தால்தான் அவர்களுக்கு அதில் அக்கறை ஏற்படும். இந்தமாதிரி அமைப்பு வருவதால்தான் விலைவாசிகள் உயருவதற்கும் ஏதுவாக இருக்கிறது. விலைவாசிகள் விஷம் போல ஏறிக்கொண்டு போகிறது. இப்பொழுதுள்ள பொருளாதார முறையில் இடப்படும் திட்டமும் ஏற்றுக்கொள்ள முடியாமல் இருக்கிறது. இந்தத் திட்டங்களினுல்தான் விலைவாசிகள் உயருகிறது என்று தோன்றுகிறது. சட்டமன்றங்கள் ஆளும் கட்சிக்கு அடங்கியதாக இருக்கிறது. ஆளும் கட்சியோ செல்வாக்கு மிக்க கட்சித் தலைவர்கள் சிலரால் இயக்கப்பெறும் ஒரு சிறு திட்டக் கமிஷனுடைய முடிவுகளை ஏற்றுக்கொண்டு அவர்கள் சொல்வதை அப்படியே நிறைவேற்றுவதாக இருக்கிறது. இங்கு கொண்டுவருவதெல்லாம் நிறைவேறி விடுகிறது. (கனம் ஸ்ரீ கே. காமராஜ்: இங்கே மெஜாரிட்டி இருக்கிறோம், அதனுல்தான் நிறைவேறுகிறது.) மெஜாரிட்டி இருப்பதால்தான் நிறைவேறுகிறது. அதைப்பற்றி ஆட்சேபணை இல்லை. அவர்களுடைய கட்சியைச் சார்ந்தவர்கள்தான் திட்டக் கமிஷனில் இருக்கிறார்கள்.

[Sri Saw Ganesan] [27th April 1962

அதனால்தான் அவர்கள் சொல்வதையே சட்டசபைகள் கேட்கின்றன. மத்திய அரசாங்கத்திலும் திட்டக் கமிஷன் கட்சியைச் சேர்ந்தவர்கள் இருப்பதால் எல்லாம் நிறைவேறுகின்றன. திட்டக் கமிஷனில் ஆளும் கட்சியைச் சேர்ந்தவர்களுடைய செல்வாக்கு இருப்பதால்தான் அவர்கள் கொண்டு வருவதெல்லாம் நிறைவேறுகின்றன. (கனம் ஸ்ரீ கே. காமராஜ்: திட்ட கமிஷனுக்கும், சட்ட சபைக்கும் சம்பந்தம் இல்லை.) சம்பந்தம் இல்லை என்று சொல்ல முடியாது. அரசாங்கத்தை நடத்தக்கூடிய கட்சியைச் சார்ந்தவர்கள் அதில் இருக்கிறார்கள். அதனால் சம்பந்தம் உண்டு என்றே சொல்லலாம். அதனால்தான் எதேச்சாதிகாரமாக இருக்கிறது. சர்வாதிகாரமாகத் திட்டமிடுவது ஜனநாயக முறைக்கும், நம்முடைய நாட்டின் பண்புக்கும் எவ்வளவோ முரண்பட்டதாக இருக்கிறது என்பதை நான் கூறிக்கொள்ள ஆசைப்படுகிறேன். இதைக் கூறுவதும் அவசியமாக இருக்கிறது. அது மட்டுமல்ல. காந்தியடிகளுடைய நெறிக்கும் இம்மாதிரியான முறை முரண்பட்டதாகும். (ஸ்ரீ எம். கல்யாணசுந்தரம் அவர்களின் குறுக்கீடு.) சுதந்திரா கட்சிக் கொள்கையை நான் சொல்கிறேன் என்கிறார். ஆம். சந்தோஷத்தோடு ஏற்றுக்கொள்கிறேன். அதைச் சொல்வதற்காகத்தானே நான் வந்திருக்கிறேன்? அவர் கட்சியை அவர் எப்படி எடுத்துச் சொன்னாரோ, அதே போல் என் கட்சியைக் குறித்து நான் சொல்வது நியாயம்தானே?

Sri M. KALYANASUNDARAM: சுதந்திரக் கட்சி என்று சொல்லிக் கொள்வதற்கே சங்கோஜப்பட்டுக் கொண்டிருந்தார்கள் முன்பு. இன்று முதன் முதலாகக் கட்சிக் கொள்கை என்று சொல்கிறீர்கள். அதற்காகச் சொன்னேன்.

Sri SAW GANESAN: எங்கள் கட்சியில் இருந்தவர்கள் "சங்கோசப்பட்டுக் கொண்டிருந்தார்கள்" என்பதை நான் அவ்வளவு ருசிக்க இல்லை என்று கண்ணியமாகச் சொல்கிறேன்.

இந்த முறை, கிட்டத்தட்ட காந்தியடிகளுடைய முறைக்குக் கூட முரண்பட்டதாக இருக்கும் என்பதை நான் புலப்படுத்திக் கொள்ள விரும்புகிறேன். இம்மாதிரியான திட்டம் இடுவதும் விலைவாசி உயர்வுக்கு ஒரு காரணம் என்பதை எந்தப் பொருளாதார நூல் வல்லுநரும் மறுக்க முடியாது என்பதை நானும் ஏதோ ஓரளவுக்கு உணருகிறேன்.

'விலைவாசி குறைவதற்கு என்ன செய்யவேண்டும் என்று யாரும் சொல்லவில்லையே' என்று சொன்னார்களே, அதற்குப் பதில் சொல்கிறேன். பண வீக்கம் முதலில் குறைய வேண்டும். பணப் பெருக்கம் குறைய வேண்டும் என்று நான் சொல்லவில்லை. பண வீக்கம்தான் குறையவேண்டும். பண வீக்கம் குறைய வேண்டுமானால், நோட்டு அச்சிடுவதற்கான திட்ட முறைகள் இருக்கின்றனவே, அந்த முறைகளுக்கு அதீதமான நெறியிலே இன்று நோட்டு அச்சடிக்கப்படுகிறதே அது குறிப்பிட்ட விதி முறைகளுக்கு மேம்படாது கட்டுப்படுத்தப்பட வேண்டும். நோட்டு அச்சடிப்பதற்குத்தான் முதலிலே கட்டுப்பாடு வேண்டும் என்று நான் சொல்வேன்.

27th April 1962] [Sri Saw Ganesan]

'சுதந்திரக் கட்சி திட்டத்தையெல்லாம் மறுக்கிறது' என்று சொல்கிருர்கள். அதற்குப் பதில் சொல்கிறேன். திட்டத்தை நாங்கள் மறுக்கவில்லை. திட்டம் ஒரு அளவோடு இருக்க வேண்டும். ஒரு உழக்கு சாப்பிடுவதற்குப் பதிலாக ஒருவர் ஒன்றரை உழக்கு சாப்பிடலாம். அவர் ஒரு படி சாப்பிட்டால் வயிறு வெடித்துவிடுமே என்றுதான் நாங்கள் சொல்கிரும். 'கூட' என்பதற்கு 'அதிதம்' என்று பொருள் அல்ல. அந்த மாதிரிதான் பொருளாதாரத் துறையிலேயும் இன்று இருக்கிற ஆதி பத்திய முறையைப் போக்கிவிட்டு, நாம் சுதந்திரச் சந்தைப் பொருளாதார முறையை, மேற்கு ஜெர்மனியிலே உள்ளது போன்ற Free Marketing Economy முறையைக் கடைப் பிடித்தால் நாட்டிலே வளம் பெருகும் என்று நான் உண்மையாக நம்புகிறேன். அப்பொழுது போட்டிக்கு இடம் உண்டு. சரக்கின் தரம் சிறப்பாக இருக்கும். வாங்குகிறவன் பொறுக்கியெடுக்க வழி இருக்கும். விற்பவன் தன்னுடைய சரக்கின் தரத்தை உயர்த் துவான். சந்தைக்குச் சென்று கத்திரிக்காய் விலை பேசி வாங்கு வதுபோலத்தான் எல்லாத் துறைகளிலேயும் அமைய வேண்டும். அப்படி அமைந்தால்தான், இங்கு பொருளாதாரம் செம்மையாகி விலையும் குறையும், பண்டத்தின் தரமும் உயரும் என்றெல்லாம் நான் எடுத்துக் காட்ட விரும்புகிறேன்.

இதோடு மட்டும் அல்லாமல், வரி போடும்போது, எது தேவை யானது, எவ்வளவுக்குப் போட்டால் தாங்கக் கூடியது என்பதை யும் கணித்து வரி விதிக்க வேண்டும். அந்தத் தத்துவங்களை யெல்லாம் ஆட்சியிலே இருக்கிறவர்கள் அறிய மாட்டார்கள் என்று நான் குறை கூறவே மாட்டேன். அவர்கள் நன்ருக அறிவார்கள். ஆனுல், அதை நன்கு சிந்தித்துச் செய்ய வேண்டும் என்றுதான் சொல்கிறேன். இங்கு இருக்கும் நிலை, தேவை, சக்தி இம் மூன்றையும் கணித்துப் போடவேண்டும். போடும் வரி ஏமாற்றப் பட முடியாததாக இருக்க வேண்டும். வரி விதிக்கும் அடிப் படைத் தத்துவத்தை எல்லாப் பொருளாதார நிபுணர்களும் அறி வார்கள். எந்த வரியை ஆட்சி விதிக்கிறதோ, அந்த வரியிலிருந்து எவனும் தப்பித்துக்கொள்ள முடியாதபடி அது அவ்வளவு கச்சித மாக அமைய வேண்டும். இல்லாவிட்டால், அந்த வரியை விதிக் காமல் இருப்பதுதான் ஆட்சிக்கு சிறப்பு என்பதை நான் எடுத்துச் சொல்ல ஆசைப்படுகிறேன். அதுபோல், போட்டுவிட்ட வரியை எப்படியும் வசூலித்தே தீருவது என்ற நெறியிலே—நிலையிலே அமைய வேண்டும். திரும்பத் திரும்ப அப்பீல் செய்து, 25 வருஷங் கள் வரையிலும் தீர்வு காண முடியாதபடி இல்லாமல், போடுகின்ற வரி தாங்கக் கூடியதாக இருக்க வேண்டும், வசூலிக்கப்படத் தக்க தாக இருக்கவேண்டும், ஏமாற்ற முடியாததாக அமையவேண்டும், வசூலிக்கப்பட்டு விட்டதாக சொல்லும்படி அமைய வேண்டும். இப்படிப்பட்டதாக வரி முறை இருக்கவேண்டும். இப்படியெல்லாம் இருந்தால்தான் நிச்சயம் விலைவாசி குறையும் என்று விஞ எழுப்பிய கனம் அங்கத்தினருக்கு நான் விடை இறுக்கின்றேன்.

பொருளாதாரப் பெரியாரான, எனது அன்புக்கும், மதிப் புக்கும் உரிய, கனம் டாக்டர் நடராஜன் அவர்கள் விலைவாசியின் உயர்வைப்பற்றி ஒரு கருத்துச் சொன்னுர்கள். பொருளாதாரத்

[Sri Saw Ganesan] [27th April 1962

துறையிலே இது கொஞ்சம் மாறுபட்ட அபிப்பிராயத்துக்கு உரிய விஷயம்தான். கர்ப்பம் என்றால் பத்து மாதம் ஆகுமுன் எப்படி பலன் தெரிந்துவிடும்? கொஞ்சம் நாள் சென்றுதான் பலன் கிடைக்கும் என்று சொன்னார்கள். பத்து மாதம் பொறுத்துப் பார்க்கலாம். அதுவரை நம்பலாம். இரண்டு வருஷங்களுக்குப் போனால், அதை மகோதரம் என்று கொண்டு, சஸ்த்ர சிகிச்சை தான் செய்யவேண்டும். விரல்விட்டு எண்ணுவதில் ஒரு சமயம் தவறு ஏற்பட்டிருக்கலாம் என்றால், பன்னிரெண்டு மாதங்கள்கூட பொறுத்துப் பார்க்கலாம். அதற்கு மேல் பொறுப்பது என்பது பொருத்தம் இல்லை. கஜகர்ப்பமாக இருந்தாலும்கூட, அதற்கும் அளவுண்டு; அந்த அளவுக்கு மேலே பொறுத்திருப்பது நியாயம் இல்லை என்பதையெல்லாம் நாம் நன்றாக மனதிலே கொண்டுவிட வேண்டும்.

விலைவாசியில் ஏற்றம் இருப்பது வளர்ச்சியின் காரணமாக என்பதை நான் உணருகிறேன். பணம் எவ்வளவுக்கு எவ்வளவு புழங்குகிறதோ, அவ்வளவுக்கு அவ்வளவு விலையும் ஏறும் என்ற நெறியை—பொருளாதார நிபுணர்களோடு பழகியதன் காரண மாக—ஏதோ ஓரளவு நானும் உணர்வேன். எந்த அளவுக்குப் பணம் பெருகுகிறதோ, அந்த அளவுக்குத்தான் விலை ஏறலாம். ஒரு அங்குலத்திற்கு ஒரு அடி என்று ஏறுமானால், அது சரி அல்ல. தரமல்ல. அளவு அல்ல. அன்று அரை ரூபாய் கிடைத்ததென்றால் இன்று ஒன்றரை ரூபாய் சம்பளம் கிடைக்கிறது என்னும்போது, அன்று ரூபாய்க்கு மூன்று படி விற்றது, இன்று ரூபாய்க்கு ஒரு படி விற்றால் தவறு இல்லை. அது சாதாரணம். ஆனால், அரை ரூபாய் சம்பளம் இருந்த காலத்தில் ஒன்றரை படி வாங்க முடிந்தது. இன்றைக்கு இரண்டு ரூபாய் சம்பளம் இருக்கிற காலத்தில் கால் படிதான் வாங்க முடிகிறது என்றால், அது பொருத்தம் அல்ல. அதுமாதிரிதான், இப்பொழுது சில பண்டங் களின் விலையைப் பார்க்க வேண்டும். அரிசியை மட்டும் வைத்துப் பார்க்கக் கூடாது. இறக்குமதி விநியோக முறைகளில் உள்ள குறைபாடுகள் காரணமாக, சில பண்டங்களின் விலை மூன்று மடங்கு, சில ஆறு மடங்கு, சில 15 மடங்குக்கூட ஏறியிருக்கிற நிலைமையைப் பார்க்கிறோம். அந்த முறைகளையெல்லாம் வைத் துப் பார்த்தால் இப்பொழுது விலைவாசி ஓங்கியிருப்பது வருமா னத்தின் அளவுக்கு அதீதமான நிலையில், அளவுக்கு மீறிய நிலையில் இருக்கிறது என்பதை மனதில் கொள்ள வேண்டும். அப்படிக் கொண்டால்தான் நாம் நம்முடைய நாட்டை செம்மையானதாக, சிறப்புடையதாக, செழிப்புடையதாக ஏதோ ஓரளவுக்கு ஆக்க முடியும் என்பதை நான் புலப்படுத்திக்கொள்ள விரும்புகிறேன்.

விலைவாசி குறைய வேண்டும் என்று சொன்னதற்கு, கனம் திரு. கோசல்ராம் அவர்கள் ஒன்று கூறினார்கள். 'கிராமத்திலே வந்து சொல்லட்டும், பார்க்கிறேன்' என்று சொன்னார்கள். அவர் அப்படிச் சொன்னதைப் பயமுறுத்தலாக நான் எடுத்துக்கொள்ள வில்லை. அவ்வளவு அழுத்தமாகச் சொல்கிறார் என்றுதான் நான் எடுத்துக் கொள்கிறேன். 'பார்க்கிறேன்' என்பதைப் படித்தால்

27th April 1962] [Sri Saw Ganesan]

பயமுறுத்தல் போலத் தோன்றும். அதற்கு நான் அப்படி வியாக்கியானம் செய்யவில்லை. அவருடைய நோக்கம் என்னவாக இருக்கும் என்று பார்ப்போம். நெல் முதலிய உணவுப் பொருள்களை உற்பத்தி செய்யும் கிராம விவசாயிகள் உபயோகிக்கும் "வேட்டி, விவசாயக் கருவிகள் முதலியவற்றின் விலை கூடியிருக்கிறதே, அதைக் குறைக்காமல், உணவுப் பொருள்களின் விலையை மட்டும் குறைக்கவேண்டும் என்று சொல்கிறார்களே, பாவிகள்", என்று கிராம விவசாய மக்கள் எண்ணிவிடுவார்களோ என்ற ஐயத்தின் மீது அவர் இப்படிச் சொல்லியிருக்கிறார். உண்மையிலேயே நான் அவர்களைக் குறை சொல்லவில்லை. அவர்கள் சென்ற அளவுக்குக் குறையாமல் நான் கிராமங்களில் சுற்றுகிறவன். அதிலும் நெல்லை ஜில்லாவில், நிறைய கிராமங்களில்—எல்லாக் கிராமங்களிலும்—சென்று, அங்கெல்லாம் சொல்லியிருக்கிறேன், 'விலைவாசி குறைய வேண்டும்' என்று. கேட்டவர்கள் எல்லாம் எங்கள் கட்சியினர் அல்ல. வேறு கட்சியினரும் அல்ல. எல்லோரும் பெரிய பொருளாதார நிபுணர்களும் அல்ல. அவர்கள் இந்தத் தேசத்திலே வாழப் பிறந்த, வாழ்கிற மக்கள். அவர்கள் எல்லாம் ரசித்தார்கள்; ருசித்தார்கள்; ஏற்றுக் கொள்ளவும் செய்தார்கள். விலைவாசி குறையக் கூடாது என்று மறுத்தவர்களை நான் காணவில்லை. அவர்களுக்குத் தெரியும். விலைவாசி குறையவேண்டுமென்றால், அரிசி விலை மட்டும் தானா? அரிசிக்குச் செலவழிப்பதைவிட, அவர்கள் அதிகமாகச் செலவழிக்கிற, தொகை வேறு பண்டங்களுக்குப் போகிறது. கட்டப்பாறை, மம்மட்டி, பட்டா எரியல், சாக்கு, தும்புக் கயிறு, உரம் இவற்றுக்கெல்லாம் ஜாஸ்தியாகச் செலவழிக்க வேண்டியிருக்கிறது. தங்களுக்கென்று உணவுக்காக எத்தனை ரூபாய் அதிகமாகச் செலவழிக்கிறார்களோ சராசரி, அதைவிட பிற பண்டங்களுக்கு அவர்கள் கொடுக்கிறார்கள் என்பதையும் அவர்கள் உணருவார்கள். ஆகையால், விலைவாசி குறைய வேண்டுமென்றால், அவர்கள் அதிருப்திப்படவோ, அது தீமை என்று பிறழ்ந்து உணரவோ, மாறுபட உணரவோ அவ்வளவு புத்திசாலிகள் அல்லாதவர்களாக இல்லை என்பதை மட்டும் நான் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

அதற்குமேலே, 'விவசாயிகள்தான் நாட்டுக்கு முதுகெலும்பு' என்பதைப் பெரும்பான்மையாக ஏற்றுக்கொள்கிறோம். ஆகையால் தான், 'விவசாயிகளுக்கு வரியே கூடாது, நில வரியே இருக்கக் கூடாது' என்று நாங்கள் சொல்கிறோம். அதைக் குறித்துப் பேசிய கனம் அங்கத்தினர் ஒருவர், 'சுதந்திரக் கட்சி நில வரியை எடுத்துவிட்டு என்ன செய்யப் போகிறது?' என்று வினா எழுப்பினார்கள். இராஜ்யத்தின் வருமானத்தில் நில வரியானது எத்தனை சதமானம் என்பதை விஷயம் தெரிந்தவர்கள் நன்றாகப் பார்த்தால் தெரியும். சுமார் மூன்று சதமானம்தான் நில வரியாக வருகிறது. அந்த நில வரியை வசூலிப்பதற்காக, அதற்குப் பொறுப்பேற்றிருக்கிறவர்களுக்காக ஏற்படுகிற செலவு கிட்டத்தட்ட ஒன்றரை சதமானம் இருக்கலாம் என்று அனுமானிக்கிறேன். எப்படிப் போனாலும் நிலவரி மூலம் எதிர்பார்க்கிற நிகர வருமானம், செலவு போக, இரண்டு சதமானம்தான். இந்த இரண்டு

[Sri Saw Ganesan] [27th April 1962

சதமானத்தை விட்டுவிட்டு அரசாங்க பட்ஜெட்டை நடத்த முடியாதா என்று கேட்டால், 'பைத்தியக்காரத்தனமான கேள்வி' என்று நீங்கள் யாராவது சொல்வீர்களா? அவ்வளவுதான் அதற்குப் பதில். இனி அதே காலத்திலே, அந்த அன்பரே கூறினர்கள், தேசீயமாக்கப்படுவதைக் கண்டித்து, பஸ்களைத் தேசீயமாக்கவேண்டும் என்றால் அவர்களுக்கு நஷ்ட ஈடு கொடுப்பதற்கு என்ன செய்வது, மற்ற சாதனங்களுக்கும், வழிவகைகளை எவ்வாறு செய்வது என்றெல்லாம். அதை மனப்பூர்வமாக வரவேற்கிறேன். அவர்கள் ஒரு பஸ் முதலாளி, அதனல் அப்படிப் பேசினர்கள் என்று அவர்கள் எண்ணத்திற்கு மாசு கற்பிக்கவும் நான் விரும்பவில்லை.

"எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு."

அன்றி யார் சொன்னர்கள் என்பதை ஆராய்வது அறிவுக்குப் பொருந்தாது. சொன்ன விஷயத்தைப் பற்றி ஆராய்ந்து, அதனுடைய லாப நஷ்டத்தைக் கணக்குப் பார்த்து, அப்படிச் செய்வது நியாயம் தானு என்று முடிவு செய்வதே உகந்தது. எல்லாவற்றையும் தேசீயவுடமையாக்கப் பாடுபடுவது என்பது உண்மையில் பலன் இல்லாதது. பயன் இல்லாததாக அமைகின்றது என்ற ஒன்றை—தத்துவமாகச் சிலவற்றைக் கடைப்பிடித்து வந்தாலும்கூட—மனமாற எல்லோரும் உணர்வார்கள். நான் உணர்ந்திருக்கிறேன் என்பதை சொல்லிக்கொள்கிறேன். அவ்வளவுதான்.

கனம் அங்கத்தினர்கள் பேசும்போது தங்கள் தங்கள் ஜில்லாக்களைப் பற்றிக் குறிப்பிடும்போது பிற்போக்கான ஜில்லா என்று சொன்னபோது—இங்கே நாங்கள் முதல் அமைச்சரோடு---எல்லா ஜில்லாக்களும் இப்படிப் பார்த்தால், பிற்போக்கான ஜில்லாதான் என்று பேசிக்கொண்டிருந்தோம். அந்த ரீதியில் நான் என்னுடைய ஜில்லாவைப் பிற்போக்கான ஜில்லா என்று சொல்லவே விரும்பவில்லை. பிற்போக்கான ஜில்லா என்று அதைச் சொல்வது உண்மையாகவே இருக்கலாம். முழுக்க முழுக்க இந்தப் பிரதேசம் வானத்தை எதிர்பார்த்திருக்கிற வேளாண்மை உடையது. சுந்தர பாண்டியன் காலத்தில் அமைத்த ஏரிப்பாசன முறை மகத்தானது. மழை பொழிந்தால் ஏரியில் தண்ணீர் நன்ருகத் தேங்கும். ஏரி ஒன்றில் இருந்து அடுத்த ஒன்றுக்குப் பாய்ந்து, அது நிரம்பியவுடன் அதற்கடுத்த ஒன்றுக்குப் பாய்ந்து இப்படியாக ஒரு சொட்டுத் தண்ணீர் கூட வீணுகாமல் விவசாயத்திற்குப் பயன்படுத்திக் கொள்கிற ஒழுங்கான, உயர்ந்த ஏரிப்பாசன அமைப்பு முறையை உடையது. இதைக் கண்மாய்ப் பாசனம் என்பார்கள். ஒரு கண்மாய்க்கும் இன்னொரு கண்மாய்க்கும்—இது நிரம்பி தண்ணீர் ஓடுகிற கால்வாய் மட்டும் இடையில் 'ஆறு' என்று பெயர். ஒன்றுக்குத் தேனுறு என்று பெயர் இருக்கிறது. தேன் எவ்வளவு ஓடுமோ அவ்வளவு ஓட்டம்தான் அதில் இருக்கும். பருவ மழை சீராகப் பெய்துவிட்டால் அந்த பூமி நன்ருக விளையும். பாசனத்திற்குச் சங்கடம் இராது. ஆனல்

இவ்வாண்டு கொஞ்சம்கூட மழை இல்லை. பயிர்கள் அப்படியே சாவியாகிப் போய்விட்டன. கருக்கரிவாள் போட்டு அறுப்பதற்கே தாள் பிடிபட வில்லை. ஆனதால் சாவி பறித்தார்கள். சிலர் அதுவும் தேவையில்லையென்று சொல்லி மாடுகளைவிட்டு மேய்த்திருக்கிறார்கள். இதை எல்லா மக்களும் அறிவார்கள். காரணம் தேர்தல் காலத்தில் அந்தப் பிரதேசம் பூராவும் சுற்றுப் பயணம் செய்த காரணத்தினால். தேர்தல் காலத்தில்தான் அறுவடை காலமும் சேர்ந்தது. ஆகவே இப்படி மழை இல்லாத காரணத்தினால் அடியோடு விவசாயம் பாதிக்கப்பட்டிருக்கக்கூடிய இந்த மாதிரியான நிலையில் முழுக்க முழுக்க வரி வஜா செய்வது தர்மம், நியாயம், நீதியும் ஆகும் என்று பணிவோடு தெரிவித்துக் கொள்ள ஆசைப்படுகிறேன்.

அதுமட்டுமல்ல. இப்போது கொடுக்கப்பட்டிருக்கிற விவசாயக் கடன் தொகையை திரும்பக் கொடுக்காவிட்டால் ஜப்தி செய்யப் படும் என்பதாகக்கூட நோட்டீஸ் வழங்கப்பட்டிருக்கிறது. இந்த மாதிரியான நிலையில் அவர்களால் அந்தக் கடனைத் திருப்பிக் கொடுக்க முடியுமா? இதையும் கருணையோடு யோசித்துப் பார்க்கும்படி சம்பந்தப்பட்ட அமைச்சர்களை நான் கேட்டுக் கொள்கிறேன். குறைந்தபட்சம் இரண்டு ஆண்டுகளுக்காவது அந்தக் கடன் வசூலை ஒத்தி வைத்து, பின் தவணைகளில் திருப்பிக் கொடுக்கும்படி கருணை கனிந்த உள்ளத்தோடு செய்யவேண்டும் என்று பிரார்த்தித்துக் கொள்கிறேன். ராமநாதபுரம் ஜில்லாவுக்கு மட்டும் நான் சொல்லவில்லை. இதுபோன்று இருக்கக்கூடிய பிரதேசங்கள் அத்தனைக்கும் சொல்கிறேன்.

ஆண்டவனே கருணையோடு ஆற்று வசதி இல்லாவிட்டாலும், ஊற்று வசதியைச் செய்து கொடுத்திருக்கிறான் என்று குறிப்பிட்டால் தவறில்லை. எல்லா அமைச்சர்களுக்கும் தெரியும், அதிகாரிகளுக்கும் தெரியும். ஆற்று வசதி இல்லை, நீர் வசதி போதாது என்றே காரைக்குடியில் ரிசர்ச் இன்ஸ்டிட்யூட்டை ஏற்படுத்தத் தயங்கினார்கள். அப்படித் தயங்கவேண்டாம், கிணறு வெட்டினால் போதுமான தண்ணீர் கிடைக்கும் என்று சொன்னோம். அப்படியேதான் இன்றைக்கு ஒரு கிணற்றுக்கு 1 லட்சம் காலன் வீதம், ஒரு காம்பவுண்டுக்குள்ளேயே 3 கிணறுகள் வெட்டி 3 லட்சம் காலன் தண்ணீர் வருகிறது. சர்க்கார் ரெக்கார்டு களிலேயே இருக்கிறது. இது உண்மை. அங்கப் பிரதேசங் களில் மழை இல்லாத காலங்களில் ஏற்படுகிற தண்ணீர்த் தட்டுப்பாட்டை நீக்க காவேரியில் இருந்து ஒரு கால்வாய் வெட்டலாம் என்றார்கள். "வெட்ட முடியாது, மேட்டுப் பாங்கான பூமி அது, தண்ணீர் ஏறாது" என்று இன்னும் சிலர் சொல்லுகிறார்கள். ஒவ்வொருவருக்கும் ஒவ்வொருவித அபிப் பிராயம் இருக்கிறது. கனம் அமைச்சர் அவர்களுக்கு இது நன்றாகத் தெரியும். இவ்விஷயத்தைப் பொறியியல் வல்லுநர்களுக்கு விட்டுவிடுகிறேன். ஆனால் ஒன்று, அப்படித் தண்ணீர் கொண்டு வருவதனால் இப்போது பாசனம் பெற்று வருகிற இடங்களுக்குத் தண்ணீர்த் தட்டு வரும் என்றால் அது வேண்டாம். காரணம்

எனக்குத் தாகம் அதிகமாக இருக்கிறது என்பதற்காக பக்கத்தில் மிக்க தாகத்தோடு தண்ணீர் குடிப்பதற்காக ஒரு லோட்டா தண்ணீர் வைத்திருக்கிறுனே, அந்த லோட்டாத் தண்ணீரைப் பறித்து நான் குடிக்க விரும்பமாட்டேன். என் தாகம் தீர்ந்தால் மட்டும் போதாது, அவன் தாகத்தைப் போக்க என்ன செய்வது என்றும் சிந்திப்பவன்தான் அறிவுடைய மனிதனுக இருக்க முடியும். ஆகவே இப்போது காவேரித் தண்ணீர் பாய்கின்ற பிரதேசங்களுக்குக் கண்டது போக, வீணுகும் தண்ணீர் இருக்கிறது என்ருல், தண்ணீர் எஞ்சுகிறது என்ருல், அதை இந்தப் பிரதேசத்திற்குத் திருப்ப கால்வாய் வெட்டுங்கள். முடியாவிட்டால் நான் வேறு யோசனை சொல்கிறேன்.

அங்கே இருக்கிற ஏரிகளின், ஏரிகளினுடைய மடைவாய்க் கால்களின் பக்கத்தில் ஆழக் கிணறுகளைத் தோண்டுங்கள். அதில் குழாய்களை இறக்கி, கன அழுத்தமுடைய—ஹெவி டென்ஷன்—மின்சார சக்தியை உபயோகித்துத் தண்ணீரை வெளிக் கொணர்ந்து அந்த மடைவாயிலேயே ஊற்றிவிடுங்கள். இப்போது கண்மாய்களில் தண்ணீர் இருக்கும்போது எவ்வாறு ஓடிப் பாய்கிறதோ அதுபோலவே இந்தத் தண்ணீரும் பாயும். இப்படிப் பாசன வசதி பெறுகிற நிலத்தார்களிடமிருந்து ஒரு பெயரளவு—நாமினல் சார்ஜை—வசூல் பண்ணிக் கொள்ளுங்கள். பெரிய பெரிய நீர்த்தேக்கம் அமைக்கிருேம் என்பதற்காக அந்த நீர்த்தேக்கத்தைக் கட்டுவதற்கு ஆன செலவை இப்போது நாம் அதனுல் பயன் அடைகிறவர்களிடம் வசூல் செய்கிருேமா? இல்லையே. அது போல இங்கும் ஏதோ கொஞ்சம் வரியை தண்ணீருக்காக வாங்கிக் கொள்ளலாம். இப்படிச் செய்வதனுல் மிகவும் நன்மையாக இருக்கும். போதுமான தண்ணீர் கிடைக்கும் எனறு தெரிவித்துக்கொள்கிறேன். அப்படிச் செய்வது சிறந்ததொரு பணியைச் செய்ததாக இருக்கும். இந்த மந்திரி சபைக்கு நல்ல புகழையும் ஈட்டித்தரும் என்று சொல்ல ஆசைப்படுகிறேன்.

அதற்குமேலே கல்வித்துறை, கோயில் துறை இவற்றையெல்லாம் பற்றி பல அன்பர்கள் பேசினர்கள். அதைப்பற்றியும் நான் என்னுடைய கருத்தைச் சொல்ல கடமைப்பட்டிருக்கிறேன். மனிதன் படிப்பதே ஒழுக்கத்தில் சிறந்து விளங்குவதற்காகத் தான். சிறந்த நல்லொழுக்கங்களை வளர்ப்பதுதான் கல்வியின் அடிப்படை. முன்காலங்களில் எல்லாம் "கல்வி அறிவு ஒழுக்கங்களில் சிறந்தது" என்று சேர்த்துச் சொல்வது ஒரு பழக்கம். கல்வியினுலே அறிவு விசாலப்படுவதும், அறிவு விசாலப்படுவதனுலே ஒழுக்கம் சிறந்து நிற்பதுமாக ஒன்றுக்கொன்று இணைந்து நின்றது. ஆனுல் இன்றைக்குக் கல்வியினுலே ஒழுக்கம் சிறக்கவில்லையென்ருல்—ஒழுக்கத்திற்கு அடிப்படையாக அமைந்திருக் வேண்டிய தெய்வபக்தியை வளர்ப்பதற்கு நாம் போதுமான கவனம் செலுத்தவில்லை. ஒழுக்கம் முக்கியமானது என்ருல் அது தெய்வ நம்பிக்கையினுல் தான் வளரும் என்பதை இந்த தேசம் நன்ருக உணர்ந்திருக்கிறது. எல்லாத் தமிழ் நூல்களும் பேசும், "தெய்வம் போற்று" என்று. எந்த நூலுக்குள் நுழைந்தாலும் சரி, தெய்வத்தைப்பற்றிய நினைப்பு, நம்பிக்கை ஊட்டப்படும்.

27th April 1962] [Sri Saw Ganesan]

ஆகவே, இன்றையதினம் கல்வித் துறைகளிலே குழந்தைகளுக்கு எந்தவிதமான மதத் துவேஷமும் இல்லாமல், ஒழுக்கத்தைச் சிறப்பாக வளர்ப்பதற்கு அடிப்படையான தெய்வ நம்பிக்கையை வளர்க்கும்படியான ஒரு வாய்ப்பைக் கொடுக்க வேண்டும். கொடுத்தேயாக வேண்டும். அதுவும் சுதந்திரப் போராட்ட காலத்தில்—காந்தியடிகள் ஒவ்வொரு நாளும் காலையும் மாலையும் பிரார்த்தனையோடு காரியங்களை நிறைவேற்ற, அவரது தலைமையின்கீழ் அவரது அடிச்சுவட்டைப் பற்றி வளர்ந்த பரம்பரையைச் சேர்ந்தவர்கள் நாங்கள் என்று சொல்லிக் கொள்கின்ற பெருமை படைத்த அமைச்சர்கள், அமைச்சர்களின் அவை இதைப் புறக்கணிக்காது என்று நம்புகிறேன்.

அதேகாலத்தில் இன்னொன்றையும் கவனிக்கவேண்டும். தமிழ் நாட்டுக் கோயில்கள் எல்லாம் தமிழ்நாட்டின் பண்புக்கே எடுத்துக்காட்டாக விளங்குகின்றன. இலக்கியங்களின்மூலம் சரித்திரத்தை, தமிழ்நாட்டின் வரலாற்றை ஓரளவு உணர்ந்து கொள்ளலாம். ஆனாலும் அவை சற்று மிகையாகவே இருக்கும். கவிஞர்கள் எதையும் ஓரளவு சிறப்புப்படத்தான் சொல்வார்கள். அதில் காணப்படும் எதையும் சிறப்பாகச் சொல்லப்பட்டது என்றே அறிஞர் உலகம் கருதுமேயன்றி, அப்படியே அதில் உள்ளவை யாவும் உண்மையென்று கொள்ள மாட்டாது. ஆனால் பழங்காலம் முதலாக நம்முடைய கலையின் சிறப்பாக, பண்பின் சிகரமாக விளங்கி வருகின்ற கோயில்களை, அதிலுள்ள மூர்த்திகளைக் கண்டு, கட்டட நிர்மாணங்களைக் கண்டு, கல் வெட்டுக்களைப் பார்த்து, அதன் உள்ளடக்கத்தைக் கண்டு—தமிழர்களது நாகரிகம், தமிழர்களது பண்பாடு, கலை நுட்பம் ஆகிய எல்லா மேம்பாட்டையும் உணர்ந்துகொள்வதற்கு அடிப்படையாக கருதுகின்றனர்.

ஆதலால்தான் எந்த ஆட்சிக்கும் இல்லாத நிலையிலே இந்த 11-00 a.m.
மாநில ஆட்சி மட்டும் தன்னுடைய இலச்சினையிலே தமிழ் நாட்டுக் கோபுரத்தைக் கொண்டிருக்கிறது. அந்த ராஜகோபுரமானது தமிழ் நாட்டுக்கு உரிய ஒரு தனிச் சிறப்பு என்ற காரணத்தினால் தான் நாம் அதனை இலச்சினையாகக் கொண்டிருக்கிறோம். இந்த மனப்பான்மையை எல்லாம் நீங்கள் அறியாதவர்கள் அல்ல; நன்றாக அறிந்தவர்கள்தாம். பல கோவில்களில் அக்கிரமங்கள் நடைபெறுகின்றன என்பதை மறுக்க முடியாது. அதைக் காக்க வேண்டிய பொறுப்பும் உங்களுடையது. புரக்க வேண்டிய பொறுப்பும் உங்களுடையது. ஆண்டவன் அருளாலே இந்த நாட்டிலே, இந்த மாநிலத்தில்தான் கல்வி, பொருள், தெய்வம் மூன்றும் இணைந்து இருக்கிறது. தத்துவ நூல்களிலே 'சக்தித் திரயம்' என்று சொல்வது போல், சரஸ்வதி, லக்ஷ்மி, சக்தி இந்த மூன்றும் ஒரு அமைச்சர் கையிலே இருக்கிறது. இந்த மூன்றையும் நிரவி, சேர்த்துப் பொருத்த வேண்டும். கோவிலைக் கொண்டு கல்வியையும், கல்வியைக் கொண்டு கோவிலையும், செல்வத்தைக் கொண்டு கல்வியையும் கலந்து வளர்க்க வேண்டும். இந்த முறையில் ஆட்சி அமைப்பு முழுமை ஆக வேண்டுமென்று விண்ணப்பித்துக் கொண்டு என்னுடைய உரையை முடிக்கிறேன். வணக்கம்.

[27th April 1962

* SRI V. R. NEDUNCHEZHIYAN : மதிப்பிற்குரிய அவைத் தலைவர் அவர்களே, மேன்மைதங்கிய கவர்னர் அவர்களுடைய உரையை ஒட்டி சென்ற மூன்று நாட்களாக நடைபெறுகின்ற விவாதத்தின் பேரில் இன்று உங்கள் முன் சில கருத்துக்களை எடுத்து வைக்க நான் முன் வந்திருக்கிறேன். தமிழக அரசால் உருவாக்கப்பட்டு, மேன்மை தங்கிய கவர்னர் அவர்களால் உரையாக மொழியப்பட்டு, இங்கு வைக்கப்பட்டுள்ள உரையின் மீது, விவாதிக்கின்ற வாய்ப்பும், உரிமையும் இந்த மன்றத்தைச் சார்ந்த உறுப்பினர்கள் அத்தனை பேருக்கும் தரப்பட்டிருக்கிறது. அந்த வாய்ப்பையும், உரிமையும் பயன்படுத்திக் கொண்டுதான் நான் அந்த உரையின் மீது எழுப்பப்பட்ட விவாதத்தைப் பொறுத்த கருத்துக்களைப் பற்றி பேச முற்பட்டிருக்கிறேன்.

'கவர்னர் உரையின்மீது நடைபெறுகின்ற விவாதத்தில் திராவிட முன்னேற்றக் கழகத்தைச் சார்ந்தவர்கள் கலந்து கொள்ளுவது அவ்வளவு பொருத்தமுடையதாக இல்லை; அவர் உரை வழங்கு கின்றபோது கூட்டத்திற்கு வராமல் இருந்து விட்டு விவாதத்தில் எப்படி வந்து கலந்து கொள்ளுகிறார்கள்? அது சரியானதுதானா? பொருத்தமானதுதானா? அரசியல் சட்டத்திற்கு முரண்பாடானது அல்லவா? ஒழுங்கை மீறியதல்லவா?' என்றெல்லாம் ஆளும் கட்சி உறுப்பினர்கள் வினவினார்கள்.

கவர்னர் உரையாற்றுகின்றபோது உறுப்பினர்கள் வந்தே தீர வேண்டுமென்ற கட்டாயம் இல்லையென்பதை, இதற்கு முன்னர் இந்த மன்றத்திலே அத்தகைய விவாதத்தின்போது எழுப்பப்பட்ட உரிமைப் பிரச்சனையின் மீது அவைத் தலைவர் அவர்கள் தீர்ப்பு வழங்கி இருக்கிறார்கள். சட்டமன்றத்திலே கவர்னர் உரையின் போது கலந்து கொள்வதும், கலந்து கொள்ளாமல் இருப்பதும் அரசியல் சட்ட உரிமைக்கு மாறுபட்ட ஒன்றல்ல. கவர்னர் உரை யைக் கேட்க உறுப்பினர்கள் வராமல் இருப்பது குற்றமுடைய ஒன்றல்ல. அத்தகைய தீர்ப்பு இதற்கு முன்னாலே அவைத் தலைவர் அவர்களால் இந்த மன்றத்திலே வழங்கப்பட்டிருக்கிறது. கவர்னர் உரைக்குத் திராவிட முன்னேற்றக் கழகத்தைச் சார்ந்த உறுப் பினர்கள் ஏன் வரவில்லை என்பதற்கான காரணத்தை முன்பு இதே சட்டமன்றத்தில் திராவிட முன்னேற்றக் கழகத்தின் தலைவரான அறிஞர் அண்ணா அவர்கள் விளக்கமாகவும், தெளிவாகவும் எடுத்துக் கூறி இருக்கிறார்கள். அதை நான் இந்த மன்றத்தின் முன் வைக்க விரும்புகிறேன்.

"It is not our intention to discredit or show discourtesy to the Governor. We are only up against the institution of Governorship and the manner in which Governors are being appointed and money being spent on that. Rule 8 of the Assembly Rules expressly states the position only when such and such disturbances take place ...... By our not attending the Governor's Address we have not impeded the functioning of this House or of any officer of this House."

என்ற கருத்துக்களை அறிஞர் அண்ணா அவர்கள் எடுத்து வைத் திருக்கிறார்கள். நாங்கள் ஒரு கருத்தினைக் கொண்டிருக்கிறோம். கவர்னர் பதவி இந்தியக் குடியரசுத் தலைவரால் நியமிக்கப்பட்டு இங்கே அனுப்பப்படுகின்ற ஒன்று என்று நாங்கள் கருதுகிறோம்.

27th April 1962] [Sri V. R. Nedunchezhiyan]

இதற்கு முன்னுலே வெள்ளேயர் ஆண்ட போது கவர்னர் பதவியின் தகுதியும், அவர்களுக்காகச் செய்யப்பட்ட ஆடம்பரங்களும், செலவுகளும் எந்த அளவிலே, எந்த நிலேயிலே இருந்தனவோ, அதே அளவில் அமையத் தக்க வகையிலே இன்றும் அமைக்கப் பட்டிருக்கின்றன. கவர்னர் உரை நிகழ்த்துவது சட்ட மன்றத்தின் தொடர் நடவடிக்கைகளிலே ஒன்று அல்ல. சட்ட மன்றத் தொடர் நடவடிக்கைகளுக்கு அப்பாற்பட்ட ஒன்று. அரசாங்கம் மேற் கொள்ளுகின்ற விழாக்கள், நிகழ்ச்சிகள் போன்று அந்த உரை நிகழ்த்தும் நிகழ்ச்சியும் அமைந்திருக்கிறது. சட்டமன்ற 'ப்ரொ சிடிங்ஸ்' என்ற அந்த நிகழ்ச்சியின் வரிசைகளிலே ஒன்றல்ல என்ற முறையில் அவைத் தலேவர் அவர்கள் தீர்ப்பு வழங்கியிருக்கிருர்கள். கவர்னர் பதவியானது நியமிக்கப்பட்ட ஒன்ருக இருக்கிறது; வெள்ளேயர் காலத்தில் இருந்தது போல் நியமிக்கப்பட்ட ஒன்ருக இருப்பதோடு மட்டுமல்லாமல், பெரும் செலவுக்குக் காரணமாகவும் இருக்கும் காரணத்தால் அந்தப் பதவி அவசியமற்ற ஒன்று என்ற வெறுப்புணர்ச்சியை, விருப்பமின்மையைத் தெரிவிப்பதற்காக நாங்கள் இந்த முறையைக் கையாள்கிறேம். இது சட்டத்திற்குப் புறம்பான ஒன்று என்ரே, முரண்பாடானது என்ரே யாரும் கருதுவதற்கில்லே. இது சட்டத்திற்குப் புறம்பானது என்று இங்குள்ள சில உறுப்பினர்கள் கருத்து அறிவித்தமையால்தான் நான் இதனே எடுத்துச் சொல்கிறேன். சட்டமன்ற நடவடிக்கை யிலோ, அரசாங்கத்தின் மீதோ தங்கள் வெறுப்புணர்ச்சியை விருப்பமின்மையைத் தெரிவிக்கும் முறையில் பல்வேறு முறைகளேக் கையாளுகின்ருர்கள். பிரிட்டிஷ் பாராளு மன்றத்திலேகூட ராணியார் உரையைக் கேட்க மறுத்த நிகழ்ச்சிகள் இரண்டொரு தடவை நிகழ்ந்திருக்கின்றன. இந்தியப் பேரரசின் பாராளுமன்றத்திலேகூட குடியரசுத் தலேவருடைய உரையைக் கேட்கமாட்டோம் என்று கலந்து கொள்ளாமல் இருந்த நிகழ்ச்சிகள் இரண்டொரு தடவை நடந்திருக்கின்றன. அண்மையில் சில மாநிலங்களில் கவர்னர் போக்கில் அதிருப்தி கொண்டு கூட்டத்திற்கு வாராமல் இருந்திருக்கிருர்கள். சில மாநிலங்களில் கூட்டத்திற்கு வந்து எழுந்து நின்று ஆட்சேபணேயை எடுத்துத் தெரிவித்து விட்டு வெளியேறி இருக்கிருர்கள். அண்மையில் ஒரு மாநில சட்ட மன்றத்தில் கவர்னருடைய உரையை கிழித்துப் போட்டு காலால் மிதித்து விட்டுப் போயிருக்கிருர்கள். இப்படி வெறுப்புணர்ச்சி யைக் காட்ட, விருப்பமின்மைமைக் காட்ட ஒவ்வொரு வழி முறையை ஒவ்வொருவரும் வைத்துக் கொண்டிருக்கிருர்கள். ஆகவே, நாங்கள் எங்களுடைய வெறுப்புணர்ச்சியைக் காட்ட, இந்த முறையைக் கையாள்கிறேம். வெறுப்புணர்ச்சியைக் காட்டு வதே தவறு, வெளியிடுவதே தவறு என்ற முறையில் ஆளும் கட்சி யில் உள்ளவர்கள் எடுத்துக் கூறியது உள்ளபடியே வருந்தத்தக்க ஒன்ருக அமைந்திருக்கிறது. அத்தகைய நிலேமையை எடுத்துச் சொல்லும் போது, இன்று இருக்கும் அரசியல் சட்டத்தை ஏற்றுக் கொண்டு, உறுதி மொழி அளித்து இங்கே அமர்ந்திருக்கும்போது அந்த அரசியல் சட்ட விதி முறைகளுக்கு மாறுபாடாக நடக்கலாமா என்று கூடச் சிலர் கேட்டார்கள்.

[Sri V. R. Nedunchezhiyan] [27th April 1962

இதற்கு முன்னால் வெள்ளையன் நாட்டை ஆண்ட காலத்தில்கூட வெள்ளையன் பாராளுமன்றத்தையும், சட்டமன்றங்களையும் வைத்து நடத்தியபோதுகூட அக்காலங்களில்கூட மாபெரும் காங்கிரஸ் தலைவர்கள் தங்களது வெறுப்புணர்ச்சியைக் காட்டும்போது பல தடவை வெளிநடப்புக்கள் செய்திருக்கிறார்கள். அவர்களும் அப் பொழுது உறுதிமொழி எடுத்துக் கொண்டுதான் அந்த அவைகளில் இடம் பெற்றிருந்தார்கள். அவர்கள் உறுதிமொழி எடுத்துக் கொள்ளும்போதுகூட பிரிட்டிஷ் ஆட்சியாளர்களுக்கும், மற்றவர் களுக்கும் பற்றோடு நடந்து கொள்கிறோம் என உறுதிமொழி எடுத்துக்கொண்டுதான் அங்கு இடம் பெற்றிருந்தார்கள்.

**"I, having been elected a member of this Assembly do solemnly swear that I will be faithful and bear true allegiance to His Majesty the King Emperor of India, his heirs and successors and that I will faithfully discharge the duty upon which I am about to enter."**

என்று சொல்லித்தான் அப்பொழுதும் காங்கிரஸ் தலைவர்கள் சட்ட மன்றங்களில் பங்கெடுத்துக் கொண்டு தங்கள் கருத்துக்களைத் தெரிவித்திருக்கிறார்கள். அரசியல் நிர்ணயச் சட்டத்திற்கு மாறு பட்ட கருத்துக்களைத் தெரிவிக்கவே கூடாது, அதை மாற்ற வேண்டுமென்று விரும்பவே கூடாது, சட்டத்திற்கும் ஒழுங்குக்கும் கட்டுப்பட்டு தங்கள் கருத்துக்களை, வெறுப்புணர்ச்சிகளைத் தெரி விக்கவே கூடாது என்றிருந்தால் அப்பொழுது காங்கிரஸ் தலைவர் கள் பிரிட்டிஷ் ஆட்சிக்கு எதிராகவுள்ள தங்கள் கருத்துக்களை எடுத்துத் தெரிவித்திருக்கவே முடியாது. மன்னர்பிரானுக்கும், அவரது வாரிசுகளுக்கும், அவர்களது வழிமுறை வருகிறவர் களுக்கும் (heirs and successors) தாங்கள் நம்பிக்கையோடும், பக்தியோடும் நடந்து கொள்வோம் என்றுதான் அப்பொழுது அவர்களும் உறுதிமொழி எடுத்துக்கொண்டிருக்கிறார்கள். அப்படி உறுதிமொழி எடுத்துக் கொண்டு எப்படி மாறுபட்ட கருத்துக் களைக் கொண்டீர்கள்? எப்படி மாறுபட்ட கருத்துக்களை தெரிவிக் கிறீர்கள்? என்று யாரும் அவர்களைக் கேட்டதுமில்லை, அப்படி கேட்பது முறையும் அல்ல. அதை ஆளும் கட்சி உறுப்பினர்கள் சிந்தித்துப் பார்க்க வேண்டுமென்று நான் அவர்களை பணிவன் போடு தங்கள் மூலமாகக் கேட்டுக்கொள்கிறேன். எதிர்க்கட்சியி லுள்ள அத்தனைபேர்களும் ஆளும் கட்சியினர் சார்பாக, ஆளும் கட்சியினர் கொண்டிருக்கக்கூடிய கருத்துக்களுக்கு ஆதரவு அளித்து அதைப் போற்றுகிற முறையில், பாராட்டுகிற முறையில் இருக்க வேண்டுமென்று எண்ணி, கருதி அறிவுரை வழங்குகிற அளவுக்கு ஆளும் கட்சி உறுப்பினர்கள் தங்கள் கருத்தைத் தெரி வித்திருக்கிறார்கள். குற்றங் குறைகளைச் சொல்வதைப் பொறுக்க முடியாத அளவிற்கு, குற்றங்குறைகளைச் சுட்டிக் காட்டுவதை தாங்கிக் கொள்ள முடியாத அளவிற்கு இருக்கிறார்கள், ஆளும் கட்சியைச் சார்ந்தவர்கள்.

"செவிகைப்பச் சொல்பொறுக்கும் பண்புடை வேந்தன்
கவிகைக்கீழ்த் தங்கும் உலகு"

என்று வள்ளுவர் வகுத்துத் தந்திருக்கிறார்கள். ஆட்சி பீடத்தில் இருப்பவர்கள், எதிர்க்கட்சியினர் சொல்வதைக் கேட்கமாட்டோம்,

நீங்கள் எங்களை முழுக்க முழுக்க ஆதரிக்க வேண்டுமென்ற பொருள்படும்படி இங்கு பல நண்பர்கள் எடுத்துக்கூறுவது உள்ள படியே வருந்தத்தக்க ஒன்றாக அமைந்திருக்கிறது. நாங்கள் கவர்னர் உரையின்போது இங்கே வரவில்லையென்றால் அது சட்டத் திற்கு புறம்பானதொன்றல்ல. எங்களின் அதிருப்தியை அறிவிக்க, நாட்டுக்கு அறிவிக்க, மக்களுக்கு அறிவிக்க, அவனியோருக்கு அறிவிக்க நாங்கள் ஒரு முறையை கையாள்கிறோம். அது, எங்களைப் பொறுத்தவரை சரியானதென்று நாங்கள் கருதுகிறோம். இதற்கு தீர்ப்பளிக்கவேண்டியது எதிர்காலமும், மக்களுமாவார்கள். அப்படிப்பட்ட ஒரு எண்ணத்தைக் கொள்வது தவறு என்று ஆளும் கட்சி அங்கத்தினர்கள் சிலர் கூறினார்கள். எங்கள் கருத்தை வலியுறுத்துவதற்காகத்தான் இந்த முறையை நாங்கள் மேற் கொள்கிறோமே தவிர, கவர்னர் பெருமானை இழிவுபடுத்தவோ அல்லது வேறு வகையில் எண்ணுவதோ அல்ல என்பதைத் தெரி வித்துக் கொள்ள விரும்புகிறேன். மேன்மை தங்கிய கவர்னர் அவர்களது உரையில் சில பல கருத்துக்கள் எடுத்துக் கூறப்பட் டிருக்கின்றன. மதிப்பிற்குரிய கவர்னர் உரைமீது கருத்துக்கள் தெரிவிக்கிறபோது, அதை மிகப் புகழ்பட பாராட்டி எடுத்துக் கூறினார்கள். இந்த தமிழக அமைச்சரவை பெயர் பெற்று, புகழ் பெற்று விளங்குகிறது என்ற கருத்தை கவர்னர் அவர்கள் தெரிவித் தார்கள். தமிழ்நாடு அமைச்சரவை பெயரோடும், புகழோடும், பெருமையோடும், சீரோடும், சிறப்போடும் விளங்குவது எங்களுக்கு மெத்த மகிழ்ச்சி அளிக்கிற ஒன்றேயல்லாது மாறுபட்டதொன் றல்ல. இந்த அமைச்சரவை உயர்ந்திருக்கிறது, சிறந்திருக்கிறது, புகழோடு விளங்குகிறது, பெருமையோடு துலங்குகிறது என்ற கருத்துக்கள் எங்களுக்கு வெறுப்பைத் தருபவைகளல்ல. அந்தப் புகழும், பெயரும் மேலும் ஓங்கவேண்டுமென்ற, மேலும் பெருக வேண்டுமென்ற அடிப்படையில்தான் கருத்துக்களை நாம் இங்கு பரிமாறுகிறோம். மற்ற மாநிலங்கள் உயர்ந்து காணப்பட, நமது தமிழகம் தாழ்ந்து காணப்படும் நிலையை நாங்கள் விரும்புகிறோம் என்று யாரும் தவறாக எண்ண வேண்டாம். பெயருக்கும், புகழுக் கும் ஒரு எல்லை இருக்கிறது, அதற்கு மேல் போவதற்கில்லை என்று சொல்லுவதற்கில்லை. நமக்கு கிடைத்திருக்கக் கூடிய பெயரையும், புகழையும் வளர்க்க வாய்ப்புகளும், வசதிகளும் ஏராளமாகயிருக் கின்றன. அந்த முறையில் நமது தமிழகம் பெயரும், புகழும் அடைந்து சிறப்புற விளங்குவது என்பது உள்ளபடியே மகிழ்ச்சிக் குரியதொன்றாகும். அந்த நிலையை நாங்கள் வெறுக்கவோ அல்லது மறுக்கவோ விரும்பவில்லை. நிர்வாக அனுபவமும், இளமையின் துடிப்பும் நல்ல முறையில் இணைந்த அடக்கமான அமைச்சரவை இது என்று கவர்னர் அவர்கள் தமது உரையில் குறிப்பிட்டிருக் கிறார்கள். நிர்வாக அனுபவமும், இளமையின் துடிப்பும் உள்ள அமைச்சரவை என்று கூறியிருப்பதைப் பார்க்கும்போது நிர்வாக அனுபவம் ஆறு அமைச்சர்களிடமும், இளமைத் துடிப்பு மூன்று அமைச்சர்களிடமும் ஆக 9 அமைச்சர்களிடமும் இந்த இரண்டும் இணைந்த வகையில் இந்த அமைச்சரவை இயங்க பாடுபடுகிறது என்று கருதுகிறேன். மூன்று அமைச்சர்களிடம் உள்ள இளமைத் துடிப்பையும், ஆறு அமைச்சர்களிடமுள்ள நிர்வாக அனுபவத்தை

[Sri V. R. Nedunchezhiyan] [27th April 1962

யும் கொண்டுதான் இவை இரண்டும் ஒன்றாக இணைந்த அமைச்சரவை என்று கூறியிருக்கிறார்கள் என்று நினைக்கிறேன். "புதிய அமைச்சரவை துரிதமாகவும், துணிவுடனும் செயல்பட முனைந்து விட்டது பற்றி நான் மகிழ்ச்சியடைகிறேன்" என்று கவர்னர் அவர்கள் கூறியிருக்கிறார்கள். துரிதமாகவும் துணிவாகவும் எடுத்த நடவடிக்கைகள் பற்றி இந்தப் பேருரையில் எங்கு தேடிப் பார்த்தாலும் அகப்படவில்லை. புதிய அமைச்சரவை துரிதமாகவும், துணிவுடனும் செயல்படுவது எங்கு தென்படுகிறதென்றால், புதிய அமைச்சர் அவையில் உள்ளவர்களின் சுற்றுப்பிரயாணம் துரிதமாக நடக்கிறது. எதிர்க்கட்சிக்காரர்களைத் தாக்கிப் பேசுவதில் துணிச்சல் பயன்படுகின்றது என்று குறிப்பிட வேண்டிய நிலையில் தான் அமைச்சர்கள் இருக்கிறார்கள். ஏன் இதைக் கூறுகிறேன் என்றால் எல்லா மக்களையும் கவனித்து பொதுப்படையாக நின்று, நடு நிலையிலிருந்து பணியாற்றவேண்டிய அமைச்சர்கள், எல்லா மக்களுக்கும் பொதுப்படையாக நின்று பெருந்தன்மையோடும், அரசியல் கண்யத்தோடும் நடந்து கொண்டு மற்றவர்களுக்கு எடுத்துக்காட்டாகயிருக்க வேண்டிய அமைச்சர்கள், இன்னும் சொல்லப்போனால் எதிர்க்கட்சிக்காரர்களுக்கும், மற்றவர்களுக்கும் கற்றுக் கொடுக்க வேண்டிய பொறுப்பு உள்ளவர்கள் எதிர்க்கட்சியினரும், மற்றவர்களும் கொண்டிருக்கிற கொள்கைகளை முழுக்க முழுக்க இழிவாகத் தாக்கிப் பேசும் பணியில் ஈடுபட்டிருப்பதைக் காண்கிறோம். திராவிட முன்னேற்றக் கழகத்தினர் அவர்களுக்கென ஒரு கொள்கையை வைத்துக் கொண்டிருக்கிறார்கள். அந்தக் கொள்கையை நாங்கள் நாட்டிலே பரப்பி வருகிறோம். அந்த நாட்டு விடுதலைக் கொள்கையில் நாங்கள் நம்பிக்கையுடையவர்களாயிருக்கிறோம், அந்தக் கொள்கை வெற்றி பெறும் என்றும் எதிர்பார்க்கிறோம். அந்த நம்பிக்கையோடு அக்கருத்தை நாட்டிலே பரப்பி வருகிறோம். அதற்கு மாறுபட்ட கருத்தைக் கொண்டிருப்பவர்கள் நாட்டுப் பிரிவினை கோரிக்கையை வைத்திருப்பவர்களை விஷப் பாம்பை அடிப்பது போல் அடித்துத் துரத்துங்கள் என்றும், திராவிடப் பிரிவினை பேய் போன்றது. ஆகவே பேய் பிடித்தவர்களை எப்படி வேப்பந்தழையால் அடித்து விரட்டுவார்களோ அதுபோல் விரட்டுங்கள் என்றும் மருந்து கொடுத்துப் பார்ப்போம் பலன் இல்லாவிடில் அறுவை சிகிச்சை மூலம் போக்க முயல்வோம் என்றும், காமாலைக் கண்ணுக்கு எதைப் பார்த்தாலும் மஞ்சளாகத்தான் தெரியும் என்றும், சொல்லும் விதத்தில் அமைச்சர்கள் துணிவோடு ஈடுபட்டிருக்கிறார்கள் என்பதை புது அமைச்சரவை ஏற்பட்ட பிறகு கொடுக்கப்பட்ட விளக்கங்களிலிருந்து அறிகிறோம். கருத்து வேற்றுமைக்கு மதிப்பளிக்கிற தன்மை அமைச்சர்களிடம் அதிகமாக இருக்க வேண்டுமென்று நாங்கள் எதிர்பார்க்கிறோம் என்பதை நான் பணிவன்புடன் தெரிவித்துக் கொள்கிறேன். பொதுத் தேர்தல் குறித்து கவர்னர் உரையில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. "பொதுத் தேர்தலை நடத்துவதற்காக ஏற்படுத்தப்பட்ட மாபெரும் நிறுவனம், சுமூகமாக திறமையோடு பணியாற்றியது பற்றி பெருமகிழ்ச்சியடைகிறேன்" என்று கவர்னர் அவர்கள் குறிப்பிட்டார்கள். அந்த

27th April 1962] [Sri V. R. Nedunchezhiyan]

நிறுவனம் கூடுமான வரையில் நல்லமுறையில் நடந்தது என்பதை ஓரளவிற்கு நான் ஒப்புக்கொள்கிறேன். சென்ற தடவை நடந்ததை விட இந்தத் தடவை அதிகப்படியானவர்கள் வாக்களிப்பதற்கு வாய்ப்புக்கள், வசதிகள் செய்யப்பட்டன. சென்ற தடவை வோட்டு போடுகிற முறை மாறி இப்பொழுது முத்திரை வைக்கும் முறை வந்திருக்கிறது. அதைவிட இது சிறந்தது. இன்னும் அதிகப்படியான மக்கள் வந்து வாக்களிக்க வாய்ப்பளிக்கும் முறையில் இந்த நிறுவனம் நல்ல முறையில் செயல்படவேண்டுமென்றும் கேட்டுக் கொள்கிறேன். அந்த முறையில் இந்த நிறுவனம் இன்னும் செம்மையாவும், மக்கள் அதிகக் கஷ்டப்படாமல் நீண்டதூரம் வர வேண்டியதற்கு அவசியமில்லாத அளவிற்கு நல்லமுறையில் வந்து வாக்களிப்பதற்கான வாய்ப்புக்களை ஏற்படுத்தித் தர முயலவேண்டு மென்று கேட்டுக்கொள்கிறேன். "தங்களிடம் விடப்பட்ட பெரும் பொறுப்பை பொறுமையோடும், நடு நிலைமையோடும் நிறைவேற்றி முடித்த அரசாங்க அலுவலர்கள் அனைவருக்கும் நமது பாராட்டுக் கள் உரியனவாகும்" என்று கவர்னர் அவர்கள் தமது உரையில் குறிப்பிட்டிருக்கிறார்கள். இந்தத் தேர்தலில் எப்படி, எவ்வளவு தூரம் நடுநிலைமையோடு செயல்பட்டது என்பதை எதிர்க்கட்சி நண்பர்கள் பலர் இங்கு எடுத்துரைத்தார்கள். அமைச்சர்களே ஒழுக்க விதிகளை மீறக்கூடிய நிலைமை ஏற்பட்டது என்பதையும் பலர் சுட்டிக் காட்டினார்கள். மற்றும், ஆளும் கட்சியினர்களுக்கு வசதியும், வாய்ப்பும் இருந்த சூழ்நிலையில், ஆளும் கட்சிக்காரர் களுக்கு பயன்படுகிற வகையில் அமைச்சர்களுடைய சுற்றுப் பயணங்கள் அமைந்திருந்தன. அமைச்சர்களாக இருக்கிற கார ணத்தால், அமைச்சர்கள் போகின்ற சுற்றுப்பயணத்தின் போது, அவர்களுக்கு ஏற்படுகின்ற வாய்ப்பும் வசதியும் தேர்தல் காலத்தில் மற்றவர்களுக்குக் கிடைப்பதில்லை. அமைச்சர்கள் தேர்தல் காலத் தில், சுற்றுப்பயணம் செல்கிறார்கள் என்றால், அவர்களோடு அதி காரிகள், கலக்டர், டெப்யூடி கலக்டர்கள், தாசில்தார் இம்மாதிரிப் பட்டவர்கள், மற்றும் பொறியியல் அதிகாரிகள் எல்லோரும் அமைச்சர்களோடு செல்லுவதால் அந்தந்த இடங்களில் தனி வசதியும்; வாய்ப்பும் ஆளுங்கட்சியினருக்கு ஏற்படுகின்ற நிலை மையை நாம் பார்க்கிறோம்.

அடுத்து, நடுநிலைமையாக தேர்தல் நடைபெற வேண்டுமென்றால் அமைச்சர்களாக இருப்பவர்கள், சுற்றுப்பயணம் செய்யாமல், வேண்டுமென்றால் தங்கள் தங்கள் தொகுதியில் மட்டும் சுற்றுப் பயணம் செய்கின்ற நிலைமை ஏற்பட வேண்டும். இல்லாவிட்டால் ஆறு மாதங்களுக்கு முன்பாவது எல்லா அமைச்சர்களும் பொறுப் புகளில் இருந்து விலகிக்கொண்டால் இத்தகைய குறைபாடுகள் இல்லாமல் இருக்கும் என்பதை பணிவன்போடு தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். அமைச்சர்கள் போட்டியிடுகின்ற தொகுதியில் மட்டும் சுற்றுப் பிரயாணம் செய்தால் ஓரளவுக்கு அதிகாரம் மற்ற இடங்களிலாவது கட்டுப்படுத்தப்படும் என்ற அளவில் விட்டுவிடலாம். ஆனால் மற்ற இடங்களிலும் சுற்றுப் பயணம் செய்யப்படுகின்ற காரணத்தால், பல சலுகைகள் ஆளும் கட்சியினருக்கு கிடைக்கின்ற வாய்ப்பு ஏற்படுகின்றது. இப்போது நடந்திருக்கின்ற நிலைமையை எடுத்துக்கொண்டால், அமைச்சர்கள்

[Sri V. R. Nedunchezhiyan] [27th April 1962]

எல்லோரும் சுற்றுப்பயணத்தில் ஈடுபட்டார்கள். ஒவ்வொரு இடத்திற்கும் அமைச்சர்கள் சென்றது, காங்கிரஸ் பிரச்சாரகர்கள் என்ற முறையில் அல்ல. தாங்கள் அமைச்சர் பதவிகளில் இருக்கின்ற காரணத்தால், பயன்படும் என்கிற முறையில் தான் சுற்றுப் பயணத்தை மேற்கொண்டார்கள். அப்படியில்லை என்றால் பதவியில் இல்லாமல் இருக்கும் முன்னாள் அமைச்சர்கள் சுற்றுப்பயணம் செய்திருக்கவேண்டும். அப்படியில்லாமல் அமைச்சர்களாக இருப்பவர்கள் மட்டும் ஒவ்வொரு தொகுதியிலும் சென்றுதிர வேண்டிய நிலை ஏற்பட்டது என்றால், ஆளும்கட்சியினருக்கு அதனால் சலுகைகள் ஏற்பட்டன என்று பொருள். அந்த அளவுக்கு அமைச்சர்களின் சுற்றுப்பயணம் அமைந்திருந்தது. ஆகவே இதைத் தவிர்த்து நான் முன்னால் கூறின இரண்டு முறைகளில் ஒன்றைக் கையாண்டால் நல்ல முறையில் தேர்தல் நடைபெறுவதற்கு உதவிகரமாக இருக்கும் என்பதைத் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். மற்றும் தேர்தல் காலங்களில் அரசியல் கட்சியிலுள்ளவர்கள் எப்படி நடந்து கொண்டார்கள் என்பதைப்பற்றி எடுத்துக் காட்டுகின்ற நிலையில் பல கருத்துக்கள் இரு தரப்பிலிருந்தும் வழங்கப்பட்டன. தேர்தல் காலத்தில் பண வலிவும், அதிகார வலிவும், ஆதிக்க வலிவும், ஜாதி வலிவும் எந்த முறையில் வேலை செய்தன என்பதையும் பல உறுப்பினர்கள் இங்கே எடுத்துக் கூறினார்கள். இந்த மன்றத்தில் ஆளும்கட்சியைச் சேர்ந்த உறுப்பினர்கள் எடுத்து தெரிவித்த கருத்துக்களில், மாற்று கட்சியினர் தேர்தலில் பணத்தைக் கொடுத்து வோட்டுக்களை வாங்கினார்கள் என்றும், மாற்று கட்சியினருக்கு ஏராளமான பணம் கொடுக்கப்பட்டது, அதைக்கொண்டுதான் தேர்தல் நடத்தினார்கள் என்றும், சில இடங்களில் வாக்காளர்களிடம் கொடுக்க இருந்த பணத்தை பிடுங்கி அதிகாரியினிடத்தில் ஒப்படைத்துவிட்டோம் என்றும் தெரிவிக்கப்பட்டன. இது குறித்து நான் ஒன்றே ஒன்றை மட்டும் எடுத்துக் காட்ட விரும்புகிறேன்.

பொறுப்புள்ள நிலைமையில் இருக்கின்ற, நடுநிலைமையிலிருந்து செய்திகளை வெளியிடுகின்ற ஒரு நாளிதழில் இது குறித்து வந்த ஒரு கருத்தை மட்டும் இங்கே எடுத்துக் காட்ட விரும்புகிறேன். அந்த பொறுப்புள்ள நாளிதழில் எழுதப்பட்டிருக்கிற கருத்து என்ன என்பதையும் குறிப்பாகச் சொல்ல விரும்புகிறேன். அந்த பத்திரிகையைச் சேர்ந்த ஒரு நிருபர் ஏறக்குறைய ஆயிரம் மைல்களுக்கு மேல் ஏழு மாவட்டங்களில் தமிழ்நாட்டில் சுற்றுப்பிரயாணம் செய்ததாகவும், அங்கங்கே இருக்கின்ற பல்வேறு கட்சித் தலைவர்களிடம் கலந்து தேர்தல் நிலைமைகளைப்பற்றி எல்லாம் பேசியதாகவும், அங்கங்கே தேர்தலில் போட்டியிடுகின்ற வேட்பாளர்களைச் சந்தித்ததாகவும், பல இடங்களிலும் தேர்தலில் நிலை எப்படியிருக்கிறது, ஆங்காங்கே மக்கள் என்ன மனப்பான்மையில் இருந்து கொண்டிருக்கிறார்கள்? மக்களுடைய மனம் எந்த நிலைமையில் வேலை செய்கிறது? அந்தந்த தொகுதியிலுள்ள மக்கள் அந்தந்த தொகுதியிலுள்ள வேட்பாளர்களைப்பற்றி என்னென்ன நினைக்கிறார்கள்? என்பதைப்பற்றியெல்லாம் தான் தெரிந்து கொண்டதாகவும் அதில் தெரிவித்திருக்கிறார். அதோடு, சென்னையின் பக்கத்திலுள்ள ஒரு தொகுதியில் போட்டியிடும் காங்கிரஸ்

27th April 1962] [Sri V. R. Nedunchezhiyan]

அபேட்சகரை சந்தித்ததாகவும் குறிப்பிட்டிருக்கிருர். அந்த அபேட்சகரைப் பற்றி குறிப்பிட்டிருப்பதில், அவர் சமீபத்தில் அரசியல் கட்சிக்கு வந்தவர் என்றும் எதிர்க்கட்சித் தலைவர்களில் ஒருவரை எதிர்க்கின்ற முக்கிய அபேட்சகராகவும் விளங்கிஞர் என்றும் கூறிவிட்டு, அந்த அபேட்சகரிடம் எப்படித் தேர்தல் இருக்கிறது என்று கேட்டதற்கு, அவர் உடனே சட்டைக்குள் கை விட்டு, ஒரு கத்தை ரூபாய் நோட்டுகளை எடுத்துத் தரை மீது வீசி எறிந்துவிட்டு, "இது இருக்கிற வரையில் என்னுடைய தேர்தல் வெற்றிகரமாக நடைபெறுவதில் சந்தேகமேயில்லை, என்னுடைய பஸ் பெட்ரோல் இருக்கிற வரையில் ஓடுவது மாதிரி, இந்தத் தேர்தலும் இதனுல் நடந்து கொண்டிருக்கும்" என்று சொன்ன தாகவும் அவர் தெரிவித்திருக்கிருர்.

"Early in my tour nearer, Madras City, I happened to meet a Congress candidate, a new-corner to politics, who, however is lucky to be among a handful of Congress candidates opposing top opposition leaders. At my first question, he took out from his inner pocket a sheaf of currency notes and carelessly threw them on the ground, and said: 'So long as this is available, the election goes on. It is like petrol to my bus. என்று கூறிவிட்டு, இதை நிருபர் குறிப்பிடும்போது, He was honest and frank because he indicated what wins elections." என்று எழுதியுள்ளார். இதை வெளிப்படையாக உண்மையாகவே தெரிவித்தார் என்று 18—2—1962 தேதி "மெயில்" இதழில் எழுதியுள்ளார். அதற்கு பிறகு தேர்தல் நடந்திருக்கின்றது. எதற்கு இதை எடுத்துத் தெரிவிக்கிறேன் என்ருல், இந்தக் கருத்துக்களை எல்லாம் எடுத்துப் பேசுகின்ற நேரத்தில், யார் யார் எந்தெந்தக் குற்றங்களைச் செய்தார்கள் என்பதை எல்லாம் விட்டு விட்டு எதிர்காலத்தி லாவது, தேர்தல் நேரங்களில் பண வலிவுக்கும், ஆதிக்க வலிவுக்கும், ஜாதி, வலிவுக்கும் இடம் கொடுக்காத அளவுக்கு, எல்லோருடைய மனசான்றுகளுக்கு ஏற்றவாறு நடந்து கொள்ளக் கூடிய சூழ்நிலையை, இந்த மன்றத்தில் உள்ள நாம் அனைவரும் ஏற்படுத்த வேண்டும் என்பதை அன்போடும் பணி வோடும் தெரிவித்துக் கொள்கின்ற வகையில் தான் நான் இதை எடுத்துக் கூறினேன். குற்றச்சாட்டுகள் என்று வருகின்ற காலத்தில் மாறி மாறி குற்றங்களை கூறிக் கொண்டிருந்தால், எப்படி இந்த மன்றத்தின் பெருமையும் புகழும் காப்பாற்றப்படும்? எப்படி நாம் நம்மை நாமே பெருமைப்படுத்திக்கொள்ள முடியும் என்பதைச் சிந்தித்துப் பார்க்கவேண்டும். எதிர்காலத்தில் நல்ல முறையில், தேர்தல் நடத்தவேண்டும், எதிர்காலத்தில் இந்த நாட்டின் ஆக்கவேலைகளுக்கு நம்முடைய சக்தியை எல்லாம் பயன்படுத்த வேண்டும் என்கின்ற அளவில் அதற்குத் தகுந்தவாறு நம்மை நாமே திருத்திக் கொள்ள வேண்டியவர்களாக இருக்கிரேம் என்பதை உணர்த்துவதற்காகத்தான் இதை நான் சுட்டிக்காட்டு கின்றேன்.

அடுத்து . . . தோழர்களே . . . (சிரிப்பு)

(இச்சமயத்தில் ஸ்ரீமதி டி. என். அனந்தநாயகி அவர்கள் பேசு வதற்கு எழுந்தார்கள்).

[Sri V. R. Nedunchezhiyan] [27th April 1962

மன்னிக்கவும்... மதிப்பிற்குரிய தலைவர் அவர்களே, ... ஐந்தாண்டுத் திட்டங்களைப்பற்றியும் அதனுடைய வளர்ச்சியைப் பற்றியும் கவர்னர் அவர்களது உரையில் எடுத்துக் கூறப்பட்டிருக்கிறது. திராவிட முன்னேற்றக் கழகத்தைப் பொறுத்தவரையில் திட்டமே கூடாது என்று கூறுபவர்கள் அல்ல திராவிட முன்னேற்றக் கழகத்தினர். திட்டத்தைப் பொறுத்த வரையில், திட்டத்தோடு ஒரு ஆட்சி நடைபெற வேண்டும் என்பதைத் திராவிட முன்னேற்றக் கழகம் நல்ல முறையில் உணர்ந்திருக்கிறது. திட்டமே இல்லாமல் ஆட்சி நடைபெற வேண்டும் என்று திராவிட முன்னேற்றக் கழகம் கூறவில்லை. இந்தியாவில் மூன்று ஐந்தாண்டுத் திட்டங்களைப்போட்டு, தற்போது இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்களை முடித்துவிட்டு, இப்போது மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தை நிறைவேற்றுகின்ற நிலைமை இன்றைக்கு வந்திருக்கிறது.

ஐந்தாண்டுத் திட்டங்களைப் பற்றி எடுத்துச் சொல்லுகிற நிலைமையில், மூன்று ஐந்தாண்டுத் திட்டங்களிலேயும் ஒதுக்கப்பட்டிருக்கிற பணம், தமிழகத்தைப் பொறுத்த வரையில் மிகக் குறைவாக ஒதுக்கப்பட்டிருக்கிறது—திட்டங்கள் மிகக் குறைவாக மேற்
11-30 கொள்ளப்பட்டிருக்கின்றன—என்பதைத் தான் திராவிட முன்
a.m. னேற்றக் கழகத்தார் அடிக்கடி சுட்டிக்காட்டி வருகிறார்கள். இந்த முதல் ஐந்தாண்டுத் திட்டத்திலே பொதுவாக இந்தியத் துணைக் கண்டத்திற்கு ஒதுக்கப்பட்ட தொகை 1960 கோடியிலே தமிழகத்தில் நிறைவேற்றப்பட்டிருக்கிற திட்டத்தின் அளவு 80 கோடி என்றும் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் பொதுத் துறைக்கு மொத்தமாக ஒதுக்கப்பட்ட 4600 கோடியில் தமிழகத்தில் 156 கோடி அளவுக்கு நிறைவேற்றப்பட்டிருக்கிறது என்றும், மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் 7500 கோடி ரூபாய் பொதுத் துறையில் இந்தியத் துணைக்கண்டம் பூராவுக்குமாக ஒதுக்கப்பட்டதில் தமிழகத்தில் நிறைவேற்றப்பட வேண்டிய திட்டங்களுக்கு 291 கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது என்றும் அறிக்கையிலே குறிப்பிடப் பட்டிருக்கின்றன. இதை நாம் கவனிக்கின்ற போது, இந்தியத் துணை கண்டத்தின் மக்கள் அளவைப் பார்க்கும்போது, அதோடு தமிழகத்தில் வாழக்கூடிய மக்கள் அளவைப் பார்க்கும் போது, தமிகழத்தில் வாழக்கூடிய மக்கள் அளவு இந்தியத் துணைக் கண்டத்தில் வாழக்கூடிய மக்கள் அளவில் பத்தில் ஒரு பகுதி என்று அறிகிறோம். இந்தியத் துணைக்கண்டம் பூராவுக்கும் ஒதுக்கப்பட்ட தொகையில் 10-ல் ஒரு பகுதி, அதாவது 10 சதவீதம் தமிழகத்திற்குக் கிடைத்திருக்க வேண்டும். ஆனால் கிடைத்திருப்பது 4 சதவீதம் தான்—அதாவது 4 சதவீத அளவுக்குத் தான் முதல் ஐந்தாண்டுத் திட்டத்திலே தமிழகத்தைப் பொறுத்த வரையில் நிறைவேற்றப்பட்டிருக்கிறது. அதை விட்டு இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தை எடுத்துக் கொண்டால், இந்தியத் துணைக்கண்டத்தின் மக்கள் அளவையும் தமிழகத்தின் மக்கள் அளவையும் கணக்கிட்டுப் பார்க்கும்பொழுது, தமிழகத்திற்கு 10 சதவீதம் அளவிற்குக் கிடைக்க வேண்டியிருந்தும், கிடைத்திருப்பது 4 சதவீதம் தான். மூன்றாவது ஐந்தாண்டுத்

27th April 1962] [Sri V. R. Nedunchezhiyan]

திட்டத்திலே கணக்கிட்டுப் பார்த்தாலும், 10 சதவிதம் கிடைக்க வேண்டும்—ஆனல் 7,600 கோடியில் நமக்குக் கிடைத்திருப்பது 4 சதவித அளவுக்குத்தான். 10—10 சதவிதம் மூன்று ஐந்தாண்டுத் திட்டங்களிலும் கிடைக்கவேண்டும் என்று வைத்துக்கொண்டால், கிடைத்திருப்பது 4—4 சதவிதங்கள் தான். மேற்கொண்டு 6—6 சதவிதம் கிடைக்க வேண்டியது கிடைக்கவில்லை. எனவே, அதிக மாக வற்புறுத்தித் திட்டத்தின் அடிப்படையில் தொகை வாங்கப் படுமானல், அப்படி வாங்குவதற்கான வழிவகைகளைப் பார்க்கு மானல், தமிழகம் மேலும் சிறக்கும், தமிழகத்தில் மேலும் தொழில்கள் பெருகும். மேலும் திட்டங்கள் நிறைவேற்றப்படும், வேலையில்லாத் திண்டாட்டம் ஓரளவுக்குக் குறையும், மக்கள் வாழ்க்கைத்தரம் ஓரளவுக்கு வளர வழிவகை ஏற்படக்கூடும். இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்களிலும் தமிழகம் புறக்கணிக்கப் பட்டிருக்கிறது என்பதை நான் ஓரளவுக்கு எடுத்து உணர்த்த ஆசைப்படுகிறேன்.

"தென் நாடு ஒன்றும் தேயவில்லை, வட நாடு ஒன்றும் வாழவில்லை, இரண்டும் சமமான அளவில் தான் இருக்கின்றன" என்று ஆளும் கட்சி உறுப்பினர்கள் தெரிவிக்கிருர்கள். நான் ஒரு குறிப்பை எடுத்து வைக்க ஆசைப்படுகிறேன். "நாஷனல் கவுன்சில் ஆஃப் அப்ளைட் எக்கனமிக் ரிஸர்ச்" என்ற ஆராய்ச்சி நிறுவனம் டாக்டர் பி. எஸ். லோகநாதன் அவர்களை டைரக்டர்-ஜெனரலாகக் கொண்டு இயங்குகிறது. அது ஒரு அறிக்கையை 1960-ம் ஆண்டில் சமர்ப்பித்தது. 7—6—1960-ல் அந்த அறிக்கையை இங்கே சென்னை அமைச்சர்களை உடன் வைத்துக்கொண்டு டாக்டர் பி. எஸ். லோகநாதன் அவர்கள் வெளியிட்டார்கள். அதில் குறிப்பிடப் பட்டிருக்கிற ஒரு கருத்தை அமைச்சர்கள் கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன்.

"The development pattern in future will necessarily be dominated by the growth of industries as agriculture has more or less already played its part. A total investment of Rs. 2,000 crores of development finance would be needed during the next ten years. Madras should include a vigorous programme to develop large scale industries. In the matter of large scale industries the position in Madras compared unfavourably with either Bombay or West Bengal."

(Report of the National Council of Applied Economic Research—Dr. P. S. Lokanathan—Director-General—7th June 1960.)

டாக்டர் பி. எஸ். லோகநாதன் அவர்கள் மிகத் தெளிவோடு எடுத்துக் கூறியிருக்கிருர்கள். தொழில் வளர்ச்சி அடிப்படையில் வைத்துப் பார்க்கும்போது பம்பாயோ அல்லது மேற்கு வங் காளமோ வளர்ந்திருப்பதை ஒப்பிட்டுப் பார்க்கும்போது தமிழகம் மிக மிகப் பின் தங்கிய நிலையில் இருக்கிறது என்று ஆராய்ச்சி செய்த டாக்டர் பி. எஸ். லோகநாதன் அவர்கள் எடுத்துத் தெரிவித் திருக்கிருர்கள் என்பதைத் தான் எடுத்துச் சுட்டிக் காட்ட விரும்பு கிறேன். இந்த ஐந்தாண்டுத் திட்டங்களில் தமிழகத்தைப்

[Sri V. R. Nedunchezhiyan] [27th April 1962

பொறுத்த வரையில் நியாயம் வழங்கப்படவில்லை என்ற கருத்தை எடுத்து வைக்கவும், ஆகவே தமிழகத்திற்குப் பெறவேண்டிய தொகையைப் பெறுவதற்கு அமைச்சர்களும், மற்றவர்களும் முயல வேண்டும் என்று தெரிவிப்பதற்காகவும் இதை நான் தெளிவு பட எடுத்து வைக்க விரும்புகிறேன்.

அடுத்தபடியாக விலைவாசிகள் குறைக்கப்பட வேண்டும் என்ற அத்தகைய கருத்தை திராவிட முன்னேற்றக் கழகத்தார் வற் புறுத்தி வருகிறார்கள். மற்ற எதிர்க்கட்சியினரும் வற்புறுத்தி வருகிறார்கள். ஆனால் கட்சியைச் சேர்ந்தவர்களே எடுத்துக் கூறினார்கள். கவர்னர் பெருமான் அளித்திருக்கிற உரை இருக்கிற நிலைமையை எடுத்து விளக்கும் தன்மையில் இருக்கிறதே தவிர, கொள்கைகளை விளக்கும் முறையில் அமையவில்லை. அப்படிக் கொள்கைகளை விளக்கும் முறையில் அமைந்திருக்குமானால், அடுத்த இரண்டு தினங்களுக்குப் பிறகு நிறைவேறவிருக்கிற நிதி நிலை அறிக்கையைத் தயாரிப்பதில் இப்போது இங்கே வழங்கப்படுகிற கருத்துக்கள் ஓரளவுக்கு உதவி செய்வனவாக அமையக் கூடும். அறிக்கையில் குறிப்பிடும்போது "புதிய அரசாங்கத்தின் கொள்கைகள், வேலைத் திட்டங்கள்பற்றி நிதி அமைச்சர் தமது நிதிநிலை அறிக்கை உரையில் விளக்கமாகக் கூறு வார்" என்று சொல்லி, இப்போது எந்த நிலைமைகளைப்பற்றி, புதிய திட்டங்களைப் பற்றியும், தங்கள் கொள்கைகளைப் பற்றியும் விளக்காமல், பின்னால் விளக்குவார்கள் என்று சொல்லப்பட்டிருக் கிறது. கவர்னர் உரை கொள்கை விளக்கத்திற்குப் பயன்படுத்தும் வகையில் அமைத்திருந்தால், சட்ட மன்ற உறுப்பினர்கள் எடுத்துக் கூறுகிற கருத்துக்களை வைத்துக்கொண்டு, பின்னால் தயாரிக்கப் படவிருக்கிற நிதி நிலை அறிக்கையில் அத்தகைய திட்டங்களையும், கருத்துக்களையும் சேர்த்துக்கொள்ள வழிவகை பிறக்கக் கூடும்.

இந்த உரையில் நாட்டு மக்களும் மற்றவர்களும் எதிர்பார்த்தது என்னவென்றால் தங்களது உடனடியான பிரச்சனைகள் தீர்க்கப் படும் என்பதாகும். நாட்டு மக்களுக்கு இருக்கிற உடனடியான பிரச்னை தங்களால் தாங்க முடியாது இருக்கிற விலைவாசி உயர்வு, அத்தகைய விலைவாசி உயர்வைக் குறைக்க வழிவகை ஏற்படும் என்று எதிர்பார்த்தார்கள். இன்றைக்குள்ள திட்டங்களில் குடி தண்ணீர்த் திட்டங்கள் மிகவும் நல்ல முறையில் நிறைவேற்றப் படுவதற்கு வழிவகை காணப்பட வேண்டும் என்று சென்னை போன்ற நகரங்களிலும், வேறு பல சிற்றூர், பேரூர்களிலும் இத் தகைய பிரச்னை வெகுவாகக் காணப்படுவதால், மக்கள் எதிர் பார்த்தார்கள். அதோடு வேலையில்லாத் திண்டாட்டம் மேலும் மேலும் வளருகிற நிலைமை இருக்கிறது. வேலையில்லாத் திண்டாட்டத்தைப் போக்க வழிவகை காண்பதற்கும் இந்த உரையிலே இடம் இருக்கும் என்று நாட்டு மக்கள் எதிர்பார்த் தார்கள். இந்த மூன்று கருத்துக்களுக்கும் இடம் இல்லாத வகையில், இருக்கிற நிலைமையை எடுத்துக் காட்டும் தன்மையில் உரை விளங்குகிறது. விலைவாசி கட்டுப்படுத்தப்பட வேண்டியது அவசியம் என்று எனக்கு முன்னால் பேசிய பல உறுப்பினர்களும்

27th April 1962] [Sri V. R. Nedunchezhiyan]

சுட்டிக்காட்டினார்கள். திராவிட முன்னேற்றக் கழகத்தினரும் அதை மிகவும் வற்புறுத்தி வந்திருக்கிறார். விலைவாசிகளைக் குறைக்க வேண்டிய அவசியத்தை அவ்வளவு உறுப்பினர்களும் மிகத் தெளிவுபட எடுத்துக் கூறியிருக்கிறார்கள். விலைவாசிகளைக் குறைக்க வேண்டிய வழிவகைகளைக் காண வேண்டியவர்களாக நாம் இருக்கிறோம். அதை அமைச்சர்கள் ஏற்று நடைமுறையில் கொண்டுவர கடப்பாடு உடையவர்களாக இருக்கிறார்கள். தாங்க முடியாத அளவுக்கு விலைவாசிகள் ஏறியிருக்கிற தன்மையை பார்க்கும்போது, விலைவாசி உயர்வுக்கான காரணங்களை ஆராய்ந்தால், அது நீக்கப்படுவதற்கான வழிவகைகளைக் காணும் நிலைமைகள் ஏற்பட முடியும்.

தேவை அதிகமாகவும், உற்பத்தி குறைவாகவும் இருக்கும் அத்தகைய ஒரு நிலைமை காரணமாக இருக்கக்கூடும். அல்லது உற்பத்தியில் குறிப்பிட்ட ஒரு பகுதியை விலைக்கு வாங்கி, பின்னர் அதை அதிக விலைக்கு விற்பதற்காகப் பதுக்கி வைத்திருப்பது விலைவாசி ஏறுவதற்குக் காரணமாக இருக்கலாம். அல்லது வாய்தா போச் சந்தை நடப்பதன் மூலமாக விலைவாசி ஆங்காங்கே ஏறுவதற்குக் காரணமாக இருக்கக்கூடும். இந்த வாய்தா பேரச் சந்தையானது பம்பாயிலிருந்து ஆரம்பித்து அகில இந்தியாவையும் கட்டுப்படுத்தும் அளவுக்கு நடைபெறுகிறது. ஏற்றுமதி, இறக்குமதி கோட்டாக்களில் செய்யப்படும் மாறுதல்கள் விலைவாசி ஏற்றத்திற்குக் காரணங்களாக அமைந்து விடுகின்றன. போக்குவரத்து வசதியின்மையும் ஆங்காங்கே விலைவாசி ஏற்றத்திற்குக் காரணமாக அமைந்துவிடுகிறது. பண வீக்கம் மிக முக்கிய காரணமாக அமைந்துவிடுகிறது என்று பொருளாதார நிபுணர்கள் எடுத்துரைக்கின்றனர். பல விலைகள் அகில இந்திய ரீதியில் நிர்ணயிக்கப்படுவதன் காரணமாகவும், அத்தகைய தன்மை ஒரு சிலரிடம் அமைந்து போகின்றதன் காரணமாகவும், அவர்கள் அகில இந்திய ரீதியில் ஒரு விலையை நிர்ணயித்து விடுவதன் காரணமாகவும் நாம் எதிர்பார்க்கின்ற அளவுக்கு பொருள்களின் விலைகள் அமையாமல், விலைவாசி ஏற்றத்திற்கு காரணமாக அவைகள் அமைந்துவிடுகின்றன. ஆகவே, இந்த அளவிலே பார்க்கின்றபோது மாபெரும் உற்பத்தியானாலும் ஒரு சிலருக்கே அந்த உற்பத்தி அனைத்தும் ஏகபோக கோட்டாவாகி விடுகின்றது. அதன் காரணமாக இரும்பை உற்பத்தி செய்கின்ற டாட்டா கம்பெனியார் தாங்கள் நிர்ணயம் செய்கின்ற அளவையே ஒரு அளவாக வைத்துக்கொண்டு அரசியல் துறையிலே அமைகின்ற அத்தகைய இரும்புக்கும் நிர்ணயம் செய்யக்கூடிய ஒரு நிலைமை ஏற்படுகின்ற காரணத்தினாலே, விலைவாசி ஏறுமுகமாகும் தன்மை அடைந்துவிடுகிறது. இதைப் போக்குவதற்கு வழிவகைகளை அவ்வப்போது பொருளாதார நிபுணர்கள் ஆராய்ந்து தெரிவித்துக் பண வீக்கம் மிக முக்கிய காரணமாக அமைந்துவிடுகிறது என்று பொருளாதார நிபுணர்கள் எடுத்துரைக்கின்றனர். பல விலைகள் மாறுதல்கள் விலைவாசி ஏற்றத்திற்கு காரணங்களாக அமைந்து விடுகின்றன. போக்குவரத்து வசதியின்மையும் ஆங்காங்கே

[Sri V. R. Nedunchezhiyan] [27th April 1962

விலைவாசி எற்றத்திற்குக் காரணங்களாக அமைந்து விடுகிறது. கொண்டு வருகிறார்கள். உற்பத்தியை உண்மையாகவே மிகைப் படுத்த வேண்டியவர்களாக நாம் இருக்கிறோம். இன்றைக்கு உற்பத்தி பெருகி இருக்கிறது என்ற கணக்கு ஒரு பக்கத்திலே காட்டப்படுகிறது. மற்றொரு பக்கத்திலே விலைவாசி ஏறிக் கொண்டிருக்கிறது. உற்பத்தி பெருகியிருப்பது உண்மையானால், விலைவாசி ஓரளவு குறைந்து காணப்படுவது அவசியம். ஆனால் விலைவாசி ஏறிக்கொண்டே போவதன் காரணத்தினாலே ஒன்று உற்பத்தி பெருக்கம் ஏற்படுகிறது என்று சொல்கிற கணக்கு சரியான கணக்காக இல்லாமல் இருக்க வேண்டும்; அல்லது உற்பத்தி செய்யப்படுகிற பொருள்கள் பதுக்கி வைக்கப்பட்டு, விலையேற்ற காலத்திலே அவைகளை விற்கும்படியான ஒரு சூழ்நிலை இருக்க வேண்டும். உற்பத்திப் பெருக்கம் உண்மையாகவே இருக்குமானால், பதுக்கி வைத்திருக்கிறார்கள் என்ற ஒரு நிலைமை ஏற்பட்டிருக்க வேண்டும் என்கிற ஒரு முடிவுக்கு நாம் வர வேண்டியவர்களாகத் தான் இருக்கிறோம்.

ஒரு நியாயமான அளவுக்கு மேல் சரக்குகளைக் குத்தகை வியாபாரிகள் வைத்திருக்கக் கூடாதென்று ஒரு நிலைமையை ஆட்சியாளர்கள் அப்போது ஏற்படுத்தினால், விலைவாசி குறையலாம். அதற்கான வழிவகைகளை அவர்கள் செய்யக் கடமைப்பட்டிருக்கிறார்கள். இன்றியமையாத பண்டங்களுக்கு உச்ச விலை நிர்ணயிப்பதன் மூலமாகவும், அப்படி நிர்ணயிக்கப்படும் உச்சவிலையைத் திறம்பட காப்பாற்றுவதன் மூலமாகவும் விலைவாசியைக் குறைக்க நாம் கடமைப்பட்டிருக்கிறோம். அரிசி ஒரு முக்கியமான பண்டமாக, இறக்குமதிக்கு முன்கூட்டியே ஏற்பாடு செய்யக்கூடிய அளவிலே நாம் இருக்கிறோம். ஆகவே, அரிசியைப் பொறுத்த அளவில் அண்மையிலே ஒரு கமிட்டியொன்று இந்திய அரசினரால் அமைக்கப்பட்டு, ஆராய்ந்து, தன் கருத்தை அவர்கள் மக்களிடத்திலே அறிக்கை மூலமாக சமர்ப்பித்திருக்கிறார்கள். 1957-ல் **Foodgrains Enquiry Committtee** என்ற ஒரு கமிட்டி அசோக் மேத்தா அவர்களுடைய தலைமையில் அமைக்கப்பட்டது. அந்த அசோக் மேத்தா கமிட்டி ஒரு அறிக்கையை சமர்ப்பித்திருக்கிறார்கள்.

"It is said categorically that for the next ten years there will be food deficit in India in spite of our best efforts to improve the condition and that we must make regular arrangements for the import of foodgrains for the period". என்று அவர் தெளிவுபட எடுத்துக் கூறியிருக்கிறார். அதுமட்டுமல்லாமல், அந்த அறிக்கையில் குறிப்பிட்டு இருக்கிறார்கள்.

"The buffer stock operation can be a most effective instrument for the stabilisation of the prices of foodgrains . . . If the Foodgrains Stabilisation Organization starts operating from a position of strength with sufficient stocks at its disposal and sufficient funds to invest, it will soon find itself in the position of a dominant . . ."

27th April 1962] [Sri V. R. Nedunchezhiyan]

(At this stage, the hon. Member Sri V. R. Nedunchezhian faltered in his speech and was about to faint when he was supported by the member sitting next to him and prompt first aid was given to him).

MR. SPEAKER : அங்கத்தினர்கள் எல்லாம் அவரவர்களுடைய இடத்திலே அமர்ந்து கொள்வது நல்லது. இப்போது இன்னொரு தலைவர் பேசியவுடனே, தீர்மானமும், திருத்தங்களும் வோட்டுக்கு விடப்படும். ஆகவே, அங்கத்தினர்கள் அவரவர்களுக்கு குறிப்பிட்ட இடத்திலே அமைதியாக அமர்ந்திருந்து, இன்னுமுள்ள நிகழ்ச்சிகளில் கலந்து கொள்ளவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

தீர்மானங்களும், திருத்தங்களும் பரிசிலனைக்கு எடுத்துக் கொள்ளப்படும்போது அவைகள் இந்தச் சபைக்கு முன்பாக வைக்கப்படும். இந்த விவாதம் முடிந்தவுடனே, அவைகள் வோட்டுக்கு விடப்படும். முதல் முதலாக குரல் வோட்டுக்கு விடப்படும் என்பது உங்களுக்குத் தெரியும். இதில் சாதகமாக இருக்கக்கூடியவர்கள் "எஸ்" என்றும், ஆட்சேபணை தெரிவிப்பவர்கள் "நோ" என்றும் சொல்லவேண்டும். இங்கே புதியதாக வந்திருப்பவர்கள் அல்லது முன்னாலேயே இருந்த அங்கத்தினர்களாக இருந்தாலும்சரி அதைச் சொல்லுவதற்குச் சற்று சங்கோஜப்படுகிறார்கள் என்று அறிகிறேன். அதனாலே கொஞ்சம் உரக்கச் சொல்ல வேண்டும். சொல்லி முடிந்தடவுனே சபாநாயகர் **Ayes have it** அல்லது **Noes have it** என்று குரல்களின் ஓசைக்கேற்றவாறு அவரது அபிப்பிராயத்தைச் சொல்வார். அப்படி இரண்டு தடவை சொல்வார். உடனே யாதொரு ஆட்சேபணையும் எழுப்பப்படாவிட்டால் "தீர்மானம் நிறைவேறியது" அல்லது "தீர்மானம் தோற்கடிக்கப்பட்டது" என்ற முடிவான தீர்ப்பை அளிப்பார். ஆகையால் **Ayes have it** அல்லது **Noes have it** என்று இரண்டு தடவை சபாநாயகர் கூறி முடிப்பதற்குள் ஆட்சேபணை செய்ய நினைக்கும் கனம் அங்கத்தினர் தாம் ஆட்சேபிப்பதாகவும், வோட்டுக்கு விடும்படியும் அறிவிக்க வேண்டும். அப்படி அறிவிக்காவிட்டால் முடிவான தீர்ப்பு அளிக்கப்பட்டுவிடும். பின்னாலே ஆட்சேபணை செய்தால் அது ஒப்புக்கொள்ளப்படமாட்டாது. ஆகவே, நன்றாக கவனத்தோடு அங்கத்தினர்கள் நிகழ்ச்சிகளிலே பங்கெடுத்துக்கொள்ள வேண்டும். முதன்முதலில் திருத்தங்கள் ஒவ்வொன்றாக எடுத்துக் கொள்ளப்படும். அவைகள் முடிந்த பிறகு, தீர்மானம் எடுத்துக்கொள்ளப்படும்.

SRI V. R. NEDUNCHEZHIYAN : அவைத் தலைவர் அவர்களே, மயக்கத்தின் காரணமாக நான் பேசவேண்டிய பேச்சுக்களை பேச முடியாமல் போய்விட்டது. அதற்காக என்னை மன்னிக்க வேண்டுமாறு கேட்டுக்கொள்ளுகிறேன். புதியதாக இருக்கிற காரணத்தினாலும், பொறுப்பு உணர்ச்சி அதிகமாக இருக்கிற காரணத்தினாலும், அளவுக்கு மீறி நான் கண்விழித்துக் கருத்துக்களைத் திரட்டுகிற பொறுப்பு உணர்ச்சியில் ஈடுபட்ட காரணத்

[Sri V. R. Nedunchezhiyan] [27th April 1962

தினாலும் தேவைக்கு மேலே கருத்துக்களை எல்லாம் இரவெல்லாம் திரட்டிய காரணத்தினாலும் கண்கோளாறின் காரணமாகவும் ஏற்பட்டதாக இருக்கக்கூடும் என்று நான் கருதுகிறேன். எனவே இந்தக் குறையை பொறுத்தருளுமாறு அவைத்தலைவர் அவர்களையும், மற்ற உறுப்பினர்களையும் நான் கேட்டுக்கொள்ள விரும்புகிறேன்.

MR. SPEAKER : How long does the hon. Member propose to take?

SRI V. R. NEDUNCHEZHIYAN : Five minutes more.

MR. SPEAKER : All right.

SRI V. R. NEDUNCHEZHIYAN : இந்த அளவிலே கவர்னர் பேருரையின் மீது கூறப்பட்டிருக்கிற கருத்துக்களையொட்டி எதிர் காலத்திலே நல்ல பல நடவடிக்கைகள் எடுக்க வேண்டும் என்பதை வற்புறுத்தவும், விலைவாசிகளின் உயர்வைக் குறைக்கவும், மக்களுக்கு இன்றியமையாத தேவையாக இருக்கிற குடி தண்ணீர் வசதியை ஏற்படுத்தித் தரவும், வேலையில்லாத் திண்டாட்டத்தைப் போக்குவதற்கு வழிவகைகள் காணவும், புதிய தொழிற்சாலைகள் இங்கே ஏற்படுத்துவதற்கான முறையில் திட்டங்கள் தீட்டவும், மத்திய சர்க்காரிடம் அதிகமாக வற்புறுத்தி அவர்களிடமிருந்து பெரிய தொழிற்சாலைகளை நிறுவுவதற்கான நியாயமாக நமக்குக் கிடைக்க வேண்டிய தொகையை மேற்கொண்டு பெறவும், அதற்கான முயற்சியில் ஈடுபடவும், இந்த மாநிலத்தை மேலும் நல்ல நிலைமையில் கொண்டு வருவதற்கான திட்டங்கள் தீட்டவும் அமைச்சர் அவை ஏற்பாடுகள் செய்யவேண்டுமென்று நான் கேட்டுக்கொள்ளுகிறேன்.

நான் முதலில் எடுத்துக் கூறியது மாதிரி, இந்த அமைச்சர் அவை செய்கின்ற எல்லா நல்ல செயல்களுக்கும் நாங்கள் உறுதுணையாக இருப்போம். நாட்டில் குறைபாடுகள் ஏற்படும்பொழுது, குற்றங்கள் ஏற்படுகின்ற நேரத்தில், அவைகளைச் சுட்டிக் காட்டவும், குறைபாடுகளை எடுத்துக் காட்டவும், அவைகளைப் போகக்வேண்டுமென்று வற்புறுத்தவும் நாங்கள் கடமைப்பாடு உடையவர்களாக இருக்கிறோம். அப்படிக் குற்றங் குறைகளை எடுத்துச் சொல்லுகிற பொழுது, ஆளுங் கட்சியினரும் அமைச்சர்களும் பொறுமையோடு எங்களுக்கு வழிவகை கண்டெடுத்து சொல்லுகிற அளவுக்கு நடந்து கொள்ளவேண்டுமென்று நான் கேட்டுக்கொள்ளுகிறேன். கவர்னர் பேருரையில் இத்தகைய இன்றியமையாத தேவைகள் வற்புறுத்தப்படாததன் காரணமாக அதை நான் ஆதரிப்பதற்கு இல்லை என்று தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

மேலும், கடைசியில் முடிக்கிறபொழுது,

'நீங்கள் மேற்கொண்ட வேலையில் பற்றும் நம்பிக்கையும் கொண்டு பணியாற்றவும், கண்ணியத்துடனும் ஒழுங்காகவும் செயலாற்றுவதில் புகழ்பெற்ற இந்தச் சட்ட மன்றத்தின் நடவடிக்கைகளை சீராக நடத்திச் செல்லவும் இறை அருள் துணைபுரிய வேண்டுகிறேன்'.

என்று கவர்னர் அவர்கள் கூறியிருக்கிறார்கள். இறை என்றால், ஆண்டவனையும் குறிக்கும், ஆள்பவர்களையும் குறிக்கும். இத் தகைய நிலைமை ஏற்படுவதற்கு இங்கே உட்கார்ந்திருக்கிற ஒன்பது இறைவர்களாக இருப்பவர்கள் அருள் புரியவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். கருத்துக்களை பொறுத்து, கொள்கை யைப் பொறுத்து, ஆளும் கட்சியினர், எதிர்கட்சியினர் என்ற நிலைமை இருந்தாலும் கூட, செயலாற்றுவதைப் பொறுத்து, அமைச்சர்கள் அத்தனை பேர்களும் ஒரு கட்சியினராகவும், மற்ற ஆளும் கட்சி எதிர்க்கட்சி உறுப்பினர்கள் அத்தனை பேர்களும் ஒன்றாகச் சேர்ந்த எதிர்க்கட்சியினராகவும் இருக்க வேண்டிய நிலைமை இருக்கிறது. எங்கள் கட்சியைச் சேர்ந்தவர்களும், மற்ற வர்களும் குறைபாடுகளை எடுத்துத் தெரிவிக்கிறார்கள். செயலாற்று கிற நிலைமையில் எல்லா உறுப்பினர்களும் குறைகளை எடுத்துச் சொல்லவேண்டுமென்றால், அத்தனை பேர்களும் அமைச்சர்களுக்கு எதிர்க்கட்சி ஆளுகிறார்கள். கொள்கையைப் பொறுத்து, கருத்துக் களைப் பொறுத்துதான் ஆளும் கட்சி, எதிர்க்கட்சி என்று ஏற்பட வேண்டிய நிலை இருக்கிறது. எனவே, இந்த மாநிலம் முன்னேற வேண்டும், நல்ல பல நன்மைகள் ஏற்பட வழிவகைகள் செய்ய வேண்டுமென்று வற்புறுத்தி கேட்டுக்கொண்டு இந்தப் பேருரை யைப்பற்றி மகிழ்ச்சி அடைவதற்கோ, பாராட்டுவதற்கோ இல்லை என்று சொல்லி, என்னுடைய உரையை முடித்துக்கொள்ளு கிறேன். வணக்கம்.

* **The Hon. Sri M. BHAKTAVATSALAM :** கனம் சபாநாயகர் அவர்களே, இந்த மன்றத்தில் கவர்னர் அவர்களுடைய பேருரையின்மீது நடைபெற்ற விவாதத்தில் 100-வது உறுப்பின ராகப் பேசியவர் சுதந்திரக் கட்சித் தலைவர் கனம் அங்கத்தினர் திரு. சா. கணேசன். அதற்குப் பிறகு 101-வதாக பேசியவர் கனம் எதிர்க்கட்சித் தலைவர் அவர்கள். நான் 102-வதாக இப்பொழுது விடையளிக்கும் வகையில் நிற்கிறேன். ஒன்று கூறிக்கொள்ள விரும்புகிறேன். இதற்கு முன்பு கவர்னர் உரையின்மீது நடை பெற்ற விவாதத்தில் முன்பிருந்த சட்ட மன்றத்தில் 65 பேர்களுக்கு மேல் எப்பொழுதும் கலந்துகொண்டதில்லை. இப்பொழுது 100 பேர்களுக்கு மேல் இந்த மன்றத்தில் நான்கு நாட்களாக இந்த விவாதத்தில் கலந்துகொண்டிருக்கிறோம். இது இந்த மன்றத் திற்கு பெருமை அளிக்கக் கூடியதாக இருக்கிறது என்பதை எல்லா உறுப்பினர்களும் ஒப்புக் கொள்ளுவார்கள்.

மற்றும் ஒன்று கூற விரும்புகிறேன். இதற்கு முன்பிருந்த மன்றத்தைப் பற்றிய அனுபவம் எனக்கு உண்டு. நான் ஒன்றும் முகஸ்துதியாக கூறவில்லை. இங்கு நடைபெற்ற விவாதத்தின் தரம் உயர்ந்ததாக இருந்தது. இது வரையில் உள்ளதைவிட உயர்ந்ததாக இருந்தது என்றுகூட நான் கூற விரும்புகிறேன். இந்த மன்றத்தில் நாம் கூடியிருக்கிற சந்தர்ப்பம் கனம் அங்கத் தினர்கள் உணர்வார்கள். சமீபத்தில் தான் தேர்தல் நடந்து முடிந்தது. இந்தத் தேர்தலில் போட்டி இருந்தது, பிறரை தோற் கடித்து வெற்றிபெற்றவர்கள் இங்கே அமர்ந்திருக்கிறோம். இரு

தரப்பிலும் வெற்றி பெற்றவர்கள் இருக்கிறார்கள். இங்கே வீற்றிருக்கும்பொழுது எதிருக்கு எதிராக வீற்றிருக்கிறோம். இவ்வாறு தேர்தல் நினைவு இன்னும் இருந்துகொண்டே இருக்கிறது. இன்னும் மறையவில்லை. இருந்தாலும், விவாதம் உயர்ந்த முறையில் நடந்தது. இங்கே என் பக்கத்தில் உள்ளவர்கள் எதிர்க்கட்சியைத் தாக்கவேண்டுமென்று நினைப்பது இயற்கை. அதே மாதிரி எதிர்க்கட்சியினர் காங்கிரஸ் கட்சியினரை தாக்கவேண்டுமென்று விரும்புவது இயற்கை. அந்த எண்ணத்தோடு தாக்கிப் பேசவேண்டுமென்று முயற்சி இருந்ததை நாம் கண்டோம். அதைக் கனம் அங்கத்தினர்கள் இங்கே கவனித்திருப்பார்கள். கடுமையாக தாக்கவேண்டும், கொஞ்சம் காரசாரமாகப் பேசவேண்டும் என்ற எண்ணத்தோடு முயற்சித்தால்கூட, அவ்வளவு காரசாரம் ஒன்றும் இந்த விவாதத்தில் இல்லை. அதிகமான குற்றச் சாட்டுகள் இல்லை. எதிர்க்கட்சியிலுள்ள அங்கத்தினர் ஒருவர் நேற்று பேசும்பொழுது கனம் முதலமைச்சர் அவர்கள்மீது குற்றம் சாட்டுகிறேன் என்று பன்முறை சொன்னார் .'குற்றம் சாட்டுகிறேன்' என்ற வார்த்தைகளை திருப்பித் திருப்பிக் கூறினார். எனினும் பிரமாதமான குற்றம் ஒன்றும் சாட்டப்படவில்லை. ஆனால், மொத்தத்திலே நிதானத்தோடு நாட்டிற்கு எந்த வகையிலே நாம் தொண்டு புரிவோம் என்ற சீரிய எண்ணத்தோடு, கனம் அங்கத்தினர்கள் இந்த விவாதத்தில் கலந்து கொண்டார்கள் இரு தரப்பிலும். கடைசியில் பேசிய எதிர்க்கட்சித் தலைவர் அவர்கள் உணர்ச்சி வசப்பட்டு பேசினார்கள். அவருடைய உடல் நிலைகூட அதனால் குன்றியதைப் பார்த்தோம். அவருக்கு என்னுடைய அனுதாபத்தைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். ஆளும் கட்சியைப் பற்றிய குற்றங் குறைகளை, ஆதாரம் உள்ள குறைகளையோ, அல்லது ஆதாரமற்ற குறைகளையோ எடுத்துக்காட்டுவது எதிர்க்கட்சியினுடைய கடமையும், பொறுப்புமாகும். அரசாங்கத்தைச் சார்ந்த யாரும் அதைப்பற்றி தவறுதலாகக் கொள்ளவில்லை என்று நான் இப்பொழுது இந்தப் பக்கத்திலுள்ள உறுப்பினர்கள் எல்லோருடைய சார்பிலும் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். இங்கே அமர்ந்திருக்கிற எதிர்க்கட்சியைப் பொறுத்த மட்டில், சென்ற பொதுத் தேர்தலின் விளைவாக முதன்மையான எதிர்க்கட்சி என்று கூறக்கூடிய வகையில் போதிய எண்ணிக்கையோடு அமைந்திருக்கிறது. திராவிட முன்னேற்றக் கழகத்தினரைச் சார்ந்த 50 பேர்கள் இங்கே எதிர்க்கட்சியாக அமர்ந்திருக்கிறார்கள். எதிர்க்கட்சியைச் சார்ந்தவர்கள் சுயேச்சைகள் உள்பட 67 பேர்கள் இருக்கும்பொழுது, 50 பேர்கள் கொண்ட உருப்படியான ஒரு எதிர்க்கட்சியாக திராவிட முன்னேற்றக் கழகம் அமைந்திருப்பதை நான் வரவேற்கிறேன். உருப்படியான ஒரு எதிர்க்கட்சி உருவாகுவதற்கு இது ஒரு சிறந்த வாய்ப்பு. எதிர்க்கட்சியினரை எப்பொழுதும் ஆளும் கட்சி வரவேற்கும் என்பதில் ஐயமில்லை. ஜனநாயகத்தில் உருப்படியான ஒரு எதிர்க்கட்சி இயங்குவது அவசியம் என்பதை நாம் உணர்ந்திருக்கிறோம்.
12-00 noon. ஆனால், எதிர்க்கட்சி அங்கத்தினர்கள், இந்த நாட்டைப் பிரிப்பது என்பதை தங்களுடைய முக்கியமான லட்சியமாக, கொள்கை

27th April 1962] [Sri M. Bhaktavatsalam]

யாகக் கொண்டிருக்கிறார்கள். அந்த அடிப்படையில் தங்கள் அபிப்பிராயங்களைத் தெரிவித்திருக்கிறார்கள். எதிர்க் கட்சித் தலைவர்கூட குறிப்பிட்டார், சட்டசபை தேர்தலுக்குப் பிறகு, புதிய மந்திரி சபை அமைத்த பிறகு, "பேயை விரட்டுவோம்" என்று முதலமைச்சர் சொன்னார் என்று. பேயை என்றது, எந்த ஒரு நபரையோ அல்லது கட்சியையோ அல்ல, அது கொள் கையைப் பற்றியது. நாட்டைப் பிரிப்பேன் என்றால், சுதந்தரம் பெற்றவர்களுக்குத்தான் தெரியும் சுதந்திரத்தின் அருமை. அந்த சுதந்தரத்தைப் பேணிப் பாதுகாத்து, மக்கள் நன்கு வாழும் வகையில் பணியாற்றவேண்டுமென்று அந்த வகையில் ஈடுபட் டிருப்பவர்கள், அதற்கு ஹானியாக, பாதகமாக நாட்டைப் பிரித்து விடுவோம் என்று சொன்னால், அந்தக் கொள்கையை விரட்டுவோம் என்று சொல்கிறோம். பிரிவினைப் பேயை என்று தான் சொன்னார்கள்.

**SRI M. KARUNANITHI :** சென்னையில் ஒரு பெண்ணை பேயை ஓட்டுகிறேன் என்று ஒரு பூசாரி அடித்துக் கொன்றது அமைச் சருக்குத் தெரியுமா ?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM :** எதிர்க் கட்சி உதவித் தலைவர் அவர்களுக்குச் சொல்லுகிறேன், நாங்கள் அப் பேர்ப்பட்ட பூசாரி அல்ல என்று. பேயை ஓட்டுவோம், ஆனால், உடலைத் தீண்டாமல் பேயை அடித்து விரட்டத் தெரியும். இந்த நாட்டிலே பிரிவினைக் கருத்தைச் சொல்லிக்கொண்டு, அந்த அடிப்படையிலே பிரித்துத்தான் ஆகவேண்டும் என்று பேசுகிறார் களே அந்தக் கொள்கைதான் விரட்டப்படவேண்டிய பேய். எதிர்க் கட்சியினரே ஒப்புக் கொள்ளுகிறார்கள்: முப்பத்தி நான்கு லட்சம் பேர்கள் வாக்களித்திருக்கிறார்கள், ஆனால், அந்த முப்பத்தி நான்கு லட்சம் ஓட்டர்களும் பிரிவினைக்கு ஓட்டு அளித்தார்கள் என்பதல்ல என்று. அவர்களுக்குப் புதுப்புது உறவுகள் ஏற்பட் டிருக்கின்றன ; அந்த உறவின், பந்தத்தின், கூட்டின் விளைவாக பலர் வோட்டளித்திருக்கிறார்கள். வோட்டுச் செய்தவர்கள் அத்தனை பேரும் பிரிவினை வேண்டுமென்று வோட்டளிக்கவில்லை யென்று எதிர்க்கட்சித் தலைவர் அவர்களே ஒப்புக் கொண்டிருக் கிறார்கள். ஆனால், அதில் எத்தனை பேர் பிரிவினைக்காக அளித் திருக்கிறார்கள் என்று அவர்கள் சொல்வதை நான் ஏற்றுக் கொள்ளத் தயாராக இல்லை. வெவ்வேறு காரணத்திற்காக அவர் கள் இவர்களை ஆதரித்திருக்கின்றார்கள். ஓட்டளித்தவர் யாவரும் பிரிவினைக்காக அளித்தார்கள் என்று சொல்ல முடியாது. வெகு சிலரே அம்மாதிரி தெரிந்து அளித்திருக்க முடியும் என்று நான் மதிப்பிடுகிறேன்.

சுதந்தரா கட்சித் தலைவர் கனம் கணேசன் கூறினார்கள் ஏதோ சுதந்தரா கட்சியைப் பற்றி ஒரு அங்கத்தினர் தவறுதலாகக் கூறினார் என்று. தவறுதல் ஒன்றும் இல்லை. சுதந்தரா கட்சி சோஷலிசம் வேண்டாம் என்று சொல்கிறது. அவர்களோடு இருக்கும் இணைப்பைப் பற்றி அங்கத்தினர் சொன்னார்கள். அவர் கள் இணைப்பைக் கொண்டு வோட்டுப் பெற்றார்கள் என்று சொன்

[Sri M. Bhaktavatsalam] [27th April 1962

ஞர்கள். சுதந்தரா கட்சியின் லட்சியம் என்னவென்று தெரிந்து கொண்டு வோட்டு போடட்டும். திராவிட முன்னேற்றக் கழகம் பிரித்துத்தான் ஆகவேண்டும் சுதந்தரத்திற்கு கேடுவந்தாலும், அன்னிய ஆட்சி வந்தாலும் சரி, நாட்டைப் பிரிக்கவேண்டும் என்று உணர்ந்து ஓட்டு போடட்டும். ஓட்டுப் போடுவதில், இன உணர்ச்சி தாண்டவமாடியதைத்தான் குறிப்பிட்டுப் பேசினர்கள். கனம் கம்யூனிஸ்ட் கட்சித் தலைவர் பேசினர்கள். அவர்களுக்கு ரொம்ப சங்கடமான நிலைமை. அதை உணர்ந்துதான் சங்கடத் தைப் போக்கிக்கொள்ள பாடுபட்டார்கள். திராவிட முன்னேற்றக் கழகத்தோடு அவர்களுக்கு தோழமை இருந்தது. எனவே அவர் களுக்கு ஆதரவு காட்டவேண்டும், ஆனல் அதே சமயம் கம்யூனிஸ்ட் கட்சியைப்பற்றி மற்றவர்கள் தவறுதலாக நினைக்கக் கூடாது, தாங்கள் அவர்களுக்கு மேற்பட்டவர்கள், பிரிவினைக் கொள்கையை கம்யூனிஸ்ட் கட்சி ஆதரிக்கவில்லை என்பதையும் வெளிப்படுத்த வேண்டும். இரண்டு பக்கத்துக்கும் திருப்தி செய்ய வேண்டும். எனவே, அவர் காங்கிரஸ் கட்சியைக் குறைகூற முற் பட்டார். காங்கிரஸ் கட்சியைப் பார்த்து, "உங்களால்தான் அது வளருகிறது" என்று சொன்னர்கள். நான் கூறுகிறேன். பிரிவினைக் கொள்கைக்கு ஆதரவளித்தவர்கள் கனம் கம்யூனிஸ்ட் கட்சி அங்கத்தினரைப் போன்றவர்தான். இங்கு பேசிய கனம் அங்கத் தினர்கள் எல்லாம் நமக்கு உரிய பங்கு மத்திய சர்க்காரிலிருந்து வரவேண்டுமென்று. அதற்காக எல்லோரும் பாடுபடுகிறோம். இந்த அரசாங்கத்திற்கு அதில் அக்கறை இருக்கிறது; காங்கிரஸ் கட்சிக்கு அக்கரை இருக்கிறது. ஆனல், இது எந்த நாட்டிலும் நடக்கக் கூடியது. பல மாநிலங்களைச் சேர்த்து ஒரு யூனியன் என்ற முறையில் செயல்படும்போது, நாட்டுக்கு வேண்டிய வழி வகைகளைச் செய்ய வேண்டும், நிதியைத் திரட்ட வேண்டும். பின்னல் அதை எப்படி பங்குபோடுவது என்று தீர்மானிக்க வேண்டும். அந்த வகையில் நம் அரசியல் சட்டம் அமைந்திருக் கிறது. அமெரிக்காவிலும் மற்ற நாடுகளிலும் அமைந்திருக் கிறது. நான் சொல்லுகிறேன், பிரிவினைக் கொள்கையை விட்டு விடுங்கள். அது இந்த மாநிலத்திற்கும் நலமாக இருக்கும். தி.மு.க.-வினருக்குக் கூட அதுதான் நல்லது. உங்களுக்கு ஓட்டு போட்டவர்களின் நலனுக்கும் அது உகந்தது. பிரிவினைக் கொள் கையை கைவிட்டால், மக்களுக்கு அதிக வசதிகளைப்பெறமுடியும். நாட்டுப் பிரிவினை எந்தக் காலத்திலும் ஏற்படப் போவதில்லை. அதைச் சொல்லிக்கொண்டிருப்பதால் மாநிலத்திற்கும், நாட்டுக் கும் பாதகம்தான் விளையும். கம்யூனிஸ்ட் தலைவரும், அவர்கள் தோழமை இருந்தாலும், இது விஷயத்தில் உறுதியாக இருக்கிருர். நான் சொல்லுகிறேன், பிரிவினையை விட்டுவிடுவது யாவருக்கும் நலம் என்று. பிரிவினையை விட்டு விட்டு அரும்பாடுபட்டு நாம் அடைந்த சுதந்திரத்தைப் பாதுகாத்து மக்கள் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவது எப்படி என்பதில் எல்லோரும் கவனம் செலுத்த வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

27th April 1962] [Sri M. Bhaktavatsalam]

பல கனம் அங்கத்தினர்கள் குறிப்பிட்டார்கள். கனம் எதிர்க் கட்சித் தலைவர்கூட கவர்னர் உரைக்கு வராதது பற்றி எடுத்துரைத் தார்கள். கவர்னர் பேருரைக்கு வராததை நான் கண்டிக்க முற் படவில்லை. அது அவரவர்கள் முடிவு செய்ய வேண்டிய விஷயம். அப்படி வராமல் இருப்பது சட்டத்திற்கு விரோதம் என்று நான் சொல்லவில்லை. அவர்களுக்கு வரவும், வராமல் இருக்கவும் உரிமை இருக்கிறது. தேர்ந்தெடுத்தவர்கள் எல்லோரும் கட்டா யம் வரவேண்டும் என்று இல்லை. ஆனால், ஒன்று சொல்லுகிறேன். ஏன் வரவில்லை என்பதற்குக் கூறும் காரணம்தான் விசித்திர மானது. ஏதோ பழைய சாத்திரம். சாத்திரம் சாத்திரம் என்று கண்ணை மூடிக்கொண்டு பின்பற்றுவது சரியாகாது. ஏதோ என்றைக்கோ யாரோ ஒன்றைச் சொன்னார்கள் என்று ஒன்றைச் செய்வது கூடாது. மனுதர்ம சாத்திரத்தைக்கூட மாற்றிக் கொண்டுவருகிறோம். (ஸ்ரீ மு. கருணாநிதி: கவர்னர் உரைகூட சாத்திரம்தான்.) கவர்னர் உரை நிகழ்த்தியதால்தான், 102 அங்கத்தினர்கள் இந்த விவாதத்தில் கலந்துகொள்ள முடிந்தது. ஏன் கவர்னர் உரையைக் கேட்கவில்லை என்றால், ஏதோ ஒரு காரணம் சொல்லப்படுகிறது. ஒருவர் கவர்னர் நியமிக்கப்பட்ட வர் என்கிறார். அவர் வட நாட்டார் என்கிறார் மற்றொரு தி.மு.க. அங்கத்தினர். தி.மு.க.-வினருக்கே காரணம் சரியாகப் புரிய வில்லை. அர்த்தம் இல்லாத ஒரு காரியத்தைச் செய்வது என்ன; அதிலும் ஒரு அரசியல் கட்சி, திராவிட முன்னேற்றக் கழகம், முன்னேற்றம் என்று வைத்திருப்பவர்கள் செய்வது சரியா? அந்தப் பதவி வேண்டுமா வேண்டாமா என்பது ஒரு சர்ச்சை தான். கவர்னர் சில வேலைகளைச் செய்கிறார்கள்; அது அரசியல் சட்டத்தில் இருக்கிறது. இந்த சட்டசபைக்கு அவர்தான் தலைவர். கவர்னர் இல்லாமல் சட்டசபை இல்லை. சட்டப்படி அதுதான் நிலைமை. இப்பொழுது கவர்னர் பேருரைமீது விவா தம் செய்கிறோம். வேறொன்றும் வேண்டாம், இதைப் பாருங் கள்: இப்பொழுது தேர்தலுக்குப்பிறகு நான்கு நாட்களாக, 102 அங்கத்தினர்கள் கலந்துகொண்டு, அவரவர்கள் கருத்துக்களை, ஆங்கிலத்தில் "சைன் டு பெரு" என்று சொல்லுவார்கள், அம் மாதிரி எல்லா விஷயங்களையும் மனதாரப் பேசிய வாய்ப்பு கவர்னர் உரையால் தானே ஏற்பட்டது. ஆகவே, கவர்னர் வேண்டாம், அவசியமில்லை என்று எப்படிச் சொல்லுவது? பழைய சாத்திரம், யாரோ எப்பவோ சொன்னார்கள் என்பதற்காக வராமல் இருப்பது சரியல்ல என்று தாழ்மையோடு சொல்லிக்கொள்ள விரும்பு கிறேன். அதை யோசிக்க வேண்டும். இல்லை, இல்லை, முன்னே முடிவு செய்திருக்கிறோம், அதற்காக வரவில்லை என்பது சரியல்ல.

சோஷலிஸ்ட் கட்சி அங்கத்தினர் மன்றத்திலே இருந்தார். கவர்னர் வந்ததும் அவர் வெளியே போய்விட்டார் என்று நமக்கு ஒன்றும் தெரியவில்லை, பத்திரிகையில் வந்திருந்தது. அவர் வெளி நடந்ததற்கு காரணம் என்ன? தமிழிலே பேசவில்லை, என்பது அவர் குறை. இப்பொழுதுகூட எதிர்க்கட்சி அங்கத்தினர்களும்

**(Mr. Speaker in the chair.)**

[Sri M. Bhaktavatsalam] [27th April 1962

ஆங்கிலத்தில் கேள்விகள் போடுகிறார்கள். அதிலே அவசரப் படக் கூடாது. ஆங்கிலத்தை நாம் விட்டுவிடவில்லை. உலக மொழி ஆங்கிலம். தமிழ்மீது நமக்கு அன்பு; ஆனால், ஆங்கிலத் தின் மீது வெறுப்பில்லை. ஆனால் சோஷலிஸ்ட் கட்சி அங்கத்தினர் கவர்னர் உரையை ஆங்கிலத்தில் படிக்கக்கூடாது அதை தமிழில் தான் படிக்க வேண்டும் என்று சொல்லி வெளியேறியதாகத் தெரிய வந்தது. நம் தாய் மொழியில் படிக்க வேண்டும் என்று சொல்லியிருந்தால் அதற்கு அர்த்தம் இருக்கும். அவருடைய தாய் மொழி என்ன என்பதை கவனிக்க வேண்டும். ஆகவே அவர் சட்டசபையை விட்டு சென்றதில் அர்த்தமே இல்லை. திரா விட முன்னேற்றக் கழக அங்கத்தினர்கள் ஏதோ ஒரு கொள்கை-யை வைத்துக்கொண்டிருக்கிறார்கள். அவர்கள் ஐம்பது பேர்கள் இருக்கிறார்கள். அவர்கள் ஐம்பது பேர்களும் கலந்து கொண்டு ஒரு முடிவுக்கு வரவேண்டும். ஆனால் சோஷலிஸ்ட் கட்சி அங்கத் தினருக்கு அப்படிப்பட்ட நிமித்தம் இல்லை. அவர் ஒருவர் தான் இருக்கிறார். அவர் மற்றவரைக் கலந்து கொண்டு ஒரு முடிவுக்கு வரவேண்டும் என்ற அவசியமில்லை. அவரே முடிவு எடுத்துக் கொள்ளலாம். தான் ஒருவரே இருப்பதை பயன்படுத்திக் கொண்டு ஒரு முடிவுக்கு வரவேண்டும். கவர்னர் அவர்கள் தன் னுடைய தாய்மொழியில் தன்னுடைய உரையை படிப்பதாக இருந்தால் அது நமக்குப் புரியாது. அதையும் கொஞ்சம் கவனத் தில் எடுத்துக்கொள்ள வேண்டும்.

அடுத்தபடியாக கனம் அங்கத்தினர்கள் தேர்தலைப்பற்றிக் குறிப்பிட்டார்கள். கவர்னர் அவர்கள் சமீபத்தில் தேர்தல் நல்ல முறையில் சுமுகமாக நடந்தது என்று குறிப்பிட்டிருக்கிறார்கள். அதை ஆமோதித்தே பல அங்கத்தினர்களும் பேசியிருக்கிறார்கள். அதிலும் முக்கியமாக கம்யூனிஸ்ட் கட்சி அங்கத்தினர் அதை ஆதரித்து விட்டு தேர்தல் நல்ல முறையில் நடைபெற்றதற்கு அரசாங்க ஊழியர்கள் மட்டும் தான் பொறுப்பு அல்ல பொது மக்களும் நல்ல முறையில் ஒத்துழைத்ததால்தான் நல்ல முறையில் தேர்தல் நடைபெற்றது. அதனால் பொது மக்களுக்கும் பாராட்டு தலைத் தெரிவித்துக்கொள்ள வேண்டும் என்று குறிப்பிட்டார். அதை நான் முற்றிலும் ஏற்றுக்கொள்ளுகிறேன். தேர்தல் நல்ல முறையில் நடைபெற்றதற்கு பொது மக்களும் தான் காரணம். அவர்கள் நல்ல முறையில் நடந்து கொள்ளாமல் இருந்தால் தேர் தல் நல்ல முறையில் நடைபெற்றிருக்காது. குறிப்பாக இந்தத் தேர்தலில் அதிகப்படியான மக்கள் வந்து வோட்டளித்ததற்கும் அவர்களை நாம் பாராட்ட வேண்டியது தான். சுதந்திரம் அடைந்த பிறகு ஓட்டு சுதந்திரம் இருக்கிறது என்பதை பொது மக்கள் உணர்ந்து அதற்கு முக்கியத்துவம் கொடுத்து அதிகப்படி யானவர்கள் வந்து வோட்டளித்ததற்கு அவர்களை நாம் பாராட்ட வேண்டியது தான். நாடு சுதந்திரம் அடைந்த பிறகு ரகசிய வோட்டு முறை வந்ததிலிருந்து அதிகாரிகள் தேர்தலை ரகசிய முறையில் நல்லபடியாக நடத்திக் கொடுத்த தற்கும் அவர்களை பாராட்ட வேண்டியதுதான். தேர்தல் சமயத்தில் போலீஸ்காரர்களும் நல்ல முறையில் ஒழுங்காக

27th April 1962] [Sri M. Bhaktavatsalam]

நடந்து கொண்டதற்கு அவர்களையும் நாம் பாராட்ட வேண்டியது தான். முக்கியமாக கம்யூனிஸ்ட் கட்சி தலைவர் போலீஸ்காரர்களைப் பற்றி அவர்கள் நல்ல முறையில் நடந்து கொண்டதாகத் தெரிவித்தார். அதற்கு தன்னுடைய பாராட்டு தலையும் தெரிவித்துக்கொண்டார். அதற்காக நான் என்னுடைய பாராட்டுதலை அவருக்குத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். போலீஸ் காரர்கள் ஒழுங்கான முறையில் நடந்து கொண்டதால்தான் தேர் தல் நல்ல முறையில் நடைபெற முடியும். ஆனால் போலீசார்களைப் பற்றி கனம் உறுப்பினர்கள் பாராட்டுதல் தெரிவித்ததோடு சில உறுப்பினர்கள் எடுத்துக் கூறினார்கள். போலீசார்கள் சரியாக நடந்துகொள்ளவில்லை என்றும் சில உறுப்பினர்கள் சொன்னார் கள். ஆனால் போலீசார் தங்களுடைய கடமைகளைச் செய்யத் தவறி விட்டார்கள் என்று சொல்லுவது சரியல்ல என்பதை கனம் அங்கத்தினர்களுக்கு தாழ்மையுடன் தெரிவித்துக்கொள்ளுகிறேன். எந்தக் கட்சியிலிருந்தும் போலீஸ்காரர்கள் மீது புகார்கள் வந்தன. அவற்றையெல்லாம் பரிசீலித்து போலீசார் நட வடிக்கை எடுத்துக்கொண்டிருக்கின்றனர். கனம் அங்கத்தினர் திரு. ராஜேந்திரன் தன்னுடைய தொகுதியில் போலீஸ்காரர்கள் சரியாக நடந்து கொள்ளவில்லை என்று புகார் சொன்னார். சில போலீஸ்காரர்கள் சரியாக நடந்து கொண்டதாகவும் சொன்னார். (ஸ்ரீ எஸ். எஸ். ராஜேந்திரன்: எல்லாரைப்பற்றியும் புகார் சொல்லவில்லை. ஒருவரைப்பற்றி மட்டும் தான் புகார் செய்தேன்.) கனம் ராஜேந்திரன் அவர்கள் பல கிராமங்களில் நடந்ததைப் பற்றி குறை சொன்னார்கள். அவர் சொன்னதைப் போலவே பல காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்தவர்களும் புகார் எழுதி அனுப்பி இருந்தார்கள். காங்கிரஸ்காரர்களிடமிருந்து வந்த புகார்கள் அதிகம். எதிர்க் கட்சிகளுக்குத்தான் அதிகப்படியான சலுகை கள் காட்டப்படுகிறது என்று புகார் எழுதி அனுப்பியிருந்தார் கள். இப்படி எல்லா கட்சிகளிடமிருந்தும் புகார்கள் வந்து கொண்டுதானிருந்தன. அவைகள் எல்லாம் விசாரிக்கப்பட்டன. ஒவ்வொன்றின் மீதும் நடவடிக்கை எடுத்துக்கொள்ளப்பட்டது. கனம் எதிர்க்கட்சி உப தலைவர் அவர்கள் சில சம்பவங்களைப்பற்றி குறிப்பிட்டு அவற்றின் மீது போலீஸார் எந்த விதமான நட வடிக்கையும் எடுத்துக்கொள்ளப்படவில்லை என்றும் குறிப்பிட் டார். அவர் சொல்வது சரியல்ல. அவர் குறிப்பிட்ட எல்லா புகார்களின் மீதும் வேண்டிய அளவில் என்னென்ன நடவடிக்கை கள் எடுத்துக்கொள்ளப்பட வேண்டுமோ அவைகள் எல்லாம் எடுத்துக் கொள்ளப்பட்டுத்தான் இருக்கிறது.

செங்கல்பட்டு ஜில்லாவிலிருந்து ஒரு புகார் வந்தது. அதாவது போஸ்டல் பாலட் சம்பந்தமாக. அதாவது போலீஸ்காரர்களை கட்டாயப்படுத்தி போஸ்டல் பாலட்டில் இன்னாருக்குத்தான் வோட்டுச் செய்ய வேண்டும் என்று கட்டாயப்படுத்தியதாக புகார் வந்தது. அதைப்பற்றி விசாரித்தபோது அந்த புகார் வந்த சமயத்தில் போஸ்டல் பாலட்டே அதுவரையில் அனுப்பிக் கப்படவில்லை என்று தெரிய வந்தது. தபாலே அனுப்பிக்காமல்

[Sri M. Bhaktavatsalam] [27th April 1962

இருக்கும்போது எப்படி வோட்டு செய்யச்சொல்லி இருக்க முடியும். எப்படி அந்த வோட்டுகளை சேகரித்திருக்க முடியும். அதைப்போலவே உத்தரமேரூரிலிருந்து ஒரு புகார் வந்தது. அதைப்பற்றி எதிர்க் கட்சி உதவி தலைவர் குறிப்பிட்டார். அதே புகாரும் முரசொலியில் வந்தது. அங்கே ஒருவர் தேர்தல் பிரசாரத்திற்காக ஈடுபடுத்தியவரை சில நாட்களுக்கு முன் அவரை கிணற்றில் தள்ளி அவருடைய சடலம் கிணற்றில் இருந்ததாகவும் சொன்னார். இதைப்பற்றியும் விசாரிக்கப்பட்டது. அதை விசாரித்தபோது அந்த மனிதனுடைய துணி பர்ஸ் எல்லாம் கிணற்றிற்கு வெளியே இருந்ததாகச் சொல்லப்பட்டது. உடனே போலீசுக்கு தகவல் கொடுக்கப்பட்டு உடனே போலீசார் அதை எடுத்து பிரேத விசாரணைக்கு செங்கற்பட்டுக்கு அனுப்ப ஏற்பாடு செய்யப்பட்டது. உடனே அங்கு சுமார் 500 பேர் கொண்ட கூட்டம் கூடி விட்டது. அதை செங்கற்பட்டுக்கு எடுத்துச் செல்லக்கூடாது என்று தடுத்தார்கள். உடனே கலவரம் ஏற்பட்டது. அங்கு அந்த பிரேத விசாரணை செய்தபோது உடம்பில் எந்த விதமான காயமும் கிடையாது. ஆனால் ஒன்று இரண்டு சிறு புண்கள் இருந்தன. அவைகள் எல்லாம் கிணற்றில் பிரேதம் மிதந்ததால் ஒரு கால் மீன் கடித்து அந்த புண்கள் ஏற்பட்டிருக்கலாமோ என்று முடிவு செய்யப்பட்டது. மற்றும் அந்தப் பிரேதத்தை அங்கேயே தான் எரிக்க வேண்டும் என்று அந்தக் கூட்டம் கலவரம் செய்தது. செங்கற்பட்டு பெரிய ஆஸ்பத்திரிக்கு அந்தப் பிரேதம் எடுத்துச் செல்லப்பட்டது. அங்கு போய் பரிசோதனை செய்ததில் தேகத்தில் காயம் ஒன்றும் இல்லை. கிணற்றில் மீன்கள் கடித்திருக்கலாம் என்று முடிவு செய்யப்பட்டு அது ஒரு ஆக்சிடெண்டல் சாவாக இருக்கலாம் என்றும் முடிவு எடுக்கப்பட்டது. ஆகவே நடவடிக்கை எடுத்துக் கொள்ளவில்லை என்று சொல்வது சரியல்ல. எந்தப் பக்கத்திலிருந்து புகார் வந்தாலும் அவைகளை அதன் தரத்திற்கேற்ற வாறு விசாரணை செய்து முடிவு எடுக்கப்பட்டுத்தான் வருகிறது.

அதைத் தவிர தேர்தல் காலங்களில் தேர்தல் உத்யோகஸ்தர்கள் நல்ல முறையில் நடந்து கொள்ளவில்லை என்றும் புகார்கள் வந்தன. என் பக்கத்திலுள்ள ஒரு அம்மையார் நேற்று பேசிய போது தன் தொகுதியில் சில கிராமங்களுக்குப் போக முடிய வில்லை என்று சில புகார்கள் சொன்னார். அதைப் போலவே கனம் சுவாமிநாதன் அவர்களும் சிவகங்கை தேர்தல் பற்றி சில புகார்கள் கூறினார். மற்றவர்களும் அவரவர்களுடைய அனுபவங்களைப் பற்றியெல்லாம் சொன்னார்கள். ஆகவே எல்லா கட்சிகளிட மிருந்தும் தான் புகார்கள் வந்து கொண்டிருக்கின்றன. பொது வாக உத்யோகஸ்தர்கள் நடு நிலைமை வகித்தார்கள் என்பது ஒப்புக்கொள்ளப்படுகிறது. ஆனால் சிலர் நடுநிலைமை வகிக்கவில்லை என்றும் சொன்னார்கள். பொதுவாக எல்லாரையும் பாராட்டித் தான் பேசியிருக்கிறார்கள். புகார்கள் வந்திருப்பதைப் பார்த்தால் அதிகமாக எதிர் கட்சிக்கு உத்தியோகஸ்தர்கள் அதிகம் சாதகமாக இருந்ததாகத்தான் புகார்கள் வந்திருக்கின்றன. பொதுவாகச்

27th April 1962] [Sri M. Bhaktavatsalam]

சொன்னுல் சர்க்கார் உத்யோகஸ்தர்கள் எல்லோரும் நடு நிலைமையாகத்தான் இருந்திருக்கிறுர்கள். அதை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்பதுதான் என்னுடைய அபிப்பிராயம்.

கவர்னர் அவர்கள் உரையில் பல விஷயங்கள் சொல்லப்படாமல் விட்டு விடப்பட்டிருக்கிறது என்று சொன்னுர்கள். அதையும் ஒரு குறையாகச் சொன்னுர்கள். மற்றெரு உறுப்பினர் கவர்னர் உரையில் எல்லா விஷயத்தையும் சொல்லவில்லை என்றும் குறிப்பிட்டார். புதுக்கொள்கையைப்பற்றி ஒன்றும் சொல்லவில்லை என்று கனம் அங்கத்தினர் குறிப்பிட்டார். தேர்தலுக்குப் பிறகு முதன் முதலாக இந்தச் சட்ட மன்றம் கூடுகிறது. அதனுல் புதுக்கொள்கைகளைப் பற்றி ஒன்றும் குறிப்பிடவில்லை என்றும் ஒருவர் குறிப்பிட்டார். மூன்றுவது ஐந்தாண்டுத் திட்டத்தில் ஓராண்டு முடிவடையப் போகிறது என்பதைப்பற்றி குறிப்பிட்டு விட்டு புதுக்கொள்கைகளை தாளினை காணவில்லை என்றும் குறிப்பிட்டார்கள். புதுக் கொள்கைகளை இப்பொழுது எதிர் பார்ப்பது சரியல்ல. முக்கியமாக ஏதாவது மாறுதல் இருந்தால் அதைப்பற்றி நிச்சயமாக இந்தச் சட்டசபையில் பிரஸ்தாபிக்கப்படும். புதியக் கொள்கைகள் கொண்டு வந்தால் அதைப்பற்றி நிச்சயமாக இந்தச் சட்ட மன்றத்தில் அறிவிக்கப்படும். தேர்தல் நடந்து சட்ட மன்றம் கூடும்போதே புதிய கொள்கைகளை எதிர் பார்க்க முடியாது. புதிய கொள்கைகளை கொண்டு வருவதற்கு வேண்டிய அவகாசம் வேண்டும். புதியக் கொள்கைகளைக் கொண்டு வரவில்லை என்று சொல்லுவது ஒரு குறையல்ல. முக்கியமாக புதிய கொள்கைகளைக் கொண்டு வந்தால் அதைப்பற்றி நிச்சயமாக இந்த சட்ட மன்றத்தில் அறிவிக்கப்படும்.

அடுத்தபடியாக விலைவாசிகளைப்பற்றி கனம் உறுப்பினர்கள் குறிப்பிட்டார்கள். விலைவாசிகளைப் பொறுத்த மட்டில் இதற்கு முன்னதாக எவ்வளவோ முறை விவாதிக்கப்பட்டிருக்கிறது. நாட்டில் உள்ள நிலைமையையும் விளக்கப்பட்டிருக்கிறது. விலைவாசி உயர்வைக் குறைக்க வேண்டும் என்பதுதான் அரசாங்கத்தினருடைய ஆவல். அதையே இந்தச் சட்ட மன்றத்தில் எவ்வளவோ முறை குறிப்பிட்டிருக்கிறேன். விலை ஏற்றத்தைக் குறைக்க வேண்டும் என்பதுதான் அரசாங்கத்தின் ஆவல். அதுபற்றிய நிலைமையை நானும் எத்தனையோ முறை இதற்கு முன்பு இருந்த மன்றத்திலே விளக்கியிருக்கிறேன். 'விலைவாசியைக் கண்காணிக்க, எல்லாக் கட்சியினரும் சேர்ந்திருக்கிற ஒரு கமிட்டி போட்டால் என்ன?' என்று சில கனம் உறுப்பினர்கள் கேட்டார்கள். அதற்குப் பொருளாதார நிபுணர் கனம் அங்கத்தினர் டாக்டர் நடராஜன் அவர்கள், கமிட்டி போடுவதனுடைய விளைவு என்ன என்பதைப் பற்றிக் குறிப்பிட்டார்கள். நான் ஒன்று கூற விரும்புகிறேன். இரண்டு மூன்று ஆண்டுகளுக்கு முன்பு ஒரு கமிட்டி அமைக்கப்பட்டது. அதிலே எல்லாக் கட்சிப் பிரதிநிதிகளும் இருந்தார்கள். பன்முறை அந்தக் கமிட்டி கூடி விவாதித்தது. நான் அதில் கேட்டேன், கம்யூனிஸ்டுக் கட்சி அங்கத்தினரோ, திராவிட முன்னேற்றக் கழகப் பிரதிநிதியோ,

[Sri M. Bhaktavatsalam] [27th April 1962

அல்லது வேறு கட்சிப் பிரதிநிதியோ யாராக இருந்தாலும், விலைவாசியைக் குறைக்க நீங்கள் ஏதாவது யோசனை இருந்தால் சொல்லுங்கள்' என்று. கம்யூனிஸ்டுக் கட்சியின் சார்பாக ஒரு அங்கத்தினர் அந்தக் கமிட்டியில் முதலில் இருந்தார். அவர் இந்த மன்றத்தைச் சார்ந்த அங்கத்தினர். அவரை அக் கமிட்டியிலிருந்து மாற்றிவிட்டு, அவருக்குப் பதிலாக வெளியிலே இருக்கும் வேறொருவரை அதில் போட வேண்டும் என்று அந்தக் கட்சியின் சார்பில் கேட்டுக் கொண்டார்கள். அதற்கு நான் இசைந்தேன். வேறு ஒரு அங்கத்தினரை அந்தக் கமிட்டியில் மாற்றிப் போட்டும்கூட, உருப்படியான யோசனை ஒன்றும் வரவில்லை.

இப்பொழுது விலைவாசியைப் பற்றி என்ன செய்ய வேண்டும்? 1953-ம் ஆண்டிலே 'கண்ட்ரோல்' எல்லாம் எடுக்கப்பட்டது. திடீரென்று எடுக்கப்பட்டது. படிப்படியாக எடுத்திருந்தால் கூட அது நலமாக இருந்திருக்கலாம். கண்ட்ரோல் வேண்டாம் என்று திடீரென்று எடுக்கப்பட்டது. இப்பொழுது என்ன செய்யவேண்டும் என்று கனம் அங்கத்தினர்கள் யோசனை கூறட்டும். உணவுத் தானியங்கள் எல்லாவற்றையும் நாமே—அரசாங்கமே—ஏகபோகமாக வாங்கி, அவற்றுக்கு விலை வைத்து விற்க வேண்டுமென்று சொல்கிறார்களா? அப்படி விற்பது என்றால், அத்தகைய கண்ட்ரோலை வெற்றிகரமாக நிறைவேற்ற முடியுமா?

'ரஷ்யாவிலே நடக்கிறது' என்று ஒரு உறுப்பினர் குறிப்பிட்டார். ஒன்றரை ஆண்டுகளுக்கு முன்பு ரஷ்யாவுக்கு சென்றிருந்தேன். 'கண்ட்ரோல்டு இகானமி' இருக்கிறதாகச் சொல்லும் ரஷ்யாவிலே கூட இரண்டு விலைகள் இருக்கின்றன. கண்ட்ரோல் இல்லாமல் என்ன விலைக்கு வேண்டுமானாலும் விற்கலாம் என்ற நிலை ரஷ்யாவில் இருக்கிறது. நானும் சில கடைகளுக்குச் சென்று பார்த்தேன். கறி காய்க் கடைகளில் கூட, கடைக்குக் கடை விலையில் வித்தியாசம் இருக்கிறது. இந்தியத் தூதராலயத்திலிருந்து பல நண்பர்கள் என்னிடத்திலே வந்து சொன்னார்கள், 'எங்களுக்கெல்லாம் கண்ட்ரோல் விலையில் பொருள்கள் கிடைப்பதில்லை, **Embassy** முன்னதாகத் தெரிவித்தால்தான் கிடைக்கிறது; மற்றபடி அதிக விலை கொடுத்துத் தான் வாங்குகிறோம்' என்று அங்கே இரண்டு விலை இருக்கிறதென்பது விசித்திரமாக எனக்குத் தோன்றுகிறது. கனம் அங்கத்தினர்களுக்கும் அப்படித் தான் தோன்றும் என்று நான் நினைக்கிறேன். இப்பொழுது முழு கண்ட்ரோல் கொண்டுவரவேண்டும் என்பதுதான் இந்த மன்றத்தின் அபிப்பிராயம் என்றால், அதை அரசாங்கம் பரிசீலனை செய்து அதை ஏற்றுக்கொள்வது உசிதமா, நாட்டு நலனுக்கு உகந்ததா என்பதைப்பற்றி யோசித்து முடிவு செய்யலாம்.

'விலை ஏறிக்கொண்டிருக்கிறது' என்று சொல்கிறார்கள். மத்திய அரசாங்கம் தெரிவிப்பது போல், சென்ற ஓர் ஆண்டாக விலை ஒரே நிலையில் தான் இருக்கிறது. அதற்கு முன்னால் ஏறியிருந்தது. அதற்குப் பிறகு ஒரே நிலையில் தான் இருக்கிறது.

27th April 1962] [Sri M. Bhaktavatsalam]

1955-56-இல் உணவுத் தானியங்களின் விலை 86 புள்ளியாக இருந்தது. அதற்குப் பிறகுதான் ஏறிவிட்டது. 1960-61-இல் 120 புள்ளியாக இருந்தது. 31, மார்ச் 1962-இல் 118.52 ஆகியிருக்கிறது. அதாவது ஒன்றரை புள்ளி குறைந்திருக்கிறது.

அதே மாதிரி, விறகு போன்றவை 1960-61-இல் 123 புள்ளியாக இருந்தது. 31, மார்ச் 1962-இல் 123 ஆகவே இருக்கிறது.

எல்லா உணவுத் தானியங்களின் விலை—விறகு உட்பட—1960-61-இல் 124 புள்ளியாக இருந்தது. 31—3—1962-ல் 123 புள்ளியாக இருக்கிறது.

இதே மாதிரி, சென்னையை எடுத்துக்கொண்டால் கூட, **(Cost of living index)** 1961-இல் 478 புள்ளியாக இருந்து, 1962-இல் 480 புள்ளியாகியிருக்கிறது. ஆக இரண்டு புள்ளி தான் அதிகம்.

அகில இந்திய புள்ளி விவரத்தைப் பார்த்தால், உணவுத் தானியங்களைப் பொறுத்த மட்டில் 'ஆல் இண்டியா இன்டெக்ஸ் ஆப் ஹோல் ஸேல் ப்ரைஸ்'-ஐப் பார்த்தால், அது பிப்ரவரி 1961-ல் 104 புள்ளியாக இருந்தது. அது அப்படியே இருக்கிறது. 1952-53-இல் 100 புள்ளியாக இருந்தது. 'இன்டெக்ஸ் ஆப் ஹொல்ஸேல் ப்ரைஸெஸ் ஆப் ஆல் கமாடிடீஸ்' 1960-61-இல் 124 ஆக இருந்தது, அப்படியே இருக்கிறது.

'ஓர்க்கிங் க்ளாஸ் கன்ஸ்யூமர் ப்ரைஸ் இன்டெக்ஸ் ஆப் மெட்ராஸ்' சென்னையில் உள்ள லேபர் ப்யூரோவினால் தயாரிக்கப்படுகிறது. அது எப்ரல் 1961-இலிருந்து ஒரு ஆண்டாக 149 ஆகவே இருக்கிறது. சில வகையிலே பார்த்தால், 1961-இல் கொஞ்சம் குறைவும் இருக்கிறது. அரிசியில் சில வகைகள் மார்ச் 1961-இல் 59.89 ஆகவும், 58.47 ஆகவும், இன்னொரு வகை 63.50 ஆகவும், 57.16 ஆகவும் இம்மாதிரி தான் இருக்கிறது. மொத்தத்திலே பார்த்தால் விலைவாசி ஏறவில்லை என்று தான் சொல்ல முடியும்.

சென்னையில் பொதுவாக எல்லோருக்கும் நெல்லூர் அரிசி தான் வேண்டியிருக்கிறது. தஞ்சாவூர் அரிசி, செங்கற்பட்டு அரிசி, இராமநாதபுரம் அரிசி என்றால் பிடிப்பதில்லை. குறிப்பாக நடுத்தர வர்க்க குடும்பதினர் நெல்லூர் அரிசி தான் வேண்டும் என்கிறார்கள். இதி அதிக விலையாக இருக்கிறது. அதே மாதிரி விறகின் விலையும் அதிகப்பட்டுக்கொண்டு போகிறது.

'உணவு உற்பத்தி பெருகியிருக்கிறது என்பதை எப்படி ஒத்துக்கொள்வது? பெருகியிருக்கிறது என்றால் விலை குறைய வேண்டுமே அப்படிக் குறையாமலிருப்பதால் உணவு தானியங்கள் பதுக்கப்பட்டிருக்க வேண்டும்' என்று எதிர்க் கட்சித் தலைவர் கூறினர்கள்.

உணவு உற்பத்தி பெருகி இருக்கிறது என்பதைப் புள்ளி விவரங்களே எடுத்துக் காட்டும். அது மட்டும் அல்ல. வேறு யாருடைய தயவையும் எதிர்பாராமல், இருபது அவுன்ஸ் அரிசி வேண்டுமானாலும் ஒருவர் வாங்கிச் சாப்பிடலாம் என்ற நிலை

[Sri M. Bhaktavatsalam] [27th April 1962

இருக்கிறது. அப்படிச் சாப்பிட்டும்கூட, மீதமாக உள்ள மூன்று லட்சம் டன் அரிசி கேரளாவுக்குக் கொடுக்கிறோம். நிலைமை இப்படியிருக்க, 'அரிசி பதுக்கப்பட்டிருக்கிறது' என்று சொல்கிறார்கள் என்றால், 'எங்கே பதுக்கப்பட்டிருக்கிறது? எதற்காகப் பதுக்கப்பட்டிருக்கிறது?' என்று நான் கேட்கிறேன்.

திராவிட முன்னேற்றக் கழகத் தலைவரும், மற்றும் சில அங்கத்தினர்களும் பேசினார்கள்—'எங்களிடம் ஆட்சியைக் கொடுங்கள், பதுக்கப்பட்டிருப்பதை நாங்கள் எடுத்து விடுவோம், விலையைக் குறைத்து ரூபாய்க்கு மூன்று படி அரிசி கொடுகிறோம்' என்று சொன்னார்கள். எதற்காக ஆட்சியை நாங்கள் இவர்களிடம் கொடுப்பது? எப்படிக் கொடுப்பது? ஜனங்கள் ஆட்சியை காங்கிரசிடம் கொடுத்திருக்கிறார்கள். அதை நாங்கள் எப்படி மற்றவர்களிடம் கொடுப்பது? ஆனால், பதுக்கல் பற்றி விவரங்கள் இருந்தால் அவைகளை எதிர்க் கட்சி உறுப்பினர்களோ, தலைவர்களோ எங்களிடத்தில் கொடுக்கட்டும். பதுக்கப்பட்டிருப்பதாக ஏற்பட்டால், அதைப் பறிமுதல் செய்யலாம். அதற்காக வேண்டுமானால் சட்டம் போட்டு பறிமுதல் செய்து, ரூபாய் மூன்று படி என்ன, இலவசமாகக்கூட கொடுத்து விடலாம். இப்பொழுது ஒன்றும் பதுக்கப்பட்டிருப்பதாக நமக்குத் தெரியவில்லை.

விலைவாசி உயர்வைப் பற்றி பொருளாதார நிபுணர் கனம் அங்கத்தினர் டாக்டர் நடராஜன் அவர்கள் குறிப்பிட்டார்கள். இது 'க்ரோயிங் அண்டு டெவலப்பிங் இகானமி'. பொருளாதார வகையில் நாடு உயர்ந்து கொண்டே போகிறது. கையில் பணப் புழக்கம் இருக்கிறது. மக்களிடத்தில் வாங்கும் சக்தி (பர்ச்சேஸிங் பவர்) இருக்கிறது. அது முக்கியமான காரணம். எப்படியாவது விலைவாசியை ஓரளவுக்கு குறைத்துத் தான் ஆக வேண்டும். விலைக்கு வாங்குகிறவர்களைப் பொறுத்தவரையில், விலையை எந்த அளவுக்குக் குறைத்தாலும் அவர்களுக்கு நல்லது தான். ஆனால், கிராமத்திலே உணவுத் தானியங்களை உற்பத்தி செய்கிறார்களே அவர்களைப் பொறுத்தவரையில், அவர்கள் உற்பத்தி செய்கிற பொருள்களின் விலையைக் குறைக்க வேண்டும் என்று யார் சொல்வார்கள்? விவசாயம் செய்வதற்கு வேண்டிய கருவிகள் முதலியவற்றின் விலை அதிகப்பட்டு இருக்கிறது. அதனால் விவசாயச் செலவு அதிகமாகிறது. ஆகையால், அவர்கள் உற்பத்தி செய்கிற பொருள்களின் விலையைக் குறைக்க முடியாது.

உணவு உற்பத்தியை மேலும் மேலும் பெருக்கத் திட்டமிடப்பட்டிருக்கிறது. மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் மட்டும் தமிழ்நாட்டில் பதினாறு லட்சம் டன் அரிசி அதிகமாக உற்பத்தி செய்வது என்று திட்டம் இருக்கிறது. மற்ற 'கமாடிடீஸ்' ஸைப் பற்றியும் திட்டம் இருக்கிறது. விலைவாசியைக் குறைப்பதற்கு வழிவகை என்ன என்பதைப்பற்றி அரசாங்கம் அப்போதைக்கப் போது பரிசீலனை செய்துதான் வருகிறது. பரிசீலனை செய்ததன் பேரில் ஒரு முறையைக் கையாளுவது என்றும் அரசாங்கம் முடிவு செய்து, அதை நிறைவேற்ற முற்பட்டிருக்கிறது. சில சமயங்களில், விவசாயிகளிடமிருந்து என்ன விலை கொடுத்துப் பொருள் வாங்கப்படுகிறதோ, அதற்கு ஏற்றபடி சில்லரை விலை

27th April 1962] [Sri M. Bhaktavatsalam]

இருப்பதில்லை. ஏனென்றால், இடையில் உள்ள வியாபாரிகள் அதிக லாபம் வைத்து விலையை உயர்த்தி விடுகிறார்கள். அதற்கு இடம் கொடுக்காமல் பாதுகாக்க வேண்டுமென்ற நோக்கத்தோடுதான், உணவுத் தானியங்களை உபயோகிப்போரைக் கொண்டு கூட்டுறவு ஸ்டோர்கள் வைத்து, மொத்தத்தில் பொருள்களை வாங்கி, நியாயமான விலைக்கு விற்க அரசாங்கம் வசதி செய்து கொடுக்கத் திட்டமிடுகிறது. கூட்டுறவு ஸ்டோர்கள் மூலம் விற்கப்படும்போது, மிகக்குறைந்த விலைக்கு இல்லாவிட்டாலும், லாபம் இல்லாமல் விற்கலாம் அல்லது நியாயமான விலைக்கு விற்கலாம். டி.யு.ஸி.எஸ்.-ஸைப் பொறுத்தவரையில், பங்குதார்கள் 'டிவிடென்ட்' கொடுப்பதுதான் அவர்களுக்குப் பெரிதாக இருக்கிறது. டி.யு.ஸி.எஸ். ஸின் மூலமாக விற்கும்போதுகூட விலை குறையும் என்று சொல்வதற்கில்லை. ஆனால் அதற்காகத்தான் இப்படி கூட்டுறவு ஸ்டோர்கள் ஏற்படுத்தி அத்யாவசியப் பண்டங்களை விநியோகிப்பது என்று தீர்மானித்திருக்கிறோம். இப்போது தற்காலிகமாக பைலட் ஸ்கீம் என்று சென்னை நகரத்தில் 10 கோவாப்ரேடிவ் ஸ்டோர்ஸ் அமைப்பதற்கு உத்தரவாகியிருக்கிறது. அவற்றின் சிப்பந்திகள் செலவை அரசாங்கம் ஒத்துக்கொள்ளலாம். ஆனால் சாமான்களுக்கு எல்லாம் விலையைக் குறைப்பதற்காக சப்ஸிடி கொடுப்பது என்றால் அது சரியல்ல. யாருடைய பணத்தை எடுத்து யாருக்கு கொடுப்பது? விலையை சப்ஸிடி கொடுத்தாவது குறைக்கவேண்டுமென்று சில உறுப்பினர்கள் சொன்னார்கள். அது சரியல்ல என்று சொல்கிறேன். விலையைக் கட்டுப்படுத்த வேண்டும், ஜனங்களுக்கு வசதி செய்து தரவேண்டும் என்பது தான் அரசாங்கத்தின் நோக்கம். அதற்காகத்தான் இந்த பைலட் ஸ்கீம் கொண்டுவரப்பட்டிருக்கிறது. பிறகு மதுரை, கோவை, திருச்சி போன்ற நகரங்களுக்கும் இது விஸ்தரிக்கப்படும். பத்தாயிரம் மக்களுக்கு மேற்பட்ட ஜனத்தொகையுடைய நகரங்களுக்கு எல்லாம் இதை விஸ்தரிக்கவேண்டுமென்பது அரசாங்கத்தின் உத்தேசம். சிலர் கொள்முதல் செய்வது பற்றிச் சொன்னார்கள். அரசாங்கமே செய்யலாம். ஏற்கனவே லட்சத்து இருபத்தையாயிரம் டன் மொத்தமாக வியாபாரிகளிடம் இருந்து வாங்கினோம். அதற்கே விவசாயிகள் ஆட்சேபித்தார்கள். இப்போது லெவி வைத்து வாங்கலாம் என்றால் மூன்று ஏக்கராவுக்கு மேல் நிலம் உள்ளவர்கள் இவ்வளவு கொடுக்கவேண்டும் என்று சொல்லவேண்டும். இதனால் விவசாயிகளுக்குத்தான் கஷ்டமாக இருக்கும். மார்க்கெட்டில் அதிக விலை கிடைக்கிறபோது நாம் நிர்ணயிக்கிற குறைந்த விலையில் நமக்குக் கொடுப்பது என்றால் அவர்களுக்குக் கஷ்டமாகத்தான் இருக்கும். சுதந்திரக் கட்சித் தலைவர் விலை ஏற்றத்துக்குக் காரணம் கூட்டுப் பண்ணை என்றார். கூட்டுப்பண்ணை எவ்வளவு இருக்கிறது என்று அவர் உணரவேண்டும். கூட்டுப்பண்ணை பற்றி கலெக்டிவ் பார்மிங், ஜாயின்ட் பார்மிங் வேறு. எல்லாவற்றையும் சேர்த்து இயந்திர சாதனங்களைக் கொண்டு பயிர் செய்வது என்பது நம்முடைய திட்டம் அல்ல. விற்பனை மார்க்கெட்டிங் சொஸைடிகளைப் போலவே தான் கூட்டுப் பண்ணை விவசாயிகள் அத்தனைபேரும் சிலபல வசதிகளைப் பெறு

12-30 p.m.

[Sri M. Bhaktavatsalam] [27th April 1962

வதற்காக ஏற்படுத்தப்படுகிறது. சர்விஸ் சொஸைடி போன்றது தான். எப்படி இதனால் விலையேறும் என்று புரியவில்லை. விலைவாசி உயர்வைக் கட்டுப்படுத்தவேண்டுமென்றால் கனம் அங்கத்தினர்கள் ஏதாவது யோசனை சொன்னால் அதைக் கவனிப்பதற்குத் தயார்.

SRI M. KALYANASUNDARAM: இப்படிக் குறிக்கிடுவதற்கு மன்னிப்பீர்கள் என்று நினைக்கிறேன். விலைவாசிகளைக் கட்டுப் படுத்துவதற்கு, சாத்தியமானால் குறைப்பதற்கு எதிர்க்கட்சிகளின் சார்பில் ஏற்கனவே ஒன்று சேர்ந்து ஒரு மெமாரண்டம் அமைச்சர் அவர்களிடம் சமர்ப்பிக்கப்பட்டிருக்கிறது. இப்போது அபிப் பிராயங்களைச் சொல்லும்படி கேட்கிறார்கள். அப்போதே கொடுக்கப்பட்டிருக்கிறது. இரண்டாவது தேசிய அபிவிருத்திக் கவுன்ஸிலிலும் இது ஒருமுறை விவாதிக்கப்பட்டு ராஜ்ய சர்க்கார் களுக்கு அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கிறது.

THE HON. SRI M. BHAKTAVATSALAM: அது தெரியும். நான் இப்போது இங்கே அமர்ந்திருக்கிற எதிர்க்கட்சித் தலைவர்கள் இதைப்பற்றி ஆலோசித்து ஏதாவது ஆலோசனைகள் கூறினால் அதைப் பரிசீலிக்கிறேன் என்று சொன்னேன். சென்ற சட்டசபை எதிர்க்கட்சிகள் ஒன்று சேர்ந்து கொடுத்த மெமாரண்டம் அப்போது பரிசீலிக்கப்பட்டது. தேவையான நடவடிக்கைகளையும் அப்போது அரசாங்கம் எடுத்துக்கொண்டிருக்கிறது. இப்போது இந்தச் சட்டசபை எதிர்க்கட்சிகள் ஏதாவது நல்ல யோசனைகள் இருந்தால் சொல்லலாம் என்று கூற விரும்புகிறேன்.

ரிசர்வ் பாங்க் அதிகமான கடன் வசதிகளை உணவு தான்யங் களுக்காக மட்டும் வியாபாரிகளுக்குக் கொடுக்கிறார்கள் என்று சொன்னார்கள். முன்பு பற்றுக்குறை அதிகமாக இருந்தபோது அவர்கள் கடன் கொடுப்பது குறைக்கப்பட்டிருந்தது. ஆனால் அதற்குப் பிறகு கொஞ்சம் தளர்த்தப்பட்டிருக்கிறது. இதனால் விலைவாசி ஒன்றும் பாதிக்கப்படவில்லை. நான் ஏற்கனவே குறிப்பிட்டபடி ஓராண்டாகவே விலை ஏறவில்லை. ஓரளவு கடன் வசதியை அதிகப்படுத்தவேண்டுமென்றே இப்படிச் செய்திருக் கிறார்கள். இவர்கள் கடன் கொடுக்கவில்லையென்றால் அதிக வட்டிக்கு லேவாதேவிக்காரர்களிடம் விவசாயிகள் போவார்கள். அதனால் அந்த வட்டிக்கு ஏற்றபடி விலைகள் ஏறிவிடக் கூடும்.

திட்டத்தைப்பற்றி உறுப்பினர்கள் பேசினார்கள். முக்கியமாக எதிர்க்கட்சித் தலைவர் அவர்கள் அதை விஸ்தாரமாக எடுத்துரைத் தார்கள். மூன்றாவது திட்டத்திலே 290 கோடி என்று கொடுக்கப் பட்டிருப்பது—இந்த மாநிலத்திற்காக, மிகவும் குறைவு என்றார்கள். அவர்களுக்கும் மற்றவர்களுக்கும் நான் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். அகில இந்தியா முழுவதற்கும், மத்திய சர்க்காரின் பொறுப்பிலேயே உள்ள திட்டங்களுக்காகவும், ராஜ்யங்கள் எல்லாவற்றுக்குமாகவும் மொத்தமாகச் சேர்த்து 3,847 கோடியாகிறது. அதிலே நமக்கு 291 கோடி, அது 320 கோடி யாகலாம் என்று எதிர்பார்க்கப்படுகிறது. சாதாரணமாக ஜனத் தொகை விகிதாசாரத்தில் பங்கிட்டுக் கொடுக்கப்படுகிறது. அந்த

27th April 1962] [Sri M. Bhaktavatsalam]

அடிப்படையில் நம் ராஜ்யத்திற்கு 7.8 சதவிகிதம் கிடைக்க வேண்டும். இப்போது நமக்குக் கிடைப்பது மொத்தத்தில் 8 சதவிகிதம் ஆகிறது. இதைத்தவிர சென்ட்ரல் ப்ராஜெக்ட் வேறு. மத்திய சர்க்காரின் பொறுப்பிலேயே நம் ராஜ்யத்தில் பல திட்டங்கள் இருக்கின்றன. நெய்வேலி, ரா-பிலிம் இண்டஸ்ட்ரி, தூத்துக்குடி துறைமுகம், சென்னைத் துறைமுக அபிவிருத்தி, மெட்ராஸ்-விழுப்புரம் ரயில்வே லைன், சேலம்-பங்களூர் லைன், விருதுநகர்-மானமதுரை லைன், ஹெவி எலக்ட்ரிகல்ஸ், ஆவடி டாங்க் பாக்டரி இவையெல்லாம் ஒருகோடியே 70 லட்சம் ஆகிறது. ஆகவே, இந்த மாநிலம் ஐந்தாண்டுத் திட்டங்களிலே புறக்கணிக்கப்பட்டிருக்கிறது என்று கூறுவதற்குக் கொஞ்சம் கூட ஆதாரம் இல்லையென்று தெரிவித்துக் கொள்கிறேன். கனம் சுதந்திரக் கட்சித் தலைவர் அவர்கள், இந்தத் திட்ட அளவே அதிகம் என்று கூறுகிறார்கள். தாங்க முடியாததைச் சுமக்கிறோம், ஜீரணிக்க முடியாததைச் சாப்பிட முற்படுகிறோம் என்று சொன்னார்கள். நான் ஒன்றை அவர்களுக்குத் தாழ்மையோடு தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். தேர்தலில் அவர்களுக்கும் தி.மு.க.-வுக்கும் ஒரு கூட்டு இருந்ததைப் போல் இந்தத் திட்டங்களைப் பற்றியும் அவர்கள் இருவரும் கூடிப் பேசி இரு சாராருக்கும் பிடிக்கும் ஒரு திட்டத்தைக் கண்டு பிடித்தால் நல்லது. ஒருவர் எல்லாவற்றையும் தேசிய மயமாக்க வேண்டுமென்று கூறுகிறார், இன்னொருவர் தேசிய மயமே கூடாது என்கிறார். தேர்தலில் இருந்த ஒரு ஒப்பந்தம், ஒரு பரஸ்பர ஒற்றுமை இந்த மாதிரித் திட்டங்கள் பற்றியும் ஏற்பட்டால் நல்லது. ஆனால் அரசாங்கத்தைப் பொறுத்த மட்டில் எது இந்த மாநிலத்திற்கு உகந்ததோ அதை அரசாங்கம் ஏற்றுக் கொள்கிறது. பொதுவாகத் திட்டம் போதாது என்றுதான் பெரும்பாலும் சொல்வார்கள். சுதந்திரக் கட்சி தவிர எல்லாரும் அந்தக் கருத்தைத்தான் சொல்வார்கள். கிராமத்தில் இருப்பவர்கள் கூட விலையைக் குறைத்தால் நல்லது என்றுதான் சொல்வாகள். தி.மு.க. சொன்னபடி 3 படி என்ன, 5 படி அரிசி போட்டால் கூட நல்லதுதான். அவ்வாறு போட்டால் வேண்டாமென்றா சொல்வார்கள்? இவற்றையெல்லாம் எப்படிச் செய்வது? திட்டத்திற்கு வருவாயை எப்படிப் பெறுவது? இவையெல்லாந் தான் கவர்னர் உரையிலே குறிப்பிடப்பட்டிருக்கின்றன. திட்டத்தை நிறைவேற்றப் பணம் போதாவிட்டால் அந்தப் பணத்தைப் பெறுவதற்கு என்ன வழி? திட்டத்தைக் குறைத்துக் கொள்வதுதான் வழி என்று சுதந்திரக் கட்சித் தலைவர் அவர்கள் சொல்லலாம். அதை மற்றவர்கள் யாரும் ஏற்றுக் கொள்ள மாட்டார்கள். அந்தப் பணத்தைப் பெறுவதற்கு என்ன வழி என்று தி.மு.க.-வைக் கேட்கிறேன். கனம் கம்யூனிஸ்ட் கட்சித் தலைவர் அவர்கள் 'நான்-டாக்ஸ் ரெவின்யூ' என்று ஒரு வழி சொன்னார்கள். பட்ஜட்டைத் தயாரிப்பதற்கு எதிர்க்கட்சிகள் கொண்ட ஒரு கமிட்டியைப் போடுவது என்பது சரியல்ல. பட்ஜட் எப்படித் தயாரிக்கப்பட வேண்டுமென்பது கனம் அங்கத்தினர்களுக்கு தெரிந்திருக்கும். இந்த ஆட்சியிலே மந்திரி சபைக்கு

[Sri M. Bhaktavatsalam] [27th April 1962

மட்டுந்தான் அது பற்றி முன்னரே தெரியும். இன்னும் சில ஆட்சிகளில் நிதி மந்திரிக்கும் முதல் மந்திரிக்கும் மட்டும்தான் தெரியும். அங்கத்தினர்கள் இப்போது அவர்களுடைய யோசனையைச் சொல்லலாம். அதற்காகத்தான் இந்த விவாதம். இப்போது எந்த வகையில் வருவாயை அதிகப்படுத்துவது என்பதற்கு யோசனை சொல்லலாம்.

சர்க்கார் உத்தியோகஸ்தர்களில் கெஜட் பதிவு இல்லாதவர்களுடைய பஞ்சப்படியை உயர்த்துவது பற்றிப் பேசினார்கள். அதைப் பற்றித் திருத்தம் கூடக் கொடுத்திருக்கிறார்கள். பஞ்சப்படியை மத்திய அரசாங்கம் உயர்த்தி இருக்கிறது என்றால் இவர்களும் எதிர்பார்க்கிறார்கள். இங்குள்ள உறுப்பினர்களும் சிபாரிசு செய்கிறார்கள். அவர்களுக்குக் கொடுக்க வேண்டியதுதான். எப்படிக் கொடுப்பது? அதற்கான வருவாயை எப்படிப் பெறுவது? இருநூற்றி தொண்ணூத்து ஒன்று கோடி ரூபாய்க்குத் திட்டம் வேண்டாம், இரண்டு மூன்று கோடி ரூபாயைக் குறைத்து விடுங்கள் என்று சொல்வார்களா? யாராவது ஒரு தொகுதியின் பிரதிநிதி வந்து எங்கள் பகுதியிலே உள்ள ஒரு திட்டத்தை விட்டு விட்டு அரசாங்க உத்தியோகஸ்தர்களுக்குப் பஞ்சப்படி கொடுங்கள் என்று சொல்ல முன் வருகிறார்களா? திட்டத்தை நிறுத்தி விடுங்கள், ஜனங்களைப் பற்றி அவசியம் இல்லை, சர்க்கார் உத்தியோகஸ்தர்களுக்குப் பஞ்சப்படி உயர்வு கொடுங்கள் என்று சொல்லட்டும். திட்டத்தின் வருவாய்க்கும், சர்க்கார் உத்தியோகஸ்தர்களுக்குப் பஞ்சப்படியை உயர்த்துவதற்கான வருவாயையும் பெறுவதற்கான வழி என்ன? இதற்கெல்லாம் யோசனை சொல்லட்டும். சில கனம் அங்கத்தினர்கள் வரியே போடக் கூடாது என்று சொன்னார்கள். ஒருவர் மீதும் வரி போடக் கூடாது என்பதை யாரும் ஒத்துக் கொள்ள முடியாது. யார் தாங்கக் கூடுமோ அவர்கள் மீது வரி போடுகிறோம். வரியே போடக் கூடாது என்பது ஜனநாயகத்திற்கு உகந்தது அல்ல. கனம் கல்யாணசுந்தரம் அவர்கள் மத்திய அரசாங்கம் வரி போட்டதைப் பற்றிச் சொன்னார்கள். மத்திய அரசசாங்கம் அடிஷனல் எக்ஸைஸ் ட்யூட்டி போட்டார்கள் என்றால் அதிலே நமக்கும் பங்கு உண்டு, என்பதைக் கம்யூனிஸ்ட் கட்சித் தலைவர் அவர்களுக்குத் தெரிவித்துக் கொள்கிறேன். (ஸ்ரீ எம். கல்யாணசுந்தரம் : அதிலிருந்து பஞ்சப்படியைக் கொடுத்துவிடுங்கள்.) ரயில்வே பாசஞ்சர் பேரில் வரி போடப்பட்டது. அதைத் தற்போது கட்டணத்துடன் சேர்த்து விட்டார்கள். அதிலிருந்து கிடைக்கும் 12½ கோடி ரூபாய் எல்லா மாகாணங்களுக்கும் பகிர்ந்து கொடுக்கப்படும் என்று மத்திய அரசாங்கம் முடிவு செய்திருக்கிறது. 'பினன்ஸ் கமிஷன்' இதை மனதிலே வைத்துக் கொண்டு சில சலுகைகளை மாநிலங்களுக்குக் கொடுத்திருக்கிறார்கள். 'அட்ஹாக் க்ராண்டில்' இருந்து நமக்கு ஒரு பங்கு கிடைக்கும். மத்திய அரசாங்கம் நம்முடைய மாகாணத்தைப் புறக்கணிக்கிறது என்று பிரசாரத்திற்காகச் சொல்லலாமே தவிர, உண்மை அதுவல்ல. பல மாநிலங்கள் சேர்ந்து ஒரு

27th April 1962] [Sri M. Bhaktavatsalam]

ஆட்சி அமைப்பாக இருக்கிறது. அமெரிக்காவை எடுத்துக் கொண்டாலும் ஒரு பெரிய போராட்டம் நடத்தி சுதந்திரம் அடைந்தார்கள். அது பல 'ஸ்டேட்ஸ்' சேர்ந்த ஒரு நாடாக இருக்கிறது. எந்தெந்த வகையிலும் மத்திய அரசாங்கத்திடம் இருந்து உரியதைப் பெற, சலுகைகளைப் பெற இந்த அரசாங்கம் கவனம் செலுத்திக் கொண்டிருக்கிறது. கனம் அங்கத்தினர்கள் இதைப் பற்றிக் குறை கூறும் வகையிலே ஒன்றும் இல்லை யென்று தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன்.

தேர்தல் நடந்த விதம் பற்றி விரிவாக இந்தச் சபையிலே எடுத்துச் சொல்லப்பட்டது. தேர்தல் காலத்திலே எப்படி நடந்து கொள்ள வேண்டுமென்பதெற்கெல்லாம் சில முடிவுகள் எல்லாக் கட்சியினராலும் ஒப்புக்கொள்ளப்பட்டு எடுத்துக் கொள்ளப்பட்டன. ஆனல் அவை கடைப்பிடிக்கப்படவில்லை. ஒரு சாரார் மட்டும்தான் அதற்குப் புறம்பாக நடந்தார்கள் என்று சொல்வது தவறு. அது முறையல்ல. தி.மு.க. போஸ்டர் போட்டது 'கோட் ஆப் காண்டக்ட்-'க்கு உகந்ததா? '4,104 போஸ்டர், ரத்தக் கறை போஸ்டர்' எல்லாம் சரிதானு? கம்யூனிஸ்ட் கட்சித் தலைவர் சொல்லட்டும். அவருடைய தொகுதியிலும் அந்த போஸ்டர் இருந்தது.

**Sri M. KARUNANITHI** : "ரத்தக்கறை படிந்த சட்டையுடன் நின்று கொண்டிருக்கும் பெண்" சுவரொட்டி எப்படி ஒழுங்கை மீறியதாகும் என்பதை அறிய விரும்புகிறேன்.

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : ஒழுங்கை மட்டும் மீறியதல்ல, சட்டத்தையே மீறியது என்று சொல்வேன். (ஸ்ரீ ஏ. பி. தர்மலிங்கம்: திராவிடர் கழகத் தோழர்கள் காங்கிரசுக்கு ஆதரவாக சில ஆபாசமான போஸ்டர்களை . . . . ) சர்க்கார் ஏற்பாடு செய்த விழாக்களில் சில அமைச்சர்கள் கலந்து கொண்டார்கள் என்று கம்யூனிஸ்ட் கட்சித் தலைவர் அவர்கள் குறிப்பிட்டார்கள். அமைச்சர்கள் தாங்களாகவேதான் சர்க்கார் விழாக்களில் கலந்து கொள்ளவேண்டாமென்று முடிவு செய்தார்கள். அதற்குக் காரணம் என்னவென்ருல் மந்திரிகள் சர்க்கார் விழாக்களில் கலந்து கொள்வதன் மூலமாகக் கிடைக்கும் வசதிகளைப் பெயரளவிற்குக் கூடப் பயன்படுத்திக் கொள்ளக் கூடாது என்ற அடிப்படையான நோக்கத்தினுல்தான். அப்படி முடிவு செய்தார்கள். அதைப் பின்பற்றியும் வந்தார்கள். இதற்கு முன்பே ஏற்றுக் கொள்ளப்பட்ட சில விழாக்களிலே, மத்திய அரசாங்கம் ஏற்பாடு செய்த சில விழாக்களிலே—கனம் அங்கத்தினர் குறிப்பிட்டபடி முதலமைச்சர் அவர்கள் சில ரெயில்வே விழாக்களில் கலந்து கொண்டார்கள். அந்த விழாவில் கலந்து கொண்டார்களே தவிர சர்க்கார் சுற்றுப்பிரயாணமாக அதைக் கருதி, சர்க்கார் சுற்றுப்பிரயாண வசதிகளைப் பெற்று அந்த வசதிகளை கட்சிப் பிரசாரத்திற்காக சற்றும் பயன்படுத்திக் கொள்ளவில்லை. ஆகவே, சிறியதை பெரிதுபடுத்தி தவறு செய்தார்கள் என்று சொல்வது சரியல்ல. யாரோ ஒரு நிருபர் ஏதோ ஒரு காங்கிரஸ் அபேட்சகரைக் கேட்டாராம், அவர் பையி

[Sri M. Bhaktavatsalam] [27th April 1962

லிருந்து கத்தையாக நோட்டை எடுத்து ஏதோ சொன்னாராம் என்று ஏதோ ஒரு பத்திரிகையில் வந்ததாகச் சொன்னார்கள். பெட்ரோல் போல் கொடுக்க முடியுமா? தி.மு.க. தலைவர் ஒரு பெட்டி வைத்தால் நான் ஐந்து பெட்டி வைத்திருக்கிறோம் என்று சொன்னதை நாங்களும் சொல்லலாம். எதிர்க்கட்சித் தலைவர் அவர்கள், நிதானமாகப் பேசும் அவரே அப்படிச் சொல்வது என்றால் நாங்களும் திருப்பிச் சொல்ல முடியாதா? அப்படிச் சொல்வதால் என்ன பலன்? கம்யூனிஸ்ட் கட்சித் தலைவர் அவர்கள் சொன்னார்கள், எங்கள் கணக்கைப் பார்த்துக் கொள்ளட்டும் என்று. மற்ற எந்தக் கணக்கையும்தான் பார்க்க முடியும். எந்த அபேட்சகர் கணக்கைப் பார்க்க முடியாது? இன்னும் குறைத்துக் கூட கொடுத்திருக்கிறார்கள். ஆகவே, விருப்பு பேசுவதில் பிரயோஜனமில்லை. கொடைக்கானல் தொகுதி மெம்பர் அழகிரிசாமி அவர்கள் சொன்னார்கள், மதுரையில் நின்ற கம்யூனிஸ்ட் கட்சி உறுப்பினர் எப்படியெல்லாம் தேர்தலை நடத்தினர் என்று. குறைந்தளவு செலவு செய்ய வேண்டுமென்றுதான் அதற்கு ஒரு வரம்பு வைத்திருக்கிறார்கள். அதற்கு எல்லோரும் ஒத்துழைக்க வேண்டும். ஒரு பெட்டி என்றால் ஐந்து பெட்டி என்றெல்லாம் சொல்லுவதற்கு துணையாக நிற்காது. பின்னர், விழுப்புரத்தில் என்று நினைக்கிறேன், தி.மு.க. தலைவர் ஒரு பொதுக் கூட்டத்திலே காங்கிரஸ்காரர்கள் வோட்டு கேட்க வந்தால் ஒவ்வொருவரும் 15 ரூபாய் கேளுங்கள் என்று சொல்லலாமா? அப்படிச் சொல்லலாமா பொதுக் கூட்டத்தில்? —

SRI M. KARUNANITHI: அது பத்திரிகை செய்தியா? அல்லது சுருக்கெழுத்தாளர் தந்த செய்தியா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: பத்திரிகையில் வந்த செய்தி. பின்னர் எதிர்க்கட்சி உபதலைவர் நான் தவறுதலாக எதிர்க்கட்சியைப்பற்றி சொன்னதாகச் சொன்னார்கள். கொள்ளை என்ற வார்த்தையே எனக்கு வராது. நான் சொன்னது, அவர்களுக்கு திறமை இருக்கிறது, நன்கு வசூல் செய்யத் தெரிகிறது, பின்னால்தான் சண்டை வருகிறதென்றுதான் சொன்னேன். கொள்ளை என்று ஒன்றும் சொல்லவில்லை. சசிவர்ண தேவர் அவர்கள் வேண்டுமென்றே சிலரை பெரோலில் விடுதலை செய்தோம் என்று சொன்னார்கள். அவர் ஒப்புக்கொண்டதைப் பாராட்டுகிறேன். சசிவர்ண தேவர் அவர்களைச் சேர்ந்தவர்கள் தண்டனை பெற்றார்கள். ஆகவே அவர்கள் மேல் அக்கரை கொண்டு என்னிடம் வந்து பரோல் கொடுங்கள் என்று கேட்டார்கள். பெரோலில் விடுவதை நான் அனுதாபத்தோடு கவனித்து வருகிறேன். காரணம் நானும் சிறைச்சாலையில் இருந்து எவ்வளவு பேர்கள் வாடினார்கள், எவ்வளவு பேர்கள் பெரோல் கேட்டார்கள் என்பதெல்லாம் எனக்குத் தெரியும். கம்யூனிஸ்ட் கட்சி தலைவர் அவர்களுக்குத் தெரியும் பெரோல் கொடுங்கள், எக்ஸ்டென்ஷன் கொடுங்கள் என்று கேட்டபோது தயங்காமல் கொடுத்திருக்கிறேன். பரோலில் வருகிறவர்களுக்கு சில நிபந்தனைகள் உண்டு.

27th April 1962] [Sri M. Bhaktavatsalam]

அந்த நிபந்தனைகளை மீறியிருந்தால் உடனே ரத்துசெய்யப்பட்டு சிறையில் அடைக்கப்படுவார்கள். அப்படி ஏதாவது புகார் வருகிறதா என்று கேட்டுப்பார்த்தால் இதுவரை அப்படி ஒரு புகாரும் வரவில்லை. விடப்பட்டவர்கள் தவறுதலாக நடந்து கொண்டார்கள் என்ற புகார் என்னிடம் வரவில்லை. இருந்தால் சசிவர்ண தேவர் அவர்களே கூறியிருக்கலாம். வேண்டுமென்றே விட்டோம் என்று கூறுவது சரியல்ல. மதுரை சிறைக்குப் போயிருந்தபோது சிறைவாசம் அனுபவிக்கிறவர்கள், சசிவர்ண தேவர் சிபார்சு செய்திருக்கிறார்கள், கொடுங்கள் என்று சொன்னார்கள். நேராகப் பார்த்து அவர்கள் பரோலில் விடுதலை செய்யப்பட்டார்கள். அதையொட்டி வேறு சிலரும் விடுதலை அடைந்திருக்கலாம்.

SRI K. MOOKIAH THEVAR : பரோலில் விடப்பட்ட நாலைந்து பேர்கள், சசிவர்ண தேவர் அவர்கள் நேரிடையாக அமைச்சர் அவர்களிடம் வந்து கேட்டு விடப்பட்டனரா? அல்லது ஒருவர், இருவர்தான் அப்படி விடப்பட்டனரா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : சசிவர்ண தேவர் அவர்கள் வந்து கேட்டார்கள், ஒருவர், இருவரை விட்டோம், அதையொட்டி மற்றவர்கள் கேட்டு அவர்களும் விடப்பட்டனர். அடுத்தபடியாக, சுதந்திரக் கட்சி தலைவர் அவர்கள், ப்ளானிங் கமிஷன் முறையே தவறு என்றார்கள். ப்ளானிங் கமிஷன் அரசாங்கத்திற்கு உள்பட்டது. அம்மாதிரி ஒரு திட்டக்குழு வேண்டும். திட்டத்தில் நம்பிக்கையில்லாவிட்டால் அது வேறு விஷயம். திட்டம் போட்டு அபிவிருத்தியை நாடவேண்டியிருக்கிறது. திட்டக்குழு அரசாங்கத்திற்கு, பார்லிமெண்ட்டுக்கு உட்பட்டது. அதுமட்டுமல்ல. திட்டக்குழு மாநிலங்களின் திட்டங்களைத் தயாரிக்கும்போது எவ்வளவோ முறை இந்த அரசாங்கத்தைச் சேர்ந்தவர்களையும், அதிகாரிகளையும் கேட்கிறார்கள். கலந்து பேசுகிறார்கள். ப்ளானிங் கமிஷன் சர்வாதிகாரமாக திட்டம் வகுக்கவில்லை. ஆனால் சுதந்திரக் கட்சிக்கு சோஷியலிஸம் கூடாது என்பது அவர்களுடைய கொள்கையாக வைத்துக் கொண்டிருக்கிறார்கள். அவர்களோடு சேர்ந்திருக்கிற திராவிட முன்னேற்றக் கழகமும் அதை ஒத்துக்கொண்டிருக்கிறதா இல்லையா என்பது தெரியவில்லை. ஆனால் திராவிட முன்னேற்றக் கழகம் பழைய கொள்கை ஒன்றை இப்போது சொல்லிக் கொண்டிருக்கிறார்கள், எல்லாவற்றையும் தேசீய மயமாக்க வேண்டும் என்று; அப்போது தான் நாடு முன்னேற முடியும் என்று சொல்லிக்கொண்டிருக்கிறார்கள். சினிமா, பாங்க், ஹோட்டல், பஸ் இவைகள் எல்லாம் தேசீய மயமாக்கப்பட வேண்டும் என்பது அவர்களுடைய கோரிக்கை. என்னுடைய சகா கனம் தொழில் அமைச்சர் அவர்கள் தேசீய மயமாக்கும் கொள்கையைப்பற்றி விளக்கிக் கூறியிருக்கிறார்கள். டிரான்ஸ்போர்ட் தேசீயமயமாக்கப்பட்ட பின்னால் இப்போது எப்படி நடந்து வருகிறது என்பதைப்பற்றி எல்லாம் விளக்கமாக கூறினார்கள். அந்த முறையில் சர்க்கார் இன்றைக்கு தேசீய 1 p.m.

[Sri M. Bhaktavatsalam] [27th April 1962

மயமாக்குவதை ஒப்புக்கொண்டிருக்கிறது. ஆனால் ஒரேயடியாக முடியாது. படிப்படியாக முடியும் என்பதைப்பற்றி குறிப்பிட்டார்கள். குறிப்பாக சிலர் எல்லாவற்றையும் தேசீய மயமாக்குவது நல்லது என்று சொல்லுகிறார்கள். ஆனால் சர்க்கார் கருதுவது, எல்லாவற்றையும் ஏன் இப்போது நம் தலையில் போட்டு சுமையை தாங்கிக்கொள்ளவேண்டும், நாட்டில் எப்படியும் தொழில் பெருகவேண்டும், வேலைவாய்ப்புக்கள் பெருக வேண்டும். பிரைவேட் செக்டார் இருப்பதினால் சர்க்காருக்கு என்ன நஷ்டம் வந்துவிடப் போகிறது, போதுமான அளவுக்கு அவர்களுக்கு வரியைப் போடுகிறோம். சர்க்காருக்கும் வருமானம் கிடைக்கிறது. அவர்கள் முதலையும் பயன்படுத்திக்கொள்கிறோம். சர்க்கார் இது தவிர தாமாகப் போட்டிருக்கிற பல திட்டங்களை நிறைவேற்ற வேண்டியிருக்கிறது. அதற்கெல்லாம் கவனம் செலுத்த வேண்டியிருக்கிறது. எவ்வளவோ வேலைகள் இருக்கின்றன. மற்றவர்கள் கவனிக்கிற வேலையையும் நாம் ஏன் எடுத்துக்கொள்ள வேண்டும். அதோடு ஒரேயடியாக எல்லாவற்றையும் தேசிய மயமாக்கப்படும் என்ற மலைப்பு சிலருக்கு ஏற்பட்டு விடுகிறது. சமீபத்தில் கூட, வெற்றிகரமாகவும் திருப்திகரமாகவும் பஸ் போக்குவரத்தையும் நடத்திக்கொண்டிருக்கும் ஒருவர் என்னோடு பேசிக்கொண்டிருந்தார். அப்போது அவர் சொன்னார் இப்போது பஸ் போக்குவரத்தை எல்லாம் நன்றாகத்தான் நடத்திக் கொண்டிருக்கிறோம். இப்போது இருக்கிற தரத்தைக் குறைக் காமல் தொடர்ந்து நடத்துவது லாபகரமாக இருக்காது. எனவே, வேறு தொழிலில் இறங்க உத்தேசிப்பதாகவும் அவர் கூறினார். ஆகவே தேசியமயமாக்குவதில் ஆட்சேபனையில்லை என்றாலும் முற்றிலும் தேசியமயமாக்க அவசியமில்லை என்பது தான் சர்க்காருடைய கொள்கை. எவ்வளவோ துறைகளை தேசீய மயமாக்கியிருக்கிறோம். மின்சாரத்தை எடுத்துக் கொண்டால் அனேகமாக எல்லாம் தேசீய மயமாக்கிவிட்டோம். ஜெனரேட் செய்வது எல்லாம் சர்க்கார் துறையில் தான், டிஸ்ட்ரிபுஷன் செய்வதில் மட்டும் சில இடங்களில் தனியார் கையில் கொடுக்கப் பட்டிருக்கிறது. தவிர, சுதந்திராக் கட்சியிலிருந்து நிலவரியே கூடாது என்று எடுத்துச்சொல்லப்பட்டது. நிலமுள்ளவர்கள் குறைவு, இல்லாதவர்கள் அதிகம். அது நாம் அமைத்திருக்கும் சோஷியலிஸக் கொள்கைக்கும் உகந்ததல்ல என்பதை தெரிவித்துக் கொள்கிறேன். நிலவரி இனங்களில் மட்டும் சர்க்காருக்கும் பஞ்சாயத்துக்களுக்கும் 10 கோடி ரூபாய் மட்டுமே வருவாய் கிடைக் கிறது. அடுத்ததாக, பருவ மழை தவறி விட்டது, ஆகவே அந்த இடத்தில் நடவடிக்கை எடுக்கப்படும். அரசாங்கத்திலிருந்து கடன் எல்லாம் முழுவதும் தள்ளுபடி (Full remission) செய்து கொடுக்கவேண்டும் என்று கேட்கப்பட்டது. எல்லா இடத்திற்கும் வஜா அளித்துவிட முடியாது. எங்கெல்லாம் தேவையோ அங்கெல்லாம் வரி வஜா செய்து கொடுப்பதற்கு வேண்டிய நடவடிக்கை எடுக்கப்படும். அரசாங்கத்திலிருந்து கடன் கொடுக்கப்படுகிறது, ஆனால் கடன் வாங்கியிருந்தால் ஒரு தவணை யாவது சர்க்காருக்கு திருப்பிக் கொடுத்திருக்கவேண்டும்.

27th April 1962] [Sri M. Bhaktavatsalam]

எந்தெந்த இடங்களில் எல்லாம் இது கவனிக்கப்பட வேண்டுமோ, அங்கு கவனிக்கப்பட்டு கடன் வசூல் தள்ளி வைப்பதற்கு நடவடிக்கை எடுக்கலாம்.

அடுத்ததாக, கம்யூனிஸ்ட் கட்சித் தலைவர் சொன்னார், மதுவிலக்குச் சட்டம் அமுல் நடத்துவதை தேர்தல் காலத்தில் தள்ளி வைத்துவிட்டார்கள் என்று. அந்த வேலையை செய்யாமல் விட்டு விட்டார்கள் என்றும் சொன்னார்கள். அது சரியல்ல. தேர்தல் காலத்தில் எல்லா போலீஸ் அணிகளும் ஒரே வேலையில் ஈடுபட வேண்டியிருந்தது. அதற்காக மதுவிலக்குச் சட்டத்தை அடியோடு மறந்துவிட்டார்கள் என்று சொல்லுவது சரியல்ல. இதைப்பற்றி அவர்கள் சற்று குத்தலாகக் கூடப் பேசினார்கள். ஆனால் தேர்தலுக்குப் பின்னால் சட்டத்தை அமல் நடத்துவதற்கு நடவடிக்கை எடுக்கும்போது சில அரசியல் கட்சியினர் வந்து எங்கள் கட்சியிலுள்ளவர்களை பிடித்துக்கொண்டு போய் விட்டார்கள் என்று புகார் சொல்லுகிறார்கள். குற்றம் செய்கின்றவர்கள் கட்சிக்காரர்களாக இருந்தால் அதற்கு சர்க்கார் என்ன செய்ய முடியும்.

வரி வஜா செய்து கொடுக்கின்ற கோரிக்கையில், எந்த அளவுக்கு கொடுக்கவேண்டும் என்று தோன்றுகிறதோ அதன்படி கொடுக்கும் என்பதை தெரிவித்துக்கொள்கிறேன்.

இன்னொன்று, தேர்தல் காலத்தில் மந்திரிகள் ராஜிநாமா செய்யவில்லை என்று தங்களுடைய பழையக் கொள்கையையே எதிர்க்கட்சி தரப்பிலிருந்து எடுத்துச் சொல்லப்பட்டது. எதிர் கட்சித் தலைவர் அவர்களும் இதைப்பற்றி குறிப்பிட்டார்கள். ஆனால் இதுமாதிரி எந்த நாட்டிலும் நடைபெற்றது இல்லை. தேர்தல் காலத்தில் மந்திரிகள் எவ்வாறு நடந்து கொள்ள வேண்டுமோ அவ்வாறு நடந்து கொண்டிருக்கிறார்கள். இதைப் பற்றி மற்றவர்கள் எல்லாம் பாராட்டியிருக்கிறார்கள். ஆகவே இந்த குற்றச்சாட்டுக்கு சற்றும் ஆதாரமில்லை என்று கூறுவேன்.

வேறு பல கனம் அங்கத்தினர்கள், தங்கள் தங்கள் தொகுதியிலுள்ள குறைகளை எடுத்து தெரிவித்தார்கள். அவைகளைப்பற்றி எல்லாம் இப்போது விவரிக்கவேண்டியதில்லை. அதைப்பற்றி வேண்டிய கவனம் செலுத்தப்படும். வேண்டிய பரிகாரம் அளிக்கப்படும்.

கன்னியாகுமரி மாவட்டத்திலிருந்து வந்திருக்கும் கனம் அங்கத்தினர் திரு. குஞ்சன் நாடார் அவர்கள் அரசாங்கத்திற்கு ஒரு எச்சரிக்கையே கொடுத்துவிட்டார். அது கன்னியாகுமரி மாவட்டத்திலிருந்து வருகின்ற அங்கத்தினர்களுடைய பழக்கம். எச்சரிக்கை செய்வது, பயமுறுத்துவது இவையெல்லாம் எனக்கு புதியதல்ல. இம்மாதிரி பயமுறுத்தல்கள் பற்றி நாங்கள் பழக்கப் பட்டிருக்கிறோம். அவர்கள் சொன்ன இணைப்பு விஷயங்கள் எல்லாம் அவ்வப்போது கவனிக்கப்பட்டு வருகிறது. ஆசிரியர்களைப் பற்றியும் மற்றவர்களைப்பற்றியும் வேண்டிய கவனம் எடுத்துக்

[Sri M. Bhaktavatsalam] [27th April 1962

கொள்ளப்பட்டு வருகிறது. ஆனால் ஒன்று, அந்த மாவட்டத்தைச் சேர்ந்த உறுப்பினர்கள் தயவுசெய்து மன்னிக்கவேண்டும். அவர்களுடைய கோரிக்கை எல்லாம் பொதுமக்களின் பிரச்னையாக இருக்க வேண்டும். அதுபற்றி ஒன்றும் எடுத்துக் கூறாமல் ஏதோ ஒரு நீதிபதி, ஏதோ ஒரு சப்-இன்ஸ்பெக்டர், ஏதோ ஒரு ஹெட் கான்ஸ்டபிள் இவர்களைப்பற்றியதாக இருப்பதுபற்றி நான் வருந்துகிறேன்.

SRI KUNJAN NADAR : On a point of clarification, Sir, is the Hon. the Minister prepared to give me an opportunity to prove my allegations.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இப்போது நான் அதைப்பற்றி விவரிக்க விரும்பவில்லை . . . .

THE HON. SRI K. KAMARAJ : திரு. குஞ்சன் நாடார் அவர்கள் அரசாங்கத்திற்கு ஒரு எச்சரிக்கையைச் சொன்னார். அவர்கள் சொன்ன குறைகள் எல்லாம் தீர்க்கப்படவில்லை என்றால் இனிமேல் தேர்தலில் காங்கிரஸ் வெற்றி பெறமுடியாது என்று. நான் அவர்களுக்குத் தெரிவித்துக்கொள்ள விரும்புவது, இப்போது காங்கிரஸ்காரர்கள் அங்கு சரியாக இல்லை, அதனால்தான் கனம் அங்கத்தினர்களைப்போன்றவர்கள் ஜெயித்து வர முடிந்தது. இனிமேல் வரப்போகின்ற தேர்தலில் அங்குள்ள காங்கிரஸ்காரர்கள் சரியாகிவிடுவார்கள், அப்போது இவர்களைப்போன்றவர்களை வரவொட்டாமல் ஆக்கிவிடுவார்கள் என்பதை இச் சந்தர்ப்பத்தில் தெரிவித்துக்கொள்கிறேன் (ஆரவாரம்).

THE HON. SRI M. BHAKTAVATSALAM : பொதுவாக அந்தந்த மாவட்டங்களில் உள்ள மெம்பர்கள் பல குறைகளை எடுத்துச் சொன்னார்கள். குறிப்பாக சேலம் மாவட்டத்திலுள்ள அங்கத்தினர்கள் உருக்கு தொழிற்சாலை பற்றி சொன்னார்கள். உருக்குத் தொழிற்சாலை அமைப்பது என்பது திடீரென்று கடையிலிருந்து வாங்கி ஏற்படுத்துவதல்ல. அங்கிருக்கின்ற உருக்கை எடுக்கப்பட்டு பரிசோதனை நடத்தப்பட்டு வருகின்றது. இதைப்பற்றி கவர்னர் அவர்களும் குறிப்பிட்டிருக்கிறார்கள். இதைப்பற்றி முன்பு இங்கே நிதி அமைச்சராக இருந்த, இப்போது மத்திய அரசாங்கத்தின் உருக்குத் தொழில் பொறுப்பு வகிக்கும் அமைச்சர் ஸ்ரீ சுப்பிரமணியம் அவர்கள் நம்பிக்கையும் உறுதியும் தெரிவித்திருக்கின்றார்.

பஞ்சாயத்துக்கும் பஞ்சாயத்து யூனியன்களுக்கும் அதிகமான அதிகாரம் வேண்டும் என்றுள்ள கோரிக்கையை பலர் தெரிவித்தார்கள். ஆனால் இதில் முக்கியமாக குறிப்பிட்டது, ஆசிரியர்களை மாற்றுவதற்கு பஞ்சாயத்து யூனியனுக்கு அதிகாரம் வேண்டும் என்று ஓரளவுக்கு இந்த அதிகாரம் இல்லாமல் இருப்பது பஞ்சாயத்து யூனியன் தலைவருக்கு நல்லது என்றே நினைக்கிறேன். கிராமத்திலுள்ள மக்கள் பஞ்சாயத்து தலைவர்களிடம் பல வசதிகள் எதிர்பார்க்கின்றார்கள். ஆசிரியர்களை மாற்றுவதற்குள்ள அதிகாரத்தைப்பற்றி பொதுமக்களுக்கு அவ்வளவு அக்கறை இல்லை. இன்னொன்று, மதிய உணவுத் திட்டத்தைப் பற்றி இந்த மன்றத்தில் குறிப்பிடப்பட்டது.

27th April 1962] [Sri M. Bhaktavatsalam]

ஆசிரியர்கள் எல்லாம் இப்போது சமையல்காரர்களாக ஆகியிருக்கிறார்கள் என்று வேறு இடத்திலும் இந்த மன்றத்திலும் குறிப்பிடப்பட்டது. ஆசிரியர்களின் வேலை என்ன, பள்ளிக்கூடத்தில் பட்டினியால் வாடும் பிள்ளைகளுக்கு பாடம் சொல்லிக் கொடுத்து என்ன பயன்? இதற்காக அக்கறை எடுத்துக் கொள்ளுவதை இழிவாக கருதுவது சரியல்ல. முக்கியமாக இந்த மதிய உணவுத் திட்டத்தை பஞ்சாயத்துக்கள் பொறுப்பேற்றுக்கொள்ள வேண்டும். அதற்கு வேண்டிய நிதி உதவி திரட்ட வேண்டும். இந்தத் திட்டத்தை சீராக நடத்த வேண்டும் என்பது தான் அரசாங்கத்தினுடைய ஆவல். இந்தத் திட்டத்தைப் பற்றி சிலர் கேவலமான முறையில் குறிப்பிட்டிருந்த போதிலும், சரியான முறையில் இந்தத் திட்டம் நடந்தேறுவதற்கு, அனைவரும் ஒத்துழைப்பும் ஆதரவு தரவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். ஆசிரியர்கள் இதில் உத்ஸாகம் காட்டுவதை நான் பாராட்டுகிறேன்.

மேலும் இந்த மன்றத்தின் காலத்தை நான் எடுத்துக்கொள்ள விரும்பவில்லை. இங்கு வந்திருக்கும் நன்றி தெரிவிக்கும் தீர்மானத்தின் மீது பல திருத்தங்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. அவை யாதும் அவசியமில்லை என்று நான் கூறுகிறேன். அந்தத் திருத்தங்களை எல்லாம் உறுப்பினர்கள் வாபஸ் பெற்றுக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். அவ்விதம் வாபஸ் பெற்றுக்கொள்ளவில்லை என்றால் அதை எதிர்த்து அத்திருத்தங்களை நிராகரிக்க வேண்டும் என்று மன்றத்தைக் கேட்டுக் கொண்டு, இதன் மீது வந்திருக்கும் அசல் தீர்மானத்தை மட்டும் ஆதரிக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டு முடித்துக்கொள்கிறேன்.

MR. SPEAKER: Now the motion and the amendments have to be put to vote. I will take up the amendments first. I find in most of the amendments, a common factor is about the soaring of prices. Therefore, I will now first put the amendment of Sri V. R. Nedunchezhiyan. The hon. Member Sri V. R. Nedunchezhiyan is not in his seat. Is anybody pressing it?

SRI M. KARUNANITHI: கனம் சபாநாயகர் அவர்களே, நான் எதிர்கட்சித் தலைவர் திரு. நெடுஞ்செழியன் அவர்கள் பிரேரபித்துள்ள திருத்தத்தை வற்புறுத்துகிறேன்.

The amendment of Sri V. R. Nedunchezhiyan was put and lost.

The amendment of Sri Kunjan Nadar was, by leave, withdrawn.

MR. SPEAKER: Is the hon. Member, Sri M. Kalyanasundaram, pressing his amendment?

SRI M. KALYANASUNDARAM: Yes, Sir.

[27th April 1962

MR. SPEAKER: Hon. Members will please, sit in their allotted seats. I now call upon the Hon. Minister for Industries to take his seat by my side.

I will put the amendment of Sri M. Kalyanasundaram to vote. The question is—

*Add* at the end the following :—

" but regret to note—

(i) that the Address has failed to refer to the need to increase the scales of dearness allowance of all categories of employees in the service of the State Government, local bodies and educational institutions, proportionate to the rise in the cost of living.

(ii) the tone of complacence pervading the Address about progress and development and th efailure to refer to the deep distress and suffering of the people due to ever-rising prices, new tax-burden and growing unemployment."

(iii) that the Governor has not been properly advised by his Government, regarding the need to take steps to re-name the State of Madras as " Tamilnad."

(iv) that no mention has been made to the code of discipline worked out by the All-Party Conference in connection with the election campaign and the manner in which the Ruling Party failed to observe the same.

(v) that no reference has been made to the existence of crisis in the supply of water to urban areas, particularly in the cities of Madras, Tiruchirappalli, Salem and Coimbatore.

(vi) the failure to refer to the need to start at least one more University for the State.

(vii) the silence regarding the enforcement of master-plans for the proper utilization of the waters of the Krishna and Godavari and the west flowing rivers.

(viii) that the steps taken for developing Tamil as the medium of instruction and official language, have been halting and inadequate.

(ix) the failure to urge upon the Union Government to upgrade the City of Madras as ' A ' for the purpose of compensatory allowances of Government employees.

(x) that no mention has been made about the crisis, the industry is facing in the State, due to inadequate allotment of coal and coke leading to blackmarket and high prices.

(xi) the failure of the Address to refer to the crisis which the handloom industry is facing in the State, due to high prices of yarn and accumulation of stocks.

27th April 1962] [Mr. Speaker]

The amendment was put and declared lost. A poll was demanded and the House divided thus :—

***Ayes.***

Sri M. Karunanithi.
,, K. A. Mathialagan.
,, Saw Ganesan.
,, M. Kalyanasundaram.
,, A. P. Dharmalingam.
,, S. S. Rajendran.
,, Rama Arangannal.
,, A. Raghava Reddi.
,, A. K Subbiah.
,, V. S. S. Mani
,, M. Rajangam.
,, Kanchi Manimozhiar.
,, K. Cheemai Chamy.
,, M. Shanmugam.
,, N. Rajangam.
,, V. Arunachalam.
,, K.S. Mani.
,, A. Thangavelu.
,, Munu Adhi.
,, S. Murugaiyan.
Srimathi Jagadambal Velayudham.
Sri M. S. Mani.
,, C. K. Chinna Raji.
,, M. P. Vadivelu.
,, T. B. Kesavan.
,, R. Nallamuthu.
,, N. P. Sengottuvelu.

***Ayes*—cont.**

Srimathi Manonmani Ammal.
Sri S. Madhavan.
,, T. P. Alagamuthu.
,, S. Mani.
,, A. Thiagarajan.
,, P. Murugaiyan.
,, A. Duraiyarasan.
,, V. R. Periannan.
,, P. V. Sriramulu.
,, M. Kamalanathan.
,, C.G. Visvanathan.
,, S. Muthulingam.
,, Pulavar K. Govindan.
,, C. V. Velappan.
,, C. Manickam.
,, T. Chinnasamy.
,, M. R. Krishnamurthy.
,, S. Arumugham.
,, M. V. Karivengadam.
,, A. G. Balakrishnan.
,, R. Narayanan.
,, S. Ramaswamy.
,, V. Krishnamurthy.
,, K. R. Munirathnam.
,, R. Abdul Khaleel.
,, S. J. Ramaswamy.
,, R. Sampangi.

***Noes.***

Sri K. Parthasarathy.
,, R. Krishnaswamy Naidu.
,, K. S. Abdul Azeez.
,, M. Alagiriswamy.
,, C. M. Ambikapathi.
,, L. Anandan.
,, S. Angamuthu Naicker.
,, K. S. Ardhanareeswara Gounder.
,, P. Appavoo.
,, A. Appavoo Thevar.
,, A. Arumugam.
,, R. S. Arumugam.
,, A. B. Balagan.
,, A. M. P. S. Balagangadharan.
,, V. Bashyam Reddi.
,, M. Chelliah.
,, S. Chinna Karuppa Thevar.
,, A. Chinnathurai Ambalakarar.
The Hon. Sri K. Kamaraj.
,, M. Bhaktavatsalam.
,, P. Kakkan.
,, V. Ramaiah.
Sri P. Ramachandran.
,, S. Chinnayyan.
,, N. P. M. Chinniah Gounder.
,, A. S. Dhakshinamoorthy Gounder.
,, M. Dhandayuthapani Pillai.
,, A. Doraiswamy.
,, V. Ellamma Naidu.
,, T. P. Elumalai.
,, G. Gomathisankara Dikshidar.
,, R. Govindarajulu Naidu.
,, K. S. G. Haja Sheriff.
,, P. Jayaraj.
,, R. Jeevarathanam.

***Noes*—cont.**

Sri T. Kadambavana Sundaram.
,, A. K. Kallappa Gounder.
,, T. Kercha Gowder.
,, S. V. Natesa Mudaliar.
,, K. M. Krishnan.
,, M. Kulandaiswamy Gounder.
,, N. Mahalingam.
,, T. Manavalan.
,, K. Marappa Gounder.
,, M. Maruthanayagam Pillai.
,, J. Matha Gowder.
,, M. Mayandi Nadar.
,, V. A. Muthaih.
,, M. P. Muthukaruppannaswami Gounder.
,, T. M. Nallaswamy.
,, S. Nanjunda Row.
The Hon. Sri Nalla Senapathi Sarkarai Manradiar.
Sri P. Urkavalan.
,, G. Venkataraman.
,, O. Venkatasubba Reddy.
The Hon. Sri G. Bhuvarahan.
,, S. M. A. Majeed.
Srimathi T. N. Anandanayaki.
,, A. Suares.
,, C. Kolandai Ammal.
,, P. K. R. Lakshmikantham.
,, A. S. Ponnammal.
,, Krishnaveni.
,, Lakshminarasamma.
,, Rajathi Kunchitapatham.
,, Parvathi Arjunan.
,, N. K. Ranganayaki.
Kumari D. Sulochana.

[Mr. Speaker] [27th April 1962

*Noes*—cont.

Sri K. Narayanaswamy Pillai.
,, G. Narayanaswamy Naidu.
,, P. Palani Pillai.
,, K. P. Palanisamy.
,, R. Ponnappa Nadar.
,, K. Ponniah.
,, A. M. Ponrangam.
,, S. Ponnusamy.
,, R. Rajagopalaswamy Naicker.
,, B. Rajagopal Naidu.
,, P. Rajagopal.
,, G. Rajaram.
,, A. Ramachandra Rayer.
,, N. Ramachandra Reddy.
,, N. S. Ramalingam.
,, S. Ramalingam.
,, V. Ramanathan.
,, A. R. Ramasami.
,, N. Ramaswamy Udayar.
,, A. Rathnavel Gounder.
,, R. Rangaswamy.
,, S. Sadasivam.
,, B. Parameswaran.

*Noes*—cont.

Sri R. V. Swaminathan.
Dr. B. Natarajan,
Sri K. R. Sambandam.
,, S. Sangili.
,, V. Sankaran.
,, M. S. Selvarajan.
,, R. Sengaliappan.
,, N. Shanmuga Sundaram.
,, S. Sivasubramaniam.
,, N. Sounthara Pandian.
,, O. Srinivasa Reddiar.
,, C. Srinivasa Iyengar.
,, A. R. Subbiah Mudaliar.
,, R. Subramaniam.
,, K. S. Subramania Gounder.
,, N. Subramaniam Chettiar.
,, N. S. Sundararajan.
,, K. B. Palani.
,, R. Thangavelu.
,, K. Thiruvengadam.
,, N. V. Venugopalakrishnaswami.
,, M. William.

*Neutral.*

Sri Kunjan Nadar.
,, A. Swamidhas.
,, R. S. Veerappa Chettiar.

**Ayes—54 ; Noes—113 ; Neutral—3.**

**The amendment was lost.**

The amendments of Sri Saw. Ganesan, Sri K. A. Mathialagan, Sri V. S. S. Mani, Sri S. Madhavan, Sri V. Krishnamoorthy, Sri Rama Arangannal and Sri A. P. Dharmalingam were individually put and lost.

MR. SPEAKER : I will put the amendment of Sri M. Karunanithi to vote. The question is—

*Add* the following at the end :—

"but regret to note that there is no mention in the Governor's Address regarding the 'nationalisation of bus transport'."

The amendment was put and declared lost.

A poll was demanded and the House divided thus :—

*Ayes.*

Sri M. Karunanithi.
,, K. A. Mathialagan.
,, M. Kalyanasundaram.
,, A. P. Dharmalingam.
,, S. S. Rajendran.
,, Rama Arangannal.
,, A. K. Subbiah.
,, V. S. S. Mani.
,, M. Rajangam.
,, Kanchi Manimozhiar.
,, M. Shunmugam.
,, N. Rajangam.
,, V. Arunachalam.
,, K. S. Mani.

*Ayes*—cont.

Sri S. Madhavan.
,, T. P. Alagamuthu.
,, S. Mani.
,, A. Thiagarajan.
,, P. Murugaiyan.
,, A. Duraiyarasan.
,, V. R. Periannan.
,, P. V. Sriramulu.
,, M. Kamalanathan
,, C. G. Viswanathan.
,, S. Muthulingam
,, Pulavar K. Govindan.
,, C. V. Velappan.
,, C. Manickam.

27th April 1962] [Mr. Speaker]

*Ayes*—cont.

Sri T. Chinnasamy.
,, M. R. Krishnamurthy.
,, A. Thangavelu.
,, Munu Adhi.
,, S. Murugaiyan.
Srimathi Jagadambal Velayudham.
Sri M. S. Mani.
,, C. K. Chinnaraji.
,, M. P. Vadivelu.
,, R. Nallamuthu.
,, N. P. Sengottuvelu.

*Ayes*—cont.

Sri S. Arumugam.
,, M. V. Karivengadam.
,, A. G. Balakrishnan.
,, R. Narayanan.
,, S. Ramaswamy.
,, V. Krishnamurthy.
,, K. R. Munirathinam.
,, R. Abdul Khaleel.
,, S. J. Ramaswamy.
,, R. Sampangi.

*Noes.*

Sri K. Parthasarathy.
,, R. Krishnaswamy Naidu.
,, K .S. Abdul Azeez.
,, M. Alagiriswamy.
,, C. M. Ambikapathi.
,, L. Anandan.
,, S. Angamuthu Naicker.
,, K. S. Arthanareeswara Gounder.
,, P. Appavoo.
,, A. Appavoo Thevar.
,, A. Arumugam.
,, R. S. Arumugam.
,, A. B. Balagan.
,, A. M. P. S. Balagangadharan.
,, V. Bashyam Reddi.
,, M. Chelliah.
,, S. Chinna Karuppa Thevar.
,, A. Chinnathurai Ambalakarar.
The Hon. Sri K. Kamaraj.
,, M. Bhaktavatsalam.
,, P. Kakkan.
,, V. Ramaiah.
Sri P. Ramachandran.
,, A. Chinnayyan.
,, N. P. M. Chinniah Gounder.
,, A. S. Dhakshinamoorthy Gounder.
,, M. Dhandayuthapani Pillai.
,, A. Doraiswamy.
,, V. Ellamma Naidu.
,, T. P. Elumalai.
,, G. Gomathisankara Dikshidar.
,, R. Govindarajulu Naidu.
,, K. S. G. Haja Sheriff.
,, P. Jayaraj.
,, R. Jeevarathnam.
,, T. Kadambavana Sundaram.
,, A. K. Kaliappa Gouder.
,, T. Karcha Gowder.
,, S. V. Natesa Mudaliar.
,, K. M. Krishnan.
,, M. Kulandaiswamy Gounder.
,, T. Manavalan.
,, K. Marappa Gounder.
,, M. Maruthanayagam Pillai.
,, J. Matha Gowder.
,, M. Mayandi Nadar.
,, V. A. Muthiah.
,, M. P. Muthukaruppannaswami Gounder.
,, T. M. Nallaswamy.
,, S. Nanjunda Row.
The Hon. Sri Nalla Senapathi Sarkarai Manradiar.
,, G. Bhuvarahan.

*Noes*—cont.

The Hon. Sri S. M. A. Majeed.
Srimathi T. N. Anandanayaki.
,, A. Suares.
,, C. Kolandaiammal.
,, P. K. R. Lakshimikandam.
,, A. S. Ponnammal.
,, Krishnaveni.
,, Lakshminarasamma.
,, Rajathi Kunchitapatham.
,, Parvathi Arjunan.
,, N. K. Ranganayaki.
Kumari D. Sulochana.
Sri K. Narayanaswamy Pillai.
,, G. Narayanaswamy Naidu.
,, P. Palani Pillai.
,, K. P. Palaniswamy.
,, R. Ponnappa Nadar.
,, K. Ponniah.
,, A. M. Ponrangam.
,, S. Ponnusamy
,, R. Rajagopalaswamy Naicker.
,, B. Rajagopal Naidu.
,, P. Rajagopal.
,, G. Rajaram.
,, A. Ramachandra Rayer.
,, N. Ramachandra Reddy.
,, N. S. Ramalingam.
,, S. Ramalingam.
,, V. Ramanathan.
,, A. R. Ramasami.
,, N. Ramaswamy Udayar.
,, A. Rathnavel Gounder.
,, R. Rangaswamy.
,, S. Sadasivam.
,, B. Parameswaran.
,, R. V. Swaminathan.
,, Dr. B. Natarajan.
,, K. R. Sambandam.
,, S. Sangili.
,, V. Sankaran.
,, M. S. Selvarajan.
,, R. Sengaliappan.
,, N. Shanmuga Sundaram.
,, S. Sivasubramaniam.
, N. Sounthara Pandian.
,, O. Srinivasa Reddiar.
,, C. Srinivasa Iyengar.
,, A. R. Subbiah Mudaliar.
,, R. Subramanian.
,, K. S. Subramania Gounder.
,, N. Subramaniam Chettiar.
,, N S Sundararajan.
,, K. B. Palani.
,, R. Thangavelu.

[Mr. Speaker] [27th April 1962

*Noes*—cont.

Sri K. Thiruvenkadam.
,, P. Urkavalan.
,, G. Venkataraman.
Sri C. Venkatasubba Reddy.
,, N. V. Venugopalakrishnaswami.
,, M. William.

*Neutral*.

Sri R. S. Veerappa Chettiar.
,, A. Swami dhas.
Srimathi Manonmani Ammal.
Sri K. Cheemai Chamy.
,, A. Raghava Reddi.
,, Saw. Ganesan.

**Ayes—49; Noes—112; Neutral—6.**

**The amendment was lost.**

The amendments of Sri R. Narayanan, Sri N. Rajangam, Sri S. Muthulingam, Sri A. Thangavelu, Sri M. S. Mani, Pulavar K. Govindan, Sri M. R. Krishnamurthy, Sri A. Thiagarajan and Sri M. Shanmugam were individually put and lost.

MR. SPEAKER: The question is—

"That an address be presented to the **Governor in the** following terms :—

'That the Members of the Madras Legislative Assembly assembled in this session are deeply grateful to the Governor for the address which he has been pleased to deliver to both the Houses of the Legislature assembled together on the 23rd April 1962'."

The motion was put and carried.

MR. SPEAKER: The House will now adjourn and meet again at 10 a.m. on Friday, the 4th May 1962.

**1-45 p.m.** The House then adjourned.

VI.—PAPERS LAID ON THE TABLE OF THE HOUSE.

**A. Statutory Rules and Orders.**

53. *Notification issued with G.O. Ms. No.* 978, *Home, dated* 12*th March* 1962, *regarding the motor vehicles tax payable at reduced rates in respect of lorry MDJ* 1358 *belonging to the St. Mary's High School and Orphanage, Vellore, registered in the name of Rev. Mother Superior, St. Mary's Convent, Vellore, so long as the lorry is used exclusively for transport of building materials for the construction of the said school building.* [*Laid on the table of the House under section* 11 (2) *of the Madras Motor Vehicles Taxation Act,* 1931 (*Madras Act III of* 1931).]

**B. Report, Notifications and Other papers.**

* 23. *The Madras Sugar Factories Control (Amendment) Bill,* 1962 (*L.A. Bill No.* 1 *of* 1962), *with annexure to the Bill.*

* Circulated to the Members on 25th April 1962.